# இளமையின் எழில் ததும்பும் வதனம்
# பூவிலும் மென்மையான சருமம் பெறுங்கள்!

**...அதற்கு உங்கள் சருமத்தின் இயற்கையான ஈரத் தன்மை மாறுமல் பாதுகாப்பது அவசியம்**




பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீமிலுள்ள பிரத்தியேகக் கலவை 'ஹ்யுமெக்டன்ட்' சருமத்தின் இயற்கையான ஈரத்தை உலராமல் காக்கிறது. இதனுல் பருவகால மாறுதல்களாலோ, தூசு முதலியவற்றுலோ, சருமம் வறட்சியடையாமல் மிருதுவாக இருக்கிறது. துல்லிய வெண்பனி போன்ற பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உங்கள் வதனத்திற்கு இளமை எழிலையும், மென்மை சோபையையும் அளிக்கும்.

பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீமைத் தனியாகப் பூசிக் கொண்டாலே உங்கள் முகம் பொலிவுடன் விளங்கும். அல்லது முகத்தில் முதலில் பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீமைத் தடவி அதன் மேல் பவுடர் போட்டுக் கொண்டால் பவுடர் ஒரே சீராகப் படிந்து முகம் மாசு மறுவில்லாமல் திகழும்!

**பாண்ட்ஸ்** வானிஷிங் க்ரீம்—உலகத்து அழகிகளின் வதனத்தில் மிளிர்வது

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடெட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு. எஸ். ஏ. யில் இணைக்கப்பட்டது)

P. 6990

# பொருளடக்கம்

லேக ஆடி 20 — ஆகஸ்டு 4



கல்கியில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

கல்கி ஆண்டு மலர்

பட விளக்கம் 8ம் பக்கம்



சிங்காசனாதிபர்களாய்
என்றைக்கும் அழியாத சிவராஜ யோகமாய்
இந்த்ராதி தேவர்களெலாம்
விஜய ஜயஜய வென்ன வாசி சொலவே கொலு
இருக்கு நும் பெருமை எளிதோ? —தாயுமானவர்



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா --- பாரதியார்



மலர் 28 ★ இதழ் 1

# பிரார்த்தனை செய்வோம்!

அற்புதமான அறிவுபெற்ற மனிதன், அந்த அறிவின் சக்தியால் கண்ட சாதனங்களைக் கொண்டு நிலத்திலும், நீரிலும் வானிலுமுள்ள மிருக பட்சிகளுக்கும் மற்ற ஜீவராசிகள் அனைத்துக்கும் மேலாகத் தன்னை நிலைப்படுத்திக் கொண்டு விட்டான் — இவ்வாறு ஜீவப் பரிணாமவாதிகள் சொல்கிறார்கள். இரு கால் படைத்த ஜீவராசியான மனிதன் புவிக்கும் கடலுக்கும் பிரபுத்துவம் பெற்றுவிட்டான் என்பதற்கு ஐயமில்லை. மனித இனம் ஒத்துழைத்துக் கூடிப் பணி புரிந்து பெற்ற பலத்தாலேயே இந்த ஆதிக்கம் கிட்டியுள்ளது.

ஆனால் கடைசியில் மனித அறிவு தன் எல்லையை மீறிவிட்டது. அதனால் அவனையே ஒரு பிராணபயத்தில் சிக்க வைத்திருக்கிறது. மனித இனத்தின் நாகரிகமடைந்த கோடானு கோடி மக்களிடையே போட்டிகளும், துவேஷங்களும் தோன்றி, உலக நாடுகள் ஒவ்வொன்றும் பிறவற்றுக்கு எதிராக ஆயுத பலத்தை நாடியுள்ளன. இந்த ஆயுத உற்பத்தியில் நாடுகளிடையே போட்டியும் வளர்ந்துள்ளது. இது காரணமாக ஒவ்வொரு நாட்டின் வளமும் வீணாகித் தற்கொலைக்கு ஒப்பான திசையில் அவை செல்கின்றன. மனித சமுதாயத்தின் வளர்ச்சியையும் மகிழ்ச்சியையும் இப்போக்கு தடுக்கிறது.

நம் கண்ணுக்குத் தெரியாமல் இப்பிரபஞ்சத்தின் சிற்பி ஒருவன் இருக்கிறான். அவன் தேசங்களிடையே நடைபெறும் நாசக் கருவிப் போட்டியை விட்டுவிடும் விவேகத்தையும் தீரத்தையும் மனித குலத்துக்கு அளிப்பானா என்பது கேள்வி. ஒத்துழைக்க வேண்டியவர்கள் அப்படிச் செய்யாமல் பரஸ்பரம் பயமும் அவநம்பிக்கையும் கொண்டிருப்பதாலேயே ஆயுதப் போட்டியில் இறங்கியுள்ளனர்.

துரதிர்ஷ்டவசமான அணு ஆயுதக் கண்டுபிடிப்புக்கு முற்பட்ட நிலைமையை நாம் மீண்டும் அடைய வேண்டும். ஆன்மநாச ஆயுதங்களாகிய அணுக் கருவிகளைக் குவித்து வைத்துள்ள வல்லரசுகள் அவற்றையெல்லாம் அழித்துவிடுமாறு செய்ய வேண்டும். அணு ஆயுதம் பெற்றுள்ள ஒவ்வொரு வல்லரசுமே தற்காப்பைத்தான் விரும்புகிறது. அணு ஆயுதங்களிலிருந்து விடுபடவே அவை விரும்புகின்றன. ஆனால் அவற்றிடையே பரஸ்பர அச்சம் நிலவுகிறது. இது காரணமாக அவை விரும்பிய போதிலும், அவற்றால் ஆயுத பரிகரணம் செய்ய இயலவில்லை.

அணு ஆயுதங்களை ஒழிக்க ஓர் ஒப்பந்தம் செய்து கொள்ள வேண்டும். ஆனால் ஒப்பந்தம் பிறழாமல் கடைப்பிடிக்கப்படுமா என்ற கேள்வியும் எழுகிறது. நாடுகளிடையே நம்பிக்கை மறைந்து விட்டதால் ஒப்பந்தங்களும் சக்தி இழந்துவிட்டன. ஒருவரை நம்புகிற கலையை நாம் மீண்டும் கற்பது எப்படி? இவ்வாறு நம்பி, ஒப்பந்தங்களைச் சார்ந்து நின்று, மனித குலத்தின் எதிர்கால வாழ்வுக்கு ஜீவாம்சமான ஆயுத பரிகரணத்தில் ஆழ்ந்து ஈடுபட வேண்டும்.

அந்தரங்கசுத்தமான பிரார்த்தனையில் நான் மேன்மேலும் நம்பிக்கை பெற்று வருகிறேன். மனிதர்களுக்கிடையே தங்களது வாக்கிலும் பிரதிக்ஞையிலும் பரஸ்பர நம்பிக்கை உண்டாக வேண்டும் என்று உலகெங்கிலுமுள்ள மக்கள் யாவரும் பரம்பொருளிடம் பிரார்த்தனை புரிய வேண்டும். இன்றைய நெருக்கடியில் சம்பந்தப்பட்டுள்ள தேசங்களில் பெரும்பாலானவை கிறிஸ்துவின் உபதேசத்தை ஏற்றவையாகும். கிறிஸ்துவிடம் தமக்குள்ள நம்பிக்கையை வலியுறுத்துமுகமாக

இந்த நாடுகளில் பெரிய பெரிய தேவாலயங்கள் உள்ளன. ருஷிய சர்க்கார் கிறிஸ்துவை விட்டிருக்கலாமாயினும், அந்த விஸ்தாரமான நாட்டு மக்களில் பெரும்பாலோர் இன்னமும் கிறிஸ்து மத நம்பிக்கையை இழக்கவில்லை. 'கிறிஸ்து வேண்டாம்' என்று விட்டு விட்டால் என்ன நடக்கும் என்பதை நிச்சயமாகச் சொல்ல முடியும். கிறிஸ்து போனால், பரஸ்பர நம்பிக்கையும் போய் விடும். கன்ஃபூஷியஸ், முகமது நபி, புத்தர், ராமன், கிருஷ்ணர் இவர்களில் யாரை விலக்கினாலுமே மனித குலத்தின் பரஸ்பர நம்பிக்கையை விலக்கியதாகும். மக்கட்குலம் தொடர்ந்து உயிர் வாழ வேண்டுமாயின் அதன் நடத்தையைப் பரஸ்பர நம்பிக்கையே உருவாக்க வேண்டும். சுயநாசத்திலிருந்து நம்மைக் காத்துக்கொள்ள வேண்டுமாயின், அல்லது நாசத்தைவிட நீசமான பயப் பிராந்தியில் வாழ்வதைத் தவிர்க்க வேண்டுமாயின், கிறிஸ்து முதலிய தெய்வ தூதர்களை, பக்திக்குரிய ஆசாரியர்களை ஒன்றுகூட்டி நமது தெய்விகத் தலைவர்களாகக் கொள்ள வேண்டும். அவர்களே அரசு புரிவது போல் அவர்களது உபதேசங்களைப் பற்றி ஒழுகவேண்டும்.

'அணு ஆயுத ஒழிப்பு மட்டும் போதுமா? எல்லா ஆயுதங்களையும் ஒழித்து, போர் என்பதையே ஒழித்து, உலகுக்கு ஒரு பொதுச் சட்டத்தை ஏற்படுத்தி, உலக அரசாங்கம் ஒன்றை உருவாக்கினால்தான் பிரச்னை தீரும்' என்று சிலர் சொல்வர். வாஸ்தவம். அவர்கள் சொல்பவை யாவும் நடக்கத்தான் வேண்டும். ஆனால் அதற்காகத் தற்போதைக்கு முதலடியாக நடைபெறக்கூடிய அணு ஆயுத ஒழிப்பின் அவசியத்தை மறுக்கக் கூடாது. நல்லதொரு காரியம் நடக்கவேண்டும். அதைவிட நல்ல காரியத்தை இப்போது செய்ய முடியவில்லை என்பதால் இப்போது நடைபெறக்கூடிய நல்லதை நிறுத்த வேண்டாம். நல்லதற்கு அதைவிட நல்லது விரோதியல்ல; எனவே நடக்கக்கூடிய நல்லதை முதலில் செய்வோம். அதைவிட நல்லதை எதிர்பார்த்து இப்போது அணு ஆயுத பரிகரணத்தைத் தள்ளிப் போடுவது அறிவுடைமையாகாது. இப்போதே நிரம்பக் காலஹரணம் செய்து விட்டோம். அருகில் வந்துவிட்ட பெரிய மிருகத்தை முதலில் எதிர்கொள்வோம்.

நல்ல முடிவுக்கு அநுகூலமாகச் சம்பவங்கள் உருவாகி வருகின்றன எனலாம். ருஷியா அமெரிக்கா ஆகிய இரு வல்லரசுகளின் போக்கும் பெருநம்பிக்கையை எழுப்பியுள்ளது. அணு ஆயுதங்களைப் புதிதாக மற்ற நாடுகளுக்கு விஸ்தரிக்கக்கூடாது என்று இவ்விரு வல்லரசுகளும் கூட்டாகத் திட்டம் வெளியிட்டது ஒரு நல்ல தொடக்கம். இதைத் தொடர்ந்து, ஒரு புது சகாப்தத்தைக் கோடி காட்டும் தெளிவான, நம்பிக்கையூட்டுகிற அறிக்கைகள் வெளியாகியுள்ளன. இவை அணுஆயுத பரிகரணத்தில் முன்னேற்றத்துக்கான திசையைக் காட்டுகின்றன. மனித குலத்தின் தலைவிதி யாரைச் சார்ந்துள்ளதோ அப்படிப்பட்ட மகத்தான அதிகார ஸ்தானத்திலிருப்பவர்களின் அறிவில் ஆண்டவன் விவேகத்தைப் புகுத்த வேண்டும் என்று நன்மக்கள் பிரார்த்திப்பராக!

வாதப் பிரதிவாதத்தால் நம்பிக்கையை வளர்க்க முடியாது. பயப்படுவதற்கும் அவநம்பிக்கை கொள்வதற்கும்தான் வாதத்தால் காரணம் கற்பிக்க முடியும். தீரமே நம்பிக்கையை வளர்க்கும். இந்தத் தீரம் ஆண்டவனிடமிருந்துதான் வர வேண்டும். இதற்காகவே நல்லவர்கள் பிரார்த்தனை செய்ய வேண்டும்.

**('ஸ்வராஜ்யா'வில் ராஜாஜி எழுதியது.)**

---

## காமகோடியின் கருணைமொழி



ஸயன்ஸ் முறைப்படி, தொடர்புடைய ஜலம் ஒரே மட்டமாவதற்கே முயலும். **Water finds its level** என்பார்கள். ஓர் ஆற்றின் உற்பத்தி ஸ்தானம் எத்தனையோ ஆயிரம் அடிகளுக்குமேல் இருக்கிறது. அங்கே உற்பத்தியாகிற ஆறு கனவேகமாக, மிகுந்த சத்தத்தோடு இறங்கி வருகிறது. தன் மட்டத்தைக் காண்கிறவரைக்கும் 'தாட்பூட்' சத்தம். பிறகு அடங்குகிறது. சமுத்திர மட்டத்தை—லெவலை—கண்டுவிட்டபின் பூரணமாக அடங்கிச் சாந்தமாகி விடுகிறது.

இந்த 'லெவல்' எல்லாவற்றிலும் உண்டு. சாந்தம் வரவேண்டுமென்றால் மனிதன் இந்த லெவலுக்கு வரவேண்டும். லெவலுக்கு மீறி இருந்து விட்டால் சாந்தம் இல்லை; சத்தந்தான்; 'தாட்பூட்' என்று இரைச்சல்தான்.

சமுத்திர தீர்த்தமே மேகமாகி, மேகம் நதியாகி, நதி தன் லெவலுக்கு வந்தபின் சமுத்திரமாகவே மாறி அடங்கிப் போவதுபோல், பரமாத்ம ஸ்வரூபத்தில் தோன்றிய ஜீவாத்மாக்கள் அதிலேயே ஐக்கியமாகிச் சாந்தமடைகின்றன.




நமது ஆட்சியின் 'மதச் சார்பின்மை'யை எடுத்துக் காட்டுவதற்காகச் சர்க்கார் காரியாலயங்களில் மாட்டப்பட்டிருந்த எல்லாப் புனிதப் படங்களையும் அகற்றுவது அவசியம் என்று தமிழக முதன்மந்திரி எண்ணியது பரிதாபம். இதுபோன்ற சமிக்ஞைகள் ஒன்றையும் சாதித்துவிடுவதில்லை. ஹிந்து அல்லாதார் இவ்வாறு நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று கேட்கவில்லை. முதன்மந்திரி புனராலோசனை செய்து விஷயங்கள் இதுவரை உள்ளது போலவே நீடிக்க விடுவார் என்றும், இத்தனை ஆண்டுகளாக இருந்த படங்கள் அங்கேயே இனியும் இருக்கச் செய்வார் என்றும் நம்புவோமாக. எத்தனையோ இனங்களில் போராடவேண்டியிருக்கும்போது, சமய விஷயங்களில் பிரவேசிப்பது விவேகமல்ல. 'மதச் சார்பின்மை' என்ற வார்த்தையால் எல்லா மதத்தினருக்கும் சமநீதி வாக்களிக்கப்பட்டதே அன்றி, இந்தியாவில் ஆண்டவனை எந்த உருவத்தில் வழிபடுவதும் தடை செய்யப்படவில்லை.

நாற்பதாண்டுகளுக்கு முன்பு ஆட்சியதிகாரம் பெற்ற ஜஸ்டிஸ் கட்சிக்குப் பகுத்தறிவில் இருந்த பற்று இன்றைய தமிழக அரசாங்கத்தின் பகுத்தறிவுப் பற்றுக்குக் குறைந்ததல்ல. எனினும் அந்தச் சர்க்கார் ஜஸ்டிஸ் சதாசிவ அய்யரின் அறிவு சார்ந்த ஆலோசனையின் கீழ் எல்லா ஆலயங்களையும் அவற்றின் ஊர்வலம், வழிபாடு முதலியவற்றையும் மேற்பார்க்கும் பொறுப்பை எடுத்துக் கொண்டது.

ஃஃஃ

ஒரு நாட்டின் பாதுகாப்புக்காக ஏற்பட்ட ராணுவத்தால் அந்த நாட்டுக்கே அபாயம் விளையக்கூடும். கத்தியின் இருபுறமும் கூராக இருந்தால் அதைப் பிடிப்பவன் கையும் வெட்டுண்டு போகும். ஜனநாயகங்களில் ராணுவம் இப்படிப்பட்ட இருபுறமும் கூரான ஆயுதமாகி விடுவதுண்டு. இதனால்தான் ராணுவ ஆட்சி ஏற்படுகிறது. கடைசியாக இராக்கில் ராணுவ ஆட்சி ஏற்பட்டுள்ளது. நல்ல நோக்கத்தோடு, திறமையான ஆட்சி ஏற்படுவதற்காகத்தான் எல்லா ராணுவப் புரட்சிகளுமே நடக்கின்றன என்று எண்ணி விட வேண்டாம். திறமையற்ற ஆட்சி ராணுவப் புரட்சிக்கு வழி விடுவது உண்மையே. என்றாலும் நல்ல நிர்வாகத்தை நோக்கமாகக் கொண்ட ராணுவத் தலைவர்கள்தான் எப்போதுமே புரட்சி செய்து ஆட்சியைக் கைப்பற்றுகின்றனர் என்று கொள்ள முடியாது.

இந்தியாவில் ராணுவ ஆட்சி ஏற்படுமா என்று கேட்கிறவர்களிடம் அது சாத்தியமில்லை என்று நான் பலமுறை கூறியிருக்கிறேன். காரணம் நம் ராணுவம் பலவகைப் பட்டவர்களின் கூட்டுத் தொகை என்பதே. வகுப்பு, பிரதேசம் இவற்றின் அடிப்படையில் நானாதரப்பட்ட கோஷ்டிகள் கொண்டது நம் ராணுவம். ஒரு கூட்டத்தைத் தப்பு வழியில் அழைத்துச் செல்வதாயினும்கூட அதிலுள்ளவர்களையெல்லாம் ஒன்றுபடுத்தினால்தான் முடியும். நம் ராணுவத்தை இவ்வாறு புரட்சி என்ற தப்பான வழியில் அழைத்துச் செல்வதற்கு இயலாதபடி, அவர்கள் பூரணமாக ஒன்றுபட முடியாத பல பிரிவினராக உள்ளனர்.

வகுப்புப் படியும், 'பிரதேச' ரீதியிலும் அமைக்கப்பட்டுள்ள ராணுவப் பிரிவுகளுக்குப் பதிலாக வேறுவிதத்தில் ராணுவ அமைப்பை ஏற்படுத்தலாமா என்று கேள்வி எழும். இந்தப் பிரிவே ஜனநாயகத்துக்கு ஒரு காப்பாக இருப்பதால் இதனை மாற்றுவது விவேகமாகத் தோன்றவில்லை. சக்தி வாய்ந்த ராணுவம் இல்லாததே பிரிட்டிஷ் ஆட்சியின் நீண்டகாலக் காப்பாக இருந்தது. அந்நிய ஆக்கிரமிப்பு என்று ஏற்பட்டுவிட்டால் அதை எதிர்த்து வகுப்பு அடிப்படையிலும், பிரதேச ரீதியிலும் அமைந்த ராணுவப் பிரிவுகள் வெகு திறம்படப் போர் புரிகின்றன என்பதை நிதரிசனமாகப் பார்த்திருக்கிறோம். தீரத்திலும், தெம்பிலும், பராக்கிரமத்திலும் போட்டி போட்டுக் கொண்டு பல பிரிவுகள்



இந்த இடைஞ்சலான துவஜ வாசகத்தை விட்டு விடத் தருணம் வந்துவிட்டது!




இயங்கும்போது அவற்றின் ஆற்றல் மேலும் தூண்டப்படுகிறது.

வகுப்பு, பிரதேசம் ஆகிய அடிப்படையில் ஜவான்களைப் பகுப்பதில் நிர்வாக அநுகூலங்களும் உண்டு. எல்லாத் துறைகளிலும் 'ஒருமைப்பாடு' என்ற கொள்கையை நடத்தத்தான் வேண்டும் என்று சொல்லு மளவுக்கு, நாம் ஒருமைப்பாட்டு ஆவேசம் பெற வேண்டியதில்லை. ஒன்றுபடுத்துவதும், பிரிவினைகளை நீக்குவதும் நல்லதுதான். ஆயினும் எல்லா விஷயங்களுக்கும் இது பொருந்தாது. பெரிய ஜனநாயகங்களில் பெரிய ராணுவத்தை வைத்துக் கொள்ள வேண்டியுள்ளது. ஆயினும் இதற்கு இருபுறமும் கூராக இருப்பதால் ஜாக்கிரதையுடனேயே பிரயோகிக்க வேண்டும். ராணுவ விஷயத்தில் கொள்கை ஆவேசத்தைத் தவிர்க்க வேண்டும்.

* * *

சர்வகலாசாலைகளில் பிரதேச மொழிகளைப் போதனை மொழியாக்க வேண்டும் என்ற எண்ணம் எழுந்துள்ளது. தேசத்துக்குப் பணி புரிவதற்காக மேன்மக்களைப் படைத்துத் தருகிற சர்வகலாசாலைகள் — இந்திய தேசத்தின் நாலுவிதத் தொழில்களுக்கும், சர்க்கார் காரியாலயங்களுக்கும் தேவைப்படுகிறவர்களை அளித்துவரும் சர்வகலாசாலைகள் பதினைந்து தீவுகளாகத் தனித் தனியே பிரிந்து போகலாமா? மொழிவாரி மாகாணப் பிரிவினையால் துண்டு துண்டாக் கப்பட்டுள்ள தேசத்தை ஐக்கியப்படுத்தும் இணைப்பாக இருப்பது சர்வகலாசாலைகளே. இந்த ஐக்கியப் பணியை அவை தொடர்ந்து செய்ய வேண்டாமா?

தாய்மொழி அறிவுக்கு விசேஷப் பயிற்சி தேவையில்லை. அறிஞர்களுக்கு அவசியமான ஓர் உபகரணமாகக் கருதப்படும் ஆங்கிலத்தில் ஞானம் பெறவோ பயிற்சி தேவை. தனியாக இலக்கிய இலக்கண அடிப்படையில் மட்டுமின்றி, நடைமுறைப் பழக்கமும் சேர்ந்தால்தான் பிறமொழியில் அறிவு பெற முடியும். மொழியை ஒரு பொருளில் பயன்படுத்திக் கற்க வேண்டியது அவசியம். இதற்குச் சர்வகலாசாலையின் முக்கியமான பயிற்று மொழியாக ஆங்கிலத்தைக் கொள்வது பிரத்தியட்சமாக உதவி புரிகிறது. மாணவர்கள் ஆங்கிலம், பிரதேச மொழி இரண்டிலும் ஞானம் பெறுகிற முறையில் வகுப்புப் பரீட்சைகளும், பயிற்சிகளும் நடத்தலாம்.

உணர்ச்சியைக் கிளறும் அரசியல்வாதிகளின் கையில் இப்பிரச்னையை விடாமல், 'இது நம் பிரச்னை' என்ற உணர்வுடன் ஆசிரியர்கள் தமது தார்மிகப் பொறுப்பை ஏற்றுப் போராடலாகாதா? அரசியல்வாதிகள் தங்களது தற்கால நோக்கங்களுக்காக எதிர்காலப் பரம்பரைகளை நாசமடையச் செய்யலாகாது என்று ஆசிரியர்கள் கண்டிப்பாகக் கூற வேண்டும்.

தாய்மொழிப் போதனைக்கு அதிகப் பயிற்சி தேவையில்லை என்பதுதான் அதனைப் போதனை மொழியாக்குவதற்கு முக்கியமான காரணமாகக் காட்டப்படுகிறது. கல்வி என்பது சிக்கலான ஒரு சாஸ்திரம், நுட்பமான ஒரு கலை. அரசியல் வாதங்களால் கல்வியில் புலமை பெற முடியாது.

* * *

வானொலியில் வர்த்தக விளம்பரங்கள் செய்வதால் ஒரு கோடி ரூபாய் வருமானம் கிடைக்கும் என்று அரசாங்கம் மகிழ்ச்சி அடைந்திருக்கிறது. இது அப்படியே நிகர லாபமா என்பது கேள்வி. ஏனெனில் விளம்பரங்களுக்காகக் கம்பெனிகள் ஏற்கும் செலவில் ஒரு பகுதி வருமான வரியிலிருந்து விலக்குப் பெறுகிறது. இவ்வாறு பார்க்கும்போது வானொலி இலாகா ஒரு கோடி ரூபாய் பெறும்போதே வருமான வரி இலாகா ஒரு பெருந் தொகையை இழக்கும். (அதுவும் வானொலி விளம்பரம் செய்யும் சில கம்பெனிகள் மிக உயர்ந்த வருமான வர்க்கத்தைச் சேர்ந்திருக்கக் கூடுமாதலால், கணிசமான வருமான வரியை இழக்க நேரிடும்.)

ஓர் இலாகாவின் லாபத்தை இன்னொரு இலாகா விழுங்குகிற முறையே நல்லதல்ல. இதை 'இலாகாக்களிடையே நடைபெறும் பரஸ்பர மாமிச பட்சணம்' என்று கூறலாம். இதற்குப் பரிகாரம் எல்லாமந்திரி இலாகாக்களின் காரியங்களையும் இணைத்துப் பார்த்து முடிவெடுக்க ஒரு பிரதம காரியதரிசி நியமிக்கப்படுவதே. மத்திய சர்க்காரில் இப்படியோர் அதிகாரி நியமிக்கப்பட வேண்டியது அவசியத் தேவையாகும். நிதி என்ற ஒரு கோணத்தை மட்டும் பாராமல் நிருவாகத்தின் சகல அம்சங்களின் மீதும் முடிவெடுப்பது இவ்வதிகாரியின் பொறுப்பாக இருக்க வேண்டும்.

# அன்பார்ந்த நேயர்களுக்கு

சரித்திர புருஷர் எழுதிய சரித்திரக் கதையை, மாமேதை படைத்த மகோன்னதமான நாவலை, அமரர் கல்கி படைத்த அழியா இலக்கியமான பொன்னியின் செல்வனை இரண்டாவது முறையாகக் கல்கியில் தொடர்ந்து பிரசுரிப்பதில் பெருமிதமும் பெருமகிழ்ச்சியும் அடைகிறேன். என்ன என்ன காரணங்களை முன்னிட்டு நான் இந்த முடிவுக்கு வந்தேனோ அந்தக் காரணங்களையெல்லாம் குறிப்பிட்டும் அதற்கு மேலும் மிகப் பொருத்தமான காரணங்களைக் காட்டியும், பொன்னியின் செல்வனை வரவேற்று நூற்றுக் கணக்கான கல்கி வாசகர்கள் கடிதம் எழுதியுள்ளார்கள். அவர்களுக்கெல்லாம் எனது உளமார்ந்த நன்றி.

கடிதம் எழுதிய அன்பர்களில் நூற்றுக்குத் தொண்ணூறு பேர் அமரர் கல்கியை நினைத்த மாத்திரத்தில் ஓவியக் கலைஞர் மணியத்தையும் எண்ணிப் பார்த்திருக்கிறார்கள். கல்கியின் கதையோடு மணியத்தின் படங்களையும் பிரசுரியுங்கள் என்றும் கேட்டு எழுதியுள்ளார்கள்.

கல்கியின் வளர்ச்சியோடு வளம் பெற்றது மணியத்தின் கைவண்ணம். ஆசிரியர் கல்கியிடம் பண்பட்டு மிளிர்ந்த கலை அது. ஓவியர் பள்ளியில் பயிற்சியைப் பாதியில் விட்டு விட்டு கல்கி பத்திரிகையில் சேர்ந்து பணியாற்றினார் மணியம். பள்ளியில் கிடைக்க முடியாத வாய்ப்புக்கள் அவருக்கு இந்த ஸ்தாபனத்தில் கிடைத்தன. ஆசிரியர் கல்கியின் கலை உள்ளம் மணியத்தைக் கலைப் பித்தராக்கியது; பக்தராக்கியது. கல்கி சென்ற இடங்களுக்கெல்லாம் மணியம் உடன் சென்றார். கல்கியோ தமது சரித்திரக் கதாநாயகர்கள் போன இடங்களுக்கெல்லாம் சென்றார். அஜந்தா, எல்லோரா, பாதாமி, ஹம்பி, அநுராதபுரம், பொலன்னருவா, சித்தன்னவாசல், பழையாறை, தஞ்சை என்று எத்தனை எத்தனையோ கலைச் சிறப்பு மிக்க இடங்களைக் கண்டு சிற்ப சித்திர விசித்திரங்களை அனுபவித்து, தொன்மையான இந்திய நாகரிகத்தில் கல்கியோடு தாமும் ஊறித் திளைத்து உருவானார் மணியம்.

பொன்னியின் செல்வன் இன்று மறுமுறையும் தொடர்ந்து பிரசுரமாக இருக்கும் சமயத்தில் ஓவியர் மணியம் தாமே அதற்கு மீண்டும் சித்திரங்கள் வரைய வேண்டும் என்று ஆசைப்படாமல் இருக்க முடியுமா? ஆனால் அந்த ஆசையை நிறைவேற்ற இன்று மணியத்துக்கு உடல் ஆரோக்கியம் இல்லை. இந்த நிலையில் பொன்னியின் செல்வனுக்கு மீண்டும் அவரைச் சித்திரங்கள் வரையச் சொல்ல எனக்கு வாய் வரவில்லை. மணியம் முன்பு பொன்னியின் செல்வனுக்குப் போட்ட படங்களெல்லாம் தற்போது கைவசம் இல்லை.

ஆகவே நமது ஓவியர் வினுவைப் பொன்னியின் செல்வனுக்கு இந்த முறை சித்திரம் தீட்டுமாறு கேட்டுக் கொண்டேன். அவரும் மகிழ்ச்சியுடன் சம்மதித்தார். ஓவியர் வினு கல்கி அவர்களின் நாவலுக்குச் சித்திரம் வரையத் தமக்கு வாய்ப்புக் கிட்டியதைப் பெரும் பேறாகக் கருதுகிறார். கண்ணும் கருத்துமாய்த் தமது பணியை நிறைவேற்றுவார் என்பதற்கு இந்த இதழில் இடம் பெற்றுள்ள வண்ண ஓவியங்கள் சான்று பகர்கின்றன.

இந்தச் சந்தர்ப்பத்தில் நோயுற்றிருக்கும் மணியம் அவர்களுக்கு ஒரு நிதி திரட்டிக் கொடுக்க நான் எண்ணியுள்ளேன். மணியத்தினிடமும் அவரது கலையினிடமும் அன்பும் மதிப்பும் கொண்ட ஆயிரமாயிரம் கல்கி வாசகர்கள் இருப்பதை அறிவேன். அவர்களில் பலரும் உதவிசெய்ய ஆசைப்படலாம். அவ்விதம் உதவி செய்ய விரும்புவோர், ''ஓவியர் மணியம் நிதி'' என்று குறிப்பிட்டு, ''மானேஜர், கல்கி காரியாலயம், சென்னை–10'' என்ற விலாசத்துக்கு இந்த வருஷம் டிசம்பர் மாத இறுதிக்குள் தங்களால் இயன்ற தொகையை அனுப்பி



வைக்க வேண்டுகிறேன். அவர்களது பெயர்கள் கல்கியில் பிரசுரமாகும்.

கல்கி காரியாலயத்திலிருந்து ''ஒவியர் மணியம் நிதி''க்கு ரூ. 5000 கொடுப்பதாக முடிவு செய்திருக்கிறேன் என்பதையும் நேயர்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஃ ஃ ஃ

''தமிழ் எழுத்தாளர்கள் என்ன பிரமாதமாக எழுதி விடுகிறார்கள்? அரைத்த மாவையே அரைக்கிற கதைதான்'' என்று இன்றைக்கும்கூடக் கண்மூடித்தனமாகச் சிலர் பேசுகிறார்கள். தமிழ் எழுத்தாளர்கள் அப்படி ஒன்றும் பின்தங்கிவிடவில்லை. புதுமையான முயற்சிகளில் அவர்கள் ஈடுபடுகிறார்கள், புதுப் புது உத்திகளைக் கையாளத்தான் செய்கிறார்கள் என்பதை வலியுறுத்துகிறது எழுத்தில் புதுமை என்ற அம்சம். வெறும் புத்தக விமர்சனமாக மட்டுமின்றி நூலாசிரியரையும் பேட்டி கண்டு எழுதப்படும் 'எழுத்தில் புதுமை' என்ற இந்த அம்சமே ஒரு புதுமையான முயற்சிதானே?

ஃ ஃ ஃ

பிரச்னை என்று இல்லாத குடும்பம் உலகில் ஏது? குழந்தைப் பராமரிப்பு, பொருளாதாரச் சிக்கல், கணவன் — மனைவியிடையே மனவேற்றுமை என்று இப்படிப் பல ரகப் பிரச்னைகளை ஒவ்வொரு குடும்பமும் சமாளிக்க வேண்டியிருக்கிறது. இத்தகைய குடும்பப் பிரச்னைகள் பலவற்றைச் சுவாரஸ்யமான விதத்தில் அணுகித் தீர்த்து வைக்கிறது குடும்பப் பிரச்னை என்ற பகுதி.

ஃ ஃ ஃ

தமிழ் சினிமாவைப் பற்றிக் குறை கூறாதவர்களே கிடையாது. சினிமாத் துறையில் ஈடுபட்டவர்களும் சரி, வெளியே இருப்பவர்களும் சரி, குற்றம் குறைகளை எடுத்துச் சொல்லுகிறார்கள். கண்டித்து விமர்சனம் செய்கிறார்கள். ஆனால் இந்தக் குற்றங்களுக்குப் பதில் சொல்லத் திரைப் படத் துறையில் உள்ளோருக்கு அதிகமான வாய்ப்புக் கிட்டிவிடுவதில்லை. அந்த வாய்ப்பை 'சினிமா சிந்தனை' என்ற பகுதி மூலம் ஏற்படுத்தித் தருகிறோம். இத்துறையில் உள்ள பல குறைகளைத் திரைப்படத் தொழிலில் ஈடுபட்டிருப்போரே நன்கு உணர்ந்திருக்கிறார்கள். அப்படி இருந்தும் தெரிந்து தவறு செய்வது ஏன்? 'சினிமா சிந்தனை' இதற்கு விளக்கம் தருகிறது. குற்றச்சாட்டுக்களையும் அதற்குத் திரைப்படத் துறைப் பிரமுகர்கள் கூறும் பதில்களையும் பிரசுரித்த பிறகு இந்தக் கட்டுரைத்தொகுப்பை திரு பி.எஸ்.ராமையா அவர்களிடம் தரப் போகிறேன். நடுவராக இருந்து அவர் இக்கட்டுரைகளை ஆராய்ந்து தமது தீர்ப்பை ஒரு கட்டுரை வடிவில் கொடுப்பார். இது கல்கியில் பிரசுரமாகும். திரு பி. எஸ். ராமையா சிறந்த எழுத்தாளர் என்பதோடு, கலை உள்ளம் படைத்தவர்; நாடக மேடையிலும் திரை உலகிலும் நிரம்ப அனுபவம் உள்ளவர். அவர் ஆராய்ந்து காணும் முடிவுகள் திரைப் படத் துறையினருக்கு ஆக்க ரீதியில் உதவுவது மட்டுமின்றி சினிமா ரசிகர்களுடைய கலை உணர்வின் தரம் உயரவும் உதவும் என நம்புகிறேன்.

ஃ ஃ ஃ

மகரிஷியின் ''துயரங்கள் உறங்குவதில்லை'' என்ற குறுநாவல் இந்த மலரில் இடம் பெறுகிறது. வார்த்தை ஜாலங்கள் ஏதும் செய்யாமலே உள்ளத்தைத் தொடும் விதத்தில் அருமையாக எழுதுபவர் மகரிஷி. ''துயரங்கள் உறங்குவதில்லை'' இதயத்தைத் தொடுவது மட்டுமில்லை, உலுக்கியே விடுகிறது. அப்போது உதிர்வன பரிசுத்தமான கண்ணீர் முத்துக்களாய் இருப்பதைக் காண்போம்.

ஃ ஃ ஃ

வாண்டு மாமா தயாரித்துள்ள குழந்தைகளுக்கான வண்ண மடலை இந்த இதழிலிருந்து தொடர்ந்து கல்கியில் எதிர்பார்க்கலாம். இன்னும் வாரம் ஒரு சிறப்புச் சிறுகதையும் அதையொட்டி கல்லூரி மாணவர்களுக்கான பரிசுத் திட்டமும் உண்டு.

இவை எல்லாவற்றுக்கும் மேலாக ராஜாஜி அவர்களின் ''ஹனுமான் சிரித்தான்'' என்ற அருமையான சிறுகதையை இந்த ஆண்டு மலரில் இப்பத்திரிகையின் வளர்ச்சிக்கு அவர் அளித்த ஆசியாகவே எண்ணிப் பிரசுரித்திருக்கிறேன்.

முகப்புப் படத்தில் காட்சி தரும் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகள் ஜகத்குரு ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளை வணங்கி இருபத்தெட்டாவது ஆண்டில் அடியெடுத்து வைக்கும் கல்கி இருபது எட்டாண்டுகளைக் காண அருளுமாறு பிரார்த்திக்கிறேன்.

சதாசிவம்

**உயிரோவியம் :**

''ரூ மந்திரக்காளி! உங்க ரெண்டு பேரோடேயும் விளையாட இரண்டு பையன்களை வரவழைச்சுட்டேன் பாரு!''

பொருளடக்கப் பக்கத்தில் இடம் பெறப் படம் எடுத்து அனுப்பியவர்: **எம். நடராஜன்**

# அவ்வை மறைந்தார்!

பயனுள்ள வாழ்க்கை வாழ்ந்து முடித்து விட்டு இறைவனடி சேர்ந்து விட்டார் ஸ்ரீமதி முத்துலக்ஷ்மி ரெட்டி அவர்கள். பிராயம் முதிர்ந்த பருவத்தில் மறைந்த அவர், இருந்த நாள் எல்லாம் சமூக சேவையிலேயே கழித்து மக்கள் உள்ளங்களில் நிரந்தரமான மதிப்பையும் மரியாதையையும் சம்பாதித்துக் கொண்டு விட்டார்.

பெண்களை வீட்டில் அடைத்துப் பூட்டிவைப் பதே மரபாக இருந்த நாட்களில், கல் லூரிக்குச் சென்று வைத்தியப் படிப்புப் படித்து முன்னணிக்கு வந்தார். இங்கிலாந் துக்கும் சென்று வைத்தியப் பயிற்சி பெற்றார். வைத்தியத் துறையில் பணியாற்றியதுடன், அன்னிபெஸன்ட் அம்மையாருடன் சேர்ந்து அரசியலிலும் பணியாற்றினார். அரசியலை விடச் சமூக சேவையையே அவர் தமது உள்ளத்துக்குகந்த பணியாக உணரலானார். பலப்பல மாதர் நலத் திட்டங்களில் எல்லாம் உற்சாகமாக முன் நின்று பங்கு பற்றினார்.

1917-ல் அவர் மான்டேகு — செம்ஸ் போர்ட் கமிஷனிடம் வெகு விரிவாகப் பெண்கள் உரிமையை எடுத்துச் சொன்னதே பெண்கள் வாக்குரிமை பெற ஒரு முக்கிய காரணமாக அமைந்தது.

ஒழுக்கக் குறைவான ஒரு வாழ்முறைக் கென்றே பெண்களில் ஒரு பிரிவினரை ஈடு படுத்தி வந்த 'தேவதாஸி' வழக்கத்தைக் கண்டு மனம் கசிந்தவர், மனம் கொதித்தவர் ஸ்ரீமதி ரெட்டி அவர்கள். சட்டபூர்வமாக இவ்வழக்கத்தை நீக்குவதில் அவர் கண்ட வெற்றி மகத்தானது.

முதன் முதலில் டாக்டர் பட்டம் பெற்ற பெண்மணி, முதன்முதலில் நகரசபை ஆல்டர்மன் பதவி வகித்த பெண்மணி, முதன் முதலில் சட்டசபையாளரான பெண்மணி — என்றிப்படிப் பல இனங்களில் முன்னோடியாக இருந்த ஸ்ரீமதி ரெட்டி மேல் சபையின் துணைத் தலைவர் பதவி பெறுவதி லும் முதல் நாரீமணியானார். அப்பதவியைப் பெற்ற பெருமையைவிட அதனை அவர் துறந்த பெருமை விசேஷமானது. காந்தி அடிகளைப் பிரிட்டிஷ் அரசு கைது செய்ததை ஆட்சேபித்துப் பதவியை உதறினார் ஸ்ரீமதி ரெட்டி.

கடைசியில், தாய் தந்தையற்று நிராதர வாக விடப்பட்ட ஏழை எளிய பெண்களுக் குப் புனர்வாழ்வு அளிக்க வழிவகுப்பதே மேலான பணி என்று அடையாற்றில் தமிழ் மூதாட்டி அவ்வையின் பெயரில் ஓர் அநாதை ஆசிரமம் தொடங்கினார். அவ்வையே மீண் டும் வந்து அபயமளிப்பதாக ஆறுதலடைந்த அபலையர் பலப் பலர். அப்பணி நாட்டிலுள்ள பல பெரியோர்களின் நல்வாழ்த்துக்களையும் நல்லாசிகளையும் பெற்றுச் சிறப்பாக நடந்து வந்திருக்கிறது. இன்றும் அவருக்கு நினைவுச் சின்னமாக விளங்குகிறது.

'கான்ஸர்' எனப்படும் புற்று நோயினால் அவதியுறும் மக்களுக்காகத் தனியானதொரு வைத்தியசாலை நிறுவுவதிலும் பெரு முயற்சி எடுத்துக் கொண்டார். இந்த நோய் எக்காரணத்தால் உண்டாகிறது என்று யாராலும் திட்டவட்டமாகச் சொல்ல முடிவ தில்லை. இதனால் மக்கள் படும் அவதியோ சொல்லி முடியாது. இந்நோயினால் பாதிக்கப் படும் மக்களுக்கு அளிக்கக்கூடிய வைத்திய உதவி சிக்கல் மிகுந்ததும் செலவு அதிகம் ஆகக் கூடியதுமாகும். இந்தச் சிரமமான பணிக் கான வைத்தியசாலையைச் சென்னையில் நிறுவ அவர் எடுத்த முயற்சி கொஞ்சநஞ்சமல்ல! ஆனால் அவர் எடுத்த முயற்சி எதுவும் நிறைவு பெறாது நின்றதில்லை. அவ்வகையில், இன்று அடையாற்றிலிருக்கும் ''கான்ஸர் இன்ஸ்டிடியூட்'' அவர் பெயரை என்றும் நினைவுறுத்திக் கொண்டிருக்கும்.

புற்றுநோய் சிகித்ஸை நிலையம், அவ்வை இல்லம் ஆகியவற்றின் மூலம் மக்களின் உடல் உள்ளம் இரண்டுக்கும் மருத்துவம் செய்து வந்த அப்பெருமாட்டி முப்பதாண்டுகளுக்கு மேலாக இந்திய மாதர் சங்கத் தலைவியாக இருந்தார். அவரது சேவைக்கு மக்களின் அஞ்சலியாக 1956ல் 'பத்மபூஷண்' விரு தளிக்கப்பட்டது. இரண்டாண்டுகளுக்கு முன்பு நடைபெற்ற அவரது எண்பதாண்டு நிறைவு விழாவின் போது, மாலையும் கையுமாக நின்ற மாதர்களின் நீண்ட வரிசை அவர்பால் பெண் குலத்துக்கு இருந்த பெருமதிப்பை வெளியிட்டது.

அவரைப் பிரிந்த குடும்பத்தாருக்கும், அவரது பல்லாயிரக்கணக்கான நண்பர்களுக் கும் இன்று ஏற்பட்டுள்ள து ரத்துக்கு நமது ஆழ்ந்த அநுதாபங்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.



டாக்டர் முத்துலக்ஷ்மி ரெட்டி



# ஹனுமான் சிரித்தான்!

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

"நான் தசரதன் மகன். அதற்கு மேல் எனக்கு ஒன்றும் தெரியாது" என்று ராமசந்திரன் தேவகணங்களுக்குக் கடைசிக் கட்டத்தில் சொன்னான் அல்லவா? அது உண்மை; ராமசந்திரனுக்கு அவதார தோஷத்தினால் அவ்வப்போது ஞானம் ஓரளவு குறைவு. சீதைக்கு அப்படி இல்லை. முழு ஞானம் பெற்ற ஆத்மா.

"தேவீ! உம்மை வேதனை செய்த இந்த அரக்கிகளை இப்போது வதம் செய்வேன். உத்தரவு அளிப்பீராக!" என்று ஹனுமான் அனுமதி கேட்ட போது தேவி சொன்ன பதில்: "வேண்டாம், அப்பனே! தவறு செய்யாதவர்கள் உலகத்தில் யாரே உளர்?"

ஹனுமான் ராமசந்திரனுடைய வெற்றியைப் பற்றியும் ராவண வதத்தைப் பற்றியும் தேவிக்குச் சொன்னான். சீதை பேசவில்லை. மகிழ்ச்சி பரவசத்தினால் பேச்சு வெளிவரவில்லை என்று ஹனுமான் எண்ணி, "ராமசந்திரனுக்கு என்ன சொல்ல உத்தரவு?" என்று கேட்டான்.

"ஆரியபுத்திரனைப் பார்க்க விரும்புகிறேன், அவ்வளவே!" என்றாள்.

அப்போது சீதாதேவி ஞானக் கண்ணால் ராமசந்திரனுடைய மனோநிலையை உணர்ந்தாள். அவன் தனக்குச் சொல்லப் போகும் கடுஞ்சொல் அப்போதே தேவியின் ஞானச் செவியைத் துளைத்தது. ராமன் செய்யப் போகும் குற்றத்தை அப்போதே கண்டாள். "அவரைக் காண ஆசைப்படுகிறேன். அவ்வளவே!" என்று ஹனுமானுக்குச் சொன்னாள்.

ஹனுமானுக்கு இந்த ரகசியம் விளங்கவில்லை. திரும்பிப் போய், "தேவியைத் தரிசித்தேன். உங்களைக் காண ஆசைப்படுகிறாள்" என்று ராமனுக்குச் சொன்னான்.

"அரசனாகிய விபீஷணனுக்குச் சொல்லி சீதையைச் சகல ஆபரணங்களையும் தரிக்கச் செய்து என்னிடம் அனுப்ப உத்தரவு கேள்!" என்று ராமன் ஹனுமானை அனுப்பினான்.

"இந்த ஆடையோடே வருகிறேன். ஆபரணங்களும் புது வஸ்திரங்களும் வேண்டாம்!" என்றாள் சீதை.

வரப் போகும் நடவடிக்கைகளைக் கண்ட சீதாதேவி இப்படிச் சொன்னாள்.

"சக்கரவர்த்தித் திருமகன் உத்தரவு: அழுக்குப் பட்ட ஆடை அகற்றி மங்கள வஸ்திராபரணங்கள் பூண்டு செல்ல வேண்டும்" என்று விபீஷணன் வற்புறுத்தியபடியே செய்தாள். பல்லக்கேறிச் சென்றாள்.

ராமனைக் கண்டதும் "ஆரிய புத்திர" என்று ஒரு வார்த்தை மட்டும் அவள் வாயிலிருந்து வந்தது. ராமன் அவளை அழைத்துக் கொள்ளவில்லை.

"சத்துருவை வதம் செய்தேன்; உன்னை மீட்டேன். என் க்ஷத்திரியக் கடமையைச் செய்து முடித்தேன். என் சபதம் முடிந்தது. உனக்காக அல்ல, இந்த யுத்தத்தை நான் நடத்தியது. என் கடமையைத் தீர்க்கத்தான் செய்தேன். அபவாதப் புகை உன்னை மூடி மறைக்கிறது. இப்போது என்ன செய்யப் பிரியப்படுகிறாய்? நீ என்னை விட்டுத் தனியாகத்தான் இருக்க வேண்டும். நம்முடைய பந்துக்கள், நண்பர்கள் இவர்களில் எவருடைய பாதுகாப்பிலாவது நீ இருக்கலாம். க்ஷத்திரியனான ஒருவன், அயலான் இல்லத்தில் வெகு காலம் இருந்த தன் மனைவியை எப்படித் திரும்ப அழைத்துக் கொள்வான்? உன் யோசனை என்ன?" என்று ராமசந்திரன் சொன்னான்.

சீதையின் கண்களில் நெருப்புப் பொறி பறந்தது; "தகாத மொழிகளைப் பேசினீர், இதயத்தைப் பிளக்கும் சொற்களைக் காதால் கேட்டேன். பாமரர்கள் சொல்லக்கூடிய சொல் ஆரியபுத்திரனுடைய வாயினின்று வந்தது. அரக்கன் என்னைப் பலாத்காரமாகத் தூக்கி

வந்தான். உம்முடைய ரோஷமானது உம்முடைய விவேகத்தைக் கலைத்துவிட்டது. நாதனே! நான் எந்தக் குலத்தில் பிறந்தவள் என்பதை மறந்தீர். ஜனகராஜன் என் தகப்பனார். அவரால் வளர்க்கப்பட்டுப் பண்பட்டவள் நான். லக்ஷ்மணா, கட்டைகளைக் கொண்டு வருவாய். தீயை வளர்ப்பாய்!'' என்றாள்.

லக்ஷ்மணன் அண்ணன் ராமன் முகத்தைப் பார்த்தான். வேண்டாம் என்று அவன் சொல்லவில்லை. இருமுனைக் கொள்ளியின் மத்தியில் சிக்கிய எறும்பு போல வேதனைப்பட்டான் லக்ஷ்மணன். 'சீதையைத் தாயாகப் பாவிப்பாய், அண்ணனைத் தகப்பனைப் பாவிப்பாய்' என்று தாயார் சுமித்திரை சொல்லிக் காட்டுக்கு அனுப்பித்தாளல்லவா? சீதை உத்தரவிட்டபடி கட்டைகளைக் கொண்டு வந்து தீ மூட்டினான்.

புத்தி கூர்மை பெற்றவர்களுக்குள் சிறந்தவனை ஹனுமானுக்கு ஒன்றும் விளங்கவில்லை. குற்றமற்ற ராமசந்திரனே இப்படி நடந்து கொள்ளுகிறானே, ''அம்மை சொன்னது நிஜமாயிற்று. குற்றம் செய்யாதவர்கள் யாரே உளர் என்றாள் அல்லவா; ராமசந்திரன்கூட அதற்கு விலக்கு இல்லை'' என்று தனக்குள் சொல்லிக் கொண்டு இங்குமங்கும் நடந்து மனத்தைச் சாந்தப்படுத்திக் கொண்டான். ''ஆனால் என் வாலைச் சுடாத நெருப்பு தேவியைத் தீண்டுமா, தீண்டாது'' என்று தைரியமடைந்தான். லக்ஷ்மணன் தீமூட்டும்போது ஹனுமான் சிரித்துக் கொண்டு நின்றான். ஆஞ்சநேயன் ஏன் சிரிக்கிறான் என்பது ராமனுக்கு விளங்கவில்லை. யாருக்கும் விளங்கவில்லை. சீதையின் கோபம் பொங்கிப் பொங்கி கிளம்பிற்று.

ஹனுமான் தன் தகப்பன் வாயு பகவானைத் தியானித்தான். ''அக்கினிக்கு உதவாதே! தேவியின் புனிதம் உனக்குத் தெரியுமே!'' என்று மனத்துக்குள் இறைஞ்சினான். காற்றும் அசையாமல் நின்றது.

''தெய்வங்காள்! உங்களை வணங்குகிறேன். மகரிஷிகணங்களே! உங்களை நமஸ்கரிக்கிறேன். அக்கினியே! என் பரிசுத்தத்தை நீ அறிவாய். இதோ உனக்குள் பிரவேசிக்கிறேன்'' என்று சொல்லி விட்டுச் சீதை நெருப்பில் குதித்தாள்.

அவள் அதைச் சோதனை என்று எண்ணவில்லை. அவதாரம் முடிந்தது என்று பிராணனை அர்ப்பணம் செய்யவே குதித்தாள். ஆனால் அவளுடைய புனிதத் தன்மையை அக்கினி பொறுக்க முடியவில்லை. அணைந்துவிட்டது. தன் தேவ உடலுடன் அக்கினி பகவான் பிரசன்னமானான். சீதாதேவியை ராமசந்திரனிடம் சமர்ப்பித்தான். சீதை, ''இருக்கவேண்டிய நாட்கள் இருந்து விட்டுப் போகலாம்'' என்று சொல்லாமல் சொன்னாள்.

இந்த அனுபந்தக் கட்டத்துக்கு வால்மீகி அல்லது கம்பன் பொறுப்பு இல்லை. முற்றிலும் என் பொறுப்பு.








# மாடர்ன் ரொட்டியில் மட்டுமே லைஸின் சேர்க்கப்பட்டிருக்கிறது

தானிய மற்றும் இதர உணவுகளில் புரதச் சத்தை லைஸின் அதிகரிக்கச் செய்கிறது. குழந்தைகள் வளர்ச்சி பெறவும், ஆரோக்கியமாக இருக்கவும் உதவுகிறது. வைட்டமின் ஏ, தையாமைன், ரிபோஃப்ளாவின், நயாசின், இரும்புச்சத்து மற்றும் சத்துள்ள பால் ஆகியவற்றைச் சேர்த்து ஊட்டம் செய்யப்பட்டது. மாடர்ன் ரொட்டி

மாடர்ன் ரொட்டி அளித்து உங்கள் குடும்பத்தினர் அதிக ஆரோக்கியம் அடைய வழி செய்யுங்கள்

**மாடர்ன் ரொட்டி**
உடல் வலிமைக்கும் வளர்ச்சிக்கும் உகந்தது

# இணையற்ற மணிவிழா

'இதைப் போன்ற மணிவிழா எந்த இசைக் கலைஞருக்குமே நடந்ததில்லை' என்று சென்னை நகரமே வியக்குமாறு அதி கோலாகலமாக நடந்தேறியது — செம்மங்குடி ஸ்ரீ ஸ்ரீநிவாசய்யர் அவர்களின் மணிவிழா.

ஜூலை 23ந்தேதி சாஸ்திரோக்தமாக வைபவம் நடந்தபின் ஸ்ரீ செம்மங்குடி அவர்களின் சீடர்கள் கோஷ்டி கானம் செய்து குருவுக்குக் காணிக்கை சூட்டினர். மாலையில் ஸ்ரீமதி எம். எஸ். அவர்களின் இன்னிசையும், அதன்பின் சேங்காலிபுரம் பிரம்மஸ்ரீ அனந்தராம தீட்சிதர் அவர்களின் பிரவசனமும் நடைபெற்றன. முகூர்த்தத்துக்கும் இசைக் கச்சேரிக்கும் திருவிதாங்கூர் மன்னர் பிரசன்னமாகியிருந்தது குறிப்பிடத்தக்கது. அன்றைய தினத்தை வீட்டு விழா எனலாம். அந்த வீட்டு விழாவே நாட்டு விழாப் போல் ஆயிரமாயிரம் ரசிகர்களைக் கவர்ந்தது எனில் மறுநாள் பொதுக்கூட்டம் எவ்வளவு சிறப்பாக இருந்திருக்கும் என்று ஊகிக்கலாம்.

ஜூலை 24ந்தேதி மாலை விழாவுக்குப் பூர்வாங்கமாகச் செம்மங்குடி அவர்களின் சீடர் வி. சுப்பிரமணியம் அவர்கள் இசைவிருந்தளித்தார். திருவிதாங்கூர் மன்னருடைய காரியதரிசி ஸ்ரீ வைத்தியநாதய்யரின் புதல்வர் ஸ்ரீ சுப்பிரமணியம். பொறுப்புள்ள உத்தியோகம் வகிப்பவர். ஆனால் இந்தப் புறக் காரணங்களுக்காக இன்றி, செம்மங்குடியின் வழியை அற்புதமாகப் பின்பற்றும் உண்மைச் சீடர் என்பதனாலேயே அவர் புகழுக்குரியவர் என்பது அன்று தெளிவாயிற்று.

இதன்பின் பாராட்டு வைபவம். விழாக் குழுவைச் சேர்ந்த ஸ்ரீ கே. ஆர். சுந்தரம் அய்யர் வரவேற்புரை நிகழ்த்தினார். (பாட்டர்ஸன்) ஸ்ரீ வைத்தியநாதன் வாழ்த்துச் செய்திகளைப் படித்தார். முன்னாள் ராஷ்டிரபதி டாக்டர் ராதாகிருஷ்ணன், இன்றைய உப ராஷ்டிரபதி வி. வி. கிரி, திருவிதாங்கூர், மைசூர், கொச்சி மன்னர்கள், பல கவர்னர்கள், முதன் மந்திரிகள், இசைப் பிரமுகர்கள், தொழிலதிபர்கள் ஆகியோர் வாழ்த்து அனுப்பியிருந்தனர். மேல்நாட்டுப் பிரமுகர் இருவரின் வாழ்த்துச் செய்திகளைக் குறிப்பிட வேண்டும். ஹார்வுட் பிரபுவும் அவரது மனைவியாரும் **பிரம்மஸ்ரீ** செம்மங்குடி ஸ்ரீநிவாசய்யர் என்று விலாச மிட்டு அனுப்பியிருந்த வாழ்த்துத் தந்தியில் 'ஆழ்ந்த பற்றும் பக்தியும் கொண்ட இரு ரசிகர்களின் நல்வாழ்த்துக்கள்' எனக் குறிப்பிட்டிருந்தனர். உலகப் பிரக்கியாதி பெற்ற வயலின் கலைஞர் யெஹூதி மெனுஹின் 'இதயத்தைக் கிளறிவிடும் தங்களது நீண்ட சங்கீத வாழ்வுக்குத் தங்களுடைய **தொழில் சகா**வான யெஹூதி மெனுஹினின் இதயபூர்வமான வாழ்த்துக்கள்' என்று கூறியிருந்தார்.

பிறகு மதிப்புக்குரிய பேச்சாளர்கள் செம்மங்குடிக்குப் பாராட்டு நல்கினர்.

செம்மங்குடி அவர்களின் அயரா உழைப்பு இந்தத் தலைமுறையினருக்கு ஓர் உதாரணம் என்றார் ஸ்ரீ முசிரி. சங்கீதத்தின் சகல அம்சங்களிலும், பக்தியிலும் ஈடு இணையற்றவர் என்றார் ஸ்ரீ டி. டி. கே. சங்கீத வாழ்வின் சிகரத்தை எய்தியவர் என்றார் ஸ்ரீ எம். பக்தவத்ஸலம். தொழில் நேர்மை படைத்த நல்ல உள்ளத்தினர் என்று பாராட்டினார் ஸ்ரீ டி. கே. ஜயராமய்யர். சங்கீதத் துறையில் உள்ள சண்டைகளை யெல்லாம் தம் அன்பால் வென்று, இன்று சகல சங்கீத வித்துவான்களையும் ஈர்த்திருப்பவர் என்றார் ஸ்ரீ கே. பாலசுப்பிரமணிய அய்யர். சங்கீத சம்பிரதாயத்தைப் போஷித்து வந்திருப்பவர் என்று பாராட்டினார் ஸ்ரீமதி ருக்மிணிதேவி. தியாகையரின் நேர் சிஷ்ய பரம்பரையில் வந்தவர் செம்மங்குடி என்பதை எடுத்துக் காட்டிய ஸ்ரீ எஸ். ஒய். கிருஷ்ணஸ்வாமி, அவர் சங்கீதத் தொழிலுக்கே கௌரவம் ஏற்படுத்தித் தந்த ஒருவர் என்றார். ஸ்ரீ செம்மங்குடி சதாசிவ பிரம்மேந்திராளுடைய கீர்த்தனைகளைப் பரப்பிய பெருமையை எடுத்துக் காட்டினார் ஸ்ரீ கி. சந்திரசேகரன். இசை நுட்பம் அறியாதாரையும் தமது பக்தியினால் ஈர்ப்பவர் செம்மங்குடி என்றார் ஸ்ரீமதி சௌந்தரா கைலாசம். செம்மங்குடியின் சங்கீதத்தால் ஆண்டவனை உள்ளே பார்த்துக் கொள்ளலாம் என்று வாழ்த்தி ஆசி கூறினார் ஸ்ரீ சேங்காலிபுரம் தீக்ஷிதர்.

விழாவுக்குத் தலைமை தாங்கிய திருவிதாங்கூர் இளைய மகாராஜா ஸ்ரீ மார்த்தாண்ட வர்மா, தமது முன்னோராகிய சுவாதித் திருநாளின் கீர்த்தனைகளைப் பாரெங்கும் பிரபலப்படுத்திய செம்மங்குடிக்கு நன்றி தெரிவித்துக் கொண்டார்.

சொல் மாலைகளுக்குப் பின் சங்கீத சபைகள் கலைஞருக்குச் சூட்டிய மலர் மாலைகள் மலையென மேடையில் குவிந்தன. விழாக் கமிட்டியினர் அன்பளிப்பாக வெள்ளி வீணை அளித்தனர்.

பாராட்டுரைகளுக்குப் பதிலளித்த ஸ்ரீ செம்மங்குடி, தமது முன்னோர்களுக்கும், சங்கீதக் கலைஞர்கள் அனைவருக்கும் செய்யப்படும் மரியாதை இது என்று கூறினார். தமது சாஸ்திரப் புலமையை வளர்த்துக் கொள்ள மிகுந்த உபகாரம் புரிந்த திருவிதாங்கூர் மன்னரின் குடும்பத்துக்குத் தாம் மீளாத நன்றிக் கடன்பட்டிருப்பதாகத் தெரிவித்தார்.

'சங்கீத சபைகள் ஏராளமாக இருப்பினும் அவை நாடகங்களுக்கே முக்கியத்துவம் தருகின்றன. பொது மக்களை அதிகம் கவரா விடினும்கூடச் சங்கீதக் கச்சேரிகளுக்கு அவை நிறைய இடம் தந்து புதிய சங்கீத வித்துவான்களின் வரிசை தோன்ற உதவ வேண்டும்' என்றார். கலைகளில் அரசாங்கத்தினரின் தலையீடு கூடாது என்று அடித்துச் சொன்னார்.

இரவு ஸ்ரீ கே. எஸ். நாராயணசுவாமியின் வீணாகானத்துடன் இசைமேதையின் மணிவிழா இனிது நிறைந்தது.









செம்மங்குடி ஸ்ரீ ஸ்ரீநிவாஸ அய்யரவர்களின் மணி விழாவில் பங்குகொள்ள இயலாத வாசகர்களின் குறையை இங்கு தீர்த்து வைக்கிறோம் :

1. மணிவிழா மாப்பிள்ளையும் மணமகளும். 2. 'டி. டி. கே. மாமா'வுக்கு நமஸ்காரம். 3. சிஷ்யர்களுடன் குரு தம்பதியர். 4. கல்கி அதிபருடன் செம்மங்குடி. 5. விழாக் குழுவினரின் அன்பளிப்பாகிய வெள்ளி வீணையை வித்வானுக்கு வழங்குகிறார் திருவிதாங்கூர் இளைய ராஜா. 6. விழாக் குழுவினருடன் விழா நாயகர். 7. சங்கீதத் தலைமையுரை முசிரியுடன். 8. சேங்காலிபுரம் தீக்ஷிதர் பிரவசனம். 9. கே. எஸ். நாராயண

















சுவாமி விளக்கும் செம்மங்குடியின் சிஷ்யர் டி. என். கிருஷ்ணன் வயலின். 10. எஸ். ஒய். கே. உரையாடல். 11. திருவிதாங்கூர் மன்னரும் இளையராஜாவும். 12. சௌந்தரா கைலாசம் பேசுகிறார். 13. குரு மகாராஜபுரத்துடன் செம்மங்குடி. 14. சிஷ்யர்கள் கோஷ்டி கானம். 15. ருக்மிணிதேவி பாராட்டுகிறார். 16. லால்குடி ஜயராமன் - ராமபத்திரன் பக்கவாத்தியத்துடன் வி. சுப்பிரமணியம் கானம் செய்கிறார். 17. பக்தவத்சலம் பேசுகிறார்.

வலியின்
கொடும் பிடியிலிருந்து
அவனுக்கு விடுதலையளியுங்கள்

தசை வலி
சுளுக்கு
மூட்டுக்களில் பிடிப்பு
வீக்கம் இவற்றிற்கு

மெதில் ஸாலிஸிலேட் சேர்ந்த

# அயொடெக்ஸ்*

சாலச் சிறந்தது

அயொடெக்ஸ் சருமத்துக்குள் ஊடுருவிச் சென்று தசைகள் மீதும் நரம்புகள் மீதும் வேலை செய்து வலியை விரைவில் வெளியேற்றுகிறது.

உங்கள் குழந்தை சுளுக்கினால் அவதிப்படும்போது, விரைவில் வலியைப் போக்க அயொடெக்ஸை அழுத்தித் தடவுங்கள். அயொடெக்ஸில் சேர்ந்துள்ள பிரத்தியேகக் கலவை வலியை துரிதமாக, நிச்சயமாகப் போக்குகிறது.

வெட்டுக் காயங்களுக்கும், புண்களுக்கும் **அயொடெக்ஸ் ப்ளெயின்** உபயோகியுங்கள். அயொடெக்ஸ் கறை ஏற்படுத்துவதில்லை.

**வலிக்கு நீங்கள்
நினைவில் வைக்க வேண்டிய பெயர்—
அயொடெக்ஸ்**




SKF-6931




ஸ்மித் க்ளீன் அண்ட் ஃப்ரெஞ்ச் தயாரிப்பு

* ரெஜிஸ்டர்ட் ட்ரேட்மார்க்

இரண்டாவது முறையாகக் கல்கியில் பொன்னியின் செல்வன் தொடர்ந்து வெளிவரப் போகிறது என்ற செய்தியை அறிந்ததுமே நூற்றுக் கணக்கான அன்பர்கள் கல்கி காரியாலயத்துக்குக் கடிதம் எழுதித் தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டார்கள். அனைத்தையும் பிரசுரிக்க மனமிருந்தும் இடமில்லாத காரணத்தால் சிலவற்றை மட்டும் வட்டமேஜைப் பகுதியில் இரு இதழ்களில் இடம் பெறச் செய்தோம்.

பொன்னியின் செல்வனை வரவேற்று எழுதிய ஒவ்வொருவரும் என்ன காரணத்துக்காக அது இரண்டாவது தடவையாகத் தொடர்ந்து பிரசுரமாவதை வரவேற்கிறார்கள் என்பதைக் குறிப்பிட்டு எழுதியிருந்தார்கள். ஒவ்வொருவருமே ஒரு சிறந்த காரணத்தைக் கொடுத்திருந்தார்கள். இந்தக் காரணங்களுள்

# பொன்னியின் செல்வனை வரவேற்பது ஏன்?

**குடும்பத்திலுள்ள வாண்டுகள் முதல் வயோதிகர் வரை கலந்து கொள்ளக் கூடிய சுவையான போட்டியின் விவரம் இது.**

அதி முக்கியமானதை முதலிலும் அதை அடுத்து முக்கியத்துவம் பெறுவதை இரண்டாவதாகவும் இப்படியே பத்து காரணங்களைப் பொறுக்கி எடுத்து எழுதினோம். முக்கியத்துவத்தின் அடிப்படையில் பத்துக் காரணங்களையும் வரிசைப்படுத்தி எழுதிய பிறகு 'கல்கி வாசகர்களின் சிந்தனையும் இதை அனுசரித்தது போல் இருக்குமா?' என்று அறிந்து கொள்ளும் ஆவல் ஏற்பட்டது. அதன் விளைவே குடும்பத்திலுள்ள அனைவரும் விளையாட்டாகக் கலந்து கொண்டு மகிழக்கூடிய இந்தப் போட்டி.

அடுத்த பக்கத்தில் பத்துக் காரணங்களை நாங்கள் வரிசைப் படுத்தி வைத்துள்ளதுபோல் அல்லாது மாற்றி மாற்றிக் கொடுத்துள்ளோம். பத்துக் காரணங்களையும் நன்கு ஆராய்ந்து உங்கள் எண்ணத்தில் எது மிக முக்கியமானது என்று தோன்றுகிறதோ, அதை முதலிலும் மற்றவற்றை அதைத் தொடர்ந்து முக்கியத்துவத்தின் அடிப்படையில் வரிசைப் படுத்தியும் எழுதி, ஆசிரியர், கல்கி, சென்னை—10 என்ற விலாசத்துக்கு அனுப்பவும். நாங்கள் எழுதி வைத்துள்ள விடைக்குச் சற்றும் பிசகாமல் பத்துக்குப் பத்து சரியானபடி எழுதி அனுப்புகிறவர்களுக்குப் பரிசாக ஓராண்டுக்குச் சந்தாதாரராகச் சேர்த்துக் கொண்டு கல்கி இலவசமாக அனுப்புவோம். ஐம்பத்திரண்டு கல்கி இதழ்கள் வெற்றி பெற்றவரின் வீடு தேடி வரும். வெற்றி பெற்றவர் ஏற்கனவே சந்தாதாரராக இருப்பின் அவரது சந்தா மேலும் ஓராண்டுக்கு நீடிக்கப்படும்.

அடுத்த பக்கத்தில் கொடுக்கப்பட்டுள்ள கட்டங்களுக்குள் உங்கள் விடையைத் தெளிவாக எழுதி அனுப்ப வேண்டும். தனித் தாளில் எழுதினால் ஏற்றுக் கொள்வதற்கில்லை. கல்கி ஆசிரியரின் தீர்ப்பே முடிவானது. உறையின் மேல் ''பொன்னியின் செல்வன் பரிசுப் போட்டி'' எனக் குறிப்பிடவும். கடிதப் போக்குவரத்து கிடையாது. முடிவு தேதி: 17—8—68.

(1) பொன்னியின்செல்வன் பேராசிரியர் கல்கியின் அமர சிருஷ்டிகளுள் சிறந்தது.
(2) பொன்னியின் செல்வனை இந்தத் தலைமுறையினர் படித்ததில்லை.
(3) தமிழகத்தின் ஒரு மகோந்நதமான பொற்காலத்தைச் சித்திரிப்பது பொன்னியின் செல்வன்.
(4) எத்தனை முறை படித்தாலும் தெவிட்டாத சரித்திர நாவல் பொன்னியின் செல்வன்.
(5) பொன்னியின் செல்வனில் வரும் கதாபாத்திரங்கள் காலத்தால் அழியாதவர்கள்.
(6) பொன்னியின் செல்வனைத்திரும்பத் திரும்பப் படிக்கும்போது சுவை கூடுமே ஒழியக் குறையாது.
(7) பல ஆண்டுகளுக்கு முன்னால் பொன்னியின் செல்வனைப் படித்தவர்களுக்கு இப்போது அதன் பல பகுதிகள் மறந்து போயிருக்கக் கூடும்.
(8) தமிழில் முதல் சரித்திரக் கதையை எழுதிய கல்கியால் உருவாக்கப்பட்டது பொன்னியின் செல்வன்.
(9) பல்லாயிரக் கணக்கான தமிழர்கள் பொன்னியின் செல்வனைப் படிக்க ஆர்வத்தோடு காத்திருக்கிறார்கள்.
(10) பொன்னியின் செல்வனைப் படிப்பதால் இன்றைய இளைஞர் சமுதாயம் பெரிதும் பயனடையும்.

................................................ இங்கே வெட்டவும் ................................................

பொன்னியின் செல்வன் கல்கியில் மீண்டும் தொடர்ந்து பிரசுரமாவதை நான் கீழ்க்கண்ட காரணங்களுக்காக வரவேற்கிறேன். காரணங்களை அவற்றின் முக்கியத்துவத்தின் அடிப்படையில் வரிசைப்படுத்தி எழுதியுள்ளேன்.

(1) ____________________

(2) ____________________

(3) ____________________

(4) ____________________

(5) ____________________

(6) ____________________

(7) ____________________

(8) ____________________

(9) ____________________

(10)

கையொப்பம் : ........................................

விலாசம் : ........................................

........................................

........................................



## எழுத்தில் புதுமை



# இருபது வருஷங்கள்

பெரிய குளம் என்னும் பெரிய கிராமத்தில் சாரணர் படைக் காரியதரிசியாகவும், டாக்டராகவும் இருந்து கிராம சேவை செய்து வந்த காந்தி பக்தரான கேசவராவ் 1930ல் மறியல்களுக்கு ஆதரவு தந்ததால் ஓராண்டு சிறைத் தண்டனை பெறுகிறார். இரண்டாவது மகாயுத்தம் வந்ததும் புதிய அநுபவங்கள் பெற ராணுவத்தில் சேர்ந்து ஜப்பானியர்களால் கைது செய்யப்பட்டு நியூகினி தீவில் பலரோடு வசிக்க நேர்ந்த போது பல சாதனைகள் புரிந்துவிட்டு 1945ல் யுத்தம் நின்றதும் நாடு திரும்புகிறார். இவர் மீது தில்லியில் வழக்குத் தொடரப்பட்டதும் மன்னிப்புக் கடிதம் கொடுத்து விட்டுத் திரும்புகிறார். நாடு சுதந்திரம் அடைந்ததைப் பார்த்து மகிழ்ந்தாலும் மனத்தில் சாந்தியற்ற ஒரு நிலையில் உழன்று கடைசியில் மனம் பக்குவப்படும் நேரத்தில் காலகதி அடைகிறார்.

தேய்ந்த தடத்தை விட்டு விலகிச் செல்கிறது இந்த நாவல். சென்ற தலைமுறையில் நாட்டில் நடைபெற்ற உண்மையான சரித்திரச் சம்பவங்களைப் பின்னணியில் கொண்டு எழுதப்பட்டது இது.

கேசவராவ், பெற்றோர்களிடத்திலும், மனைவி குழந்தைகளிடத்திலும், நண்பர்களிடத்திலும், வேலை தேடி வந்த சாவித்திரியினிடத்திலும், நர்ஸிங் ஹோமின் (டாக்டர் பாஷையில் நரஸிங்கஹோமம்!) நோயாளிகளிடத்திலும் காட்டும் ஈடுபாடும் பரிவும் அவரை ஓர் உன்னதப்படைப்பாக உயர்த்தி, படிப்பவர் மனத்தில் அவர் பிம்பத்தை பசுமையாக நிலைநிறுத்துகின்றன. கேசவராவ் என்ற பாத்திரத்தின் சூரிய ஒளியில் மற்ற உபகதாபாத்திரங்களெல்லாம் உபகிரகங்கள் போல் மங்கிய ஒளியைத்தான் பரப்புகிறார்கள். கேசவராவுக்கு இயல்பாக வரும் ஹாஸ்யப் பேச்சுகளும், கிண்டலும், கவிதையும், நாவலின் உரைநடைப் பகுதிக்குச் சுவையூட்டுகின்றன. கண்காணாத் தீவில் அவர் புரியும் ஆராய்ச்சிகள் சாகஸத்தின் எல்லைக்கே அவரைக் கொண்டு போகின்றன. ஆனால் இந்தத் தீவு வாழ்க்கைக் காட்சிகள் நாவலாசிரியர் எடுத்துக் கொண்ட நம் சுதந்திர வரலாறு பற்றிய கதையம்சத்துடன் சற்றுச் சுருதி விலகியதாகவே தொனிக்கின்றன.

இத்தகைய புது மாதிரிப் படைப்புக்களை வாசகர்கள் எப்படி வரவேற்பார்களோ என்பது பற்றிக் கவலைப்படாமல் துணிந்து வெளியிட்ட தமிழ்ப் புத்தகாலயத்தார் அதே துணிச்சலுடன் நிறைய அச்சுப் பிழைகளையும் அனுமதித்திருக்கிறார்கள்!

நாவலாசிரியர் ஸ்ரீ எம். எஸ். கல்யாண சுந்தரம் 1901 ஸ்ரீராமநவமி தினத்தன்று பிறந்தார். மதராஸ், பஞ்சாப் சர்வகலாசாலைகளில் ஹிந்தியிலும் கணிதத்திலும் பி.ஏ. பட்டம் பெற்றவர். மதராஸ், அலகாபாத் இரண்டிலும் விஷாரத் பட்டமும், பஞ்சாபில் 'பிரபாகர்' பட்டமும் பெற்றவர். மாண்டிஸோரி அம்மையாரிடமே பாடம் சொல்லித் தருவது பற்றிப் பாடம் கேட்டவர்!

உயர்ந்த சர்க்கார் உத்தியோகத்தை உதறித் தள்ளி 1931ல் சத்தியாக்கிரக இயக்கத்தில் சேர்ந்தவர். சபர்மதி ஆசிரமத்தில் சேர்ந்து நிர்மாணத் திட்டங்களில் ஈடுபட்டுப் பின்னர் தென்னாடு திரும்பித் தமிழ்க் குழந்தைகளுக்கு ஹிந்தி போதித்தவர்.

சுதந்திரத்துக்குப் பின் தபால் தந்தி இலாகாவில் உதவிப் பொறியாளராகப் பதவி வகித்து ஓய்வுபெற்றபின் புதுதில்லி ரேடியோ நிலையத்திலும் வேறு சில இலக்கிய ஸ்தாபனங்களிலும் சேவை செய்த இவருக்குத் தமிழ், தெலுங்கு, ஆங்கிலம், ஹிந்தி, உருது, சம்ஸ்கிருதம், வங்காளி, ஜெர்மன் நன்கு தெரியும். குஜராத்தி, மலையாளம், மராத்தி, பிரெஞ்சு ஓரளவு பரிச்சயம் உண்டு. தாய்மொழியைத் தெலுங்காகக்

கொண்ட ஒருசில தமிழ் எழுத்தாளர்களில் ஸ்ரீ எம். எஸ். கல்யாணசுந்தரமும் ஒருவர். பெயரில் கல்யாணம் இருந்தும் இவர் ஒரு பிரும்மச்சாரி.

இந்த நாவலாசிரியரையே நாவலின் கதையைப் பற்றிக் கேட்டபோது அதை எழுத நேர்ந்தது பற்றிப் பல சுவையான தகவல்களைத் தெரிவித்தார்.

''பயன்பட வாழ்க்கை நடத்தியவர்கள் ஒரு நாவலாவது எழுத முடியும்' என்பது சில சிந்தனையாளர்கள் கருத்து. நான் பயன்பட்ட வாழ்க்கை நடத்தியிருக்கிறேனு என்பதை ஒரு நல்ல நாவல் எழுதிப் பார்ப்பது மூலம் கண்டு பிடித்துவிடலாம் என்று இந்த நாவலை எழுதத் தொடங்கினேன்'' என்ருர் ஸ்ரீ கல்யாணசுந்தரம். ''இது மட்டுமல்ல. என் தகப்பனுர் ஒரு நாவலாசிரியர்! 'சுரட்டூர் ராமு' என்ற நாவலை 1934ல் அவர் எழுதினுர். ஐந்தாறு பதிப்புக்கள் விலையான அந்த நாவல் வெளிவருவதற்கு 'மருத்துவம் பார்த்தவன்' நான்தான்!'' என்ருர்.

தமது மற்ற இலக்கியப் படைப்புக்கள் பற்றி ஆசிரியர் சொன்ன விவரங்கள் இவை: 1928ல் காந்திஜியின் வரலாற்றை வைத்து ஒரு சினிமாக் கதை எழுதினுராம். இது மட்டும் அல்ல. காந்தி போன்ற ஒருவரை ஒரு கூட்டுக் குடும்பத்தின் முதிய தலைவராக வைத்து ஐந்து அங்கங்களில் ஒரு முழு நாடகம் தமிழில் அவர் எழுதியிருக்கிருர். ஆனுல் அது புத்தகமாகவும் வரவில்லை; நடிக்கவும் படவில்லை.

''எங்கள் ஊரைச் சேர்ந்த டாக்டர் பிச்சுமணி என்பவர் ஜப்பானியர்களால் கைது செய்யப்பட்டுப் பசிபிக் தீவு ஒன்றில் வசித்த பலதிறப்பட்ட அநுபவங்களோடு நாடு திரும்பின நிகழ்ச்சி எனக்குக் கேசவராவ் பாத்திரத்தைப் படைக்கப் பெரிதும் உதவியது'' என்ருர் ஸ்ரீ எம். எஸ். கே.

''உங்கள் முதல் சிருஷ்டி அச்சேருதபோது எப்படி மீண்டும் எழுதத் தொடங்கினீர்கள்?'' என்ற கேள்விக்கு அவர் சொன்ன பதில்:

''முதல் குழந்தை இறந்தது என்பதற்காக மறு குழந்தையை விரும்பாமலிருக்கிறேமா? 1957ல் ஒரு நாவல் போட்டியை வியாஜமாகக் கொண்டு டாக்டர் பிச்சுமணியின் கதையை எழுதத் தொடங்கினேன். அவருடைய பஸிபிக் தீவு அநுபவங்களோடு என் தமையனுர் டாக்டர் கோபாலசாமியின் சிறை அநுபவங்களையும் கலந்தேன். 'டொமேட்டோ'வையும் 'பொட்டேட்டோ'வையும் ஒட்டுச் சேர்த்து 'பொமேட்டோ' உண்டாக்கினேன். இந்தப் பொமேட்டோ டாக்டர் கேசவராவின் கதைதான் இருபது வருஷங்கள்'' என்று சுவைபடக் கூறினுர் ஸ்ரீ கல்யாணசுந்தரம்.

நாவலாசிரியரே வாசுதேவநாயுடுவின் உருவத்தில் கலந்து கொண்டு கதையின் ஓட்டத்துக்கும், ஊட்டத்துக்கும் உதவுகிருர். நாவலை ஆசிரியர் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து இங்கிலாந்தில் வெளியிட முயன்று வருகிருர். ஆங்கிலேயர் இந்தியாவை ஆண்டபோது இங்கு கிராமங்கள்தோறும் நடைபெற்ற ஒத்துழையாமை, மறியல் போன்றவை ஆங்கிலேயர்களுக்கு ரஸமாகப்படலாம். 'சிறை சத்சங்கம்' இந்த நாவலின் முக்கியமான அத்தியாயம் என்பது நாவலாசிரியரின் கருத்து. ''டாக்டர் பிச்சுமணி கண்டுபிடித்த 'இளநீர் சிகித்சையை' கேசவராவ் கண்டு பிடித்ததாக நான் எழுதியதில் உண்மை இருக்கிறது. பம்பாயில் சில மருத்துவ விஞ்ஞானிகள் இளநீர் இன்செக்ஷன் செய்து வெற்றி கண்டதாகச் செய்திகள் வந்திருக்கின்றன'' என்ருர்.

''சென்ற தலைமுறையில் நடந்த சம்பவங்கள் 'ஆறின கஞ்சி'யல்லவா? அவை இன்றைய தலைமுறையினருக்கு எப்படிப் படுமோ?'' என்று கேட்டேன்.

''ஐம்பது ஆண்டுகளுக்குமுன்பு எடுத்த குடும்ப போட்டோவில் நமக்கு அக்கறையிருந்தால் இது போன்ற நாவல்களிலும் சிரத்தை இருக்க வேண்டும்'' என்ருர் நாவலாசிரியர் ஸ்ரீ எம். எஸ். கல்யாணசுந்தரம்.

பிரசுரம்: தமிழ்ப் புத்தகாலயம்; 576, பைகிராப்ட்ஸ் ரோடு, திருவல்லிக்கேணி, சென்னை-5; விலை: ரூ 4-00. —மகரம்



## காந்தி இட்ட ரொட்டி!

தென் ஆப்பிரிக்காவில் இருக்கும்பொழுது வீட்டில் காந்திஜி ரொட்டி இடப் பழகிக்கொண்டார். ரொட்டி மாவைப் பிசைந்து கல்லில் வைத்துத் தட்டியபோது ரொட்டி வட்டமாகவே வரவில்லை. ஒவ்வொன்றும் ஒவ்வொரு கோணலாக இருந்தது. காந்திஜி ஒரு யுக்தி செய்தார். இஷ்டம்போல் இட்டுவிட்டுக் கடைசியில் ஒரு வட்ட வடிவமான தகர மூடியைத் தாம் இட்ட ரொட்டிகளின் மீது வைத்துத் திருகி அவைகளை வட்டமாக்கினுர்! எல்லாம் ஒரே அளவாக, இவ்வளவு வட்டமாக அமைந்திருக்கிறதே என்று மற்றவர்கள் பாராட்டினபோது காந்திஜி தாம் செய்ததைக் கூறினுர்!

ஆதாரம்: 'காந்திஜியின் நினைவுகள்' - தகவல்: லலிதா காளிதாஸ்



அண்மையில் ராஜாஜி தாத்தா பெங்களூர் சென்றிருந்தபோது கொள்ளுப் பேரனுடனும் அவனது பெற்றோர் திரு. ஸ்ரீதரன் தம்பதியுடனும் இந்தப் படம் எடுத்துக் கொண்டார்.

□




கிராமபோன் கம்பெனி சென்னைக் கிளையைச் சேர்ந்த திரு ஆல்பிரட் தங்கையா தமிழக முதல் அமைச்சருக்கு ஜூலை 14ந் தேதியன்று ஸ்ரீமதி எம். எஸ். அவர்களின் ஐ. நா. கச்சேரி ரிகார்டுகளை வழங்கினார்.



மலேசியப் பிரதமர் துங்கு அப்துல் ரஹ்மான் நேபாளம் செல்லும் வழியில் ஒரு நாள் புதுதில்லிக்கு விஜயம் செய்தார். புதுதில்லி பாலம் விமான நிலையத்தில் பாரதப் பிரதமரும் மற்ற அமைச்சர்களும் அவரை வரவேற்றுக் கௌரவித்தனர்.

# யுகத்துக்கு இருபது வருடங்கள்




அட்டைப் படக் கதை

## வ. சா. நாகராஜன்

இரண்டு வருஷ இடைவெளிக்குப் பிறகு இப்போதுதான் கோபாலசாமி விசலூருக்கு வந்தார். வண்டி தெருமுனை திரும்பி, கோடி வரை போய் அவர் வீட்டு வாசலில் நிற்கும் வரை இரண்டு பக்கங்களிலும் உள்ள வீடுகளைப் பார்த்துக் கொண்டே வந்தார். சென்னையிலிருந்து ஆரம்பித்து அந்த ஊருக்கு இறங்க வேண்டிய ஸ்டேஷன் வரை நடுவில் வந்த அத்தனை ஊர்களிலும், பெரியதோ சிறியதோ ஏதாவது மாற்றங்கள் அவர் கண்ணில் தென்பட்டுக் கொண்டே வந்தன. இப்போது அவருடைய சொந்த ஊர்த் தெருவைப் பார்க்கும்போது இருபது வருஷங்களுக்கு முன்னர் அந்த வீடுகள் எப்படி இருந்தனவோ இப்போதும் அப்படியே இருப்பது தெரிந்தது. ஒன்றிரண்டு வீடுகள் பாழாய்ப் போயிருந்தன. மற்றபடி எந்த விதமான மாறுதலுமில்லை.

பெருமாள் கோயில் மதில் சுவர் பெரிய பெரிய நாமத்துடன் காட்சியளித்தது. தெருவின் முதல் வீடு மண் சுவர் பூசப்பட்ட அர்ச்சகர் வீடு, அடுத்துச் சின்னப் பண்ணை வீடு, மகாலிங்கம் வீடு, குழந்தை வீடு, சார் வீடு, சாலுப்பாட்டி வீடு, கடைசி வீடு என்று என்னவோ சாகாவரம் பெற்ற மார்க்கண்டன் மாதிரி அன்றிருந்த மேனிக்குச் சற்றும் மாறுதல் இல்லாமல் அப்படி அப்படியே காட்சியளித்தன.

வீட்டு வாசலில் இறங்கி உள்ளே போய்ச் சட்டையைக் கழற்றிவிட்டு ஊஞ்சலில் அமர்ந்து பிரயாண அலுப்புத் தீர அதை வீசி ஆட்டினார் கோபாலசாமி. சம்பா காப்பி கொண்டு வந்து வைத்தாள். அந்த ஊருக்குள் நுழைந்ததிலிருந்து 'ஒரு மாறுதலும் இல்லையே' என்று ஆயாசப்பட்ட கோபாலசாமி சம்பாவைப் பார்த்தபோது அந்தக் கணத்தில் பிரமிப்புக்குள்ளானார். இரண்டு வருஷங்களுக்கு முன்னர் அவர் இங்கே வந்த போது, ''சித்தப்பா, சித்தப்பா'' என்று கூப்பிட்டுக் கொண்டே போகுமிடமெல்லாம் கூட வரும் சம்பா இப்போது தாவணி அணிந்து முகத்தில் முன்பு இருந்த பரபரப்பு இல்லாமல் ஜாக்கிரதையாகக் காப்பித் தம்ளரை ஆடும் ஊஞ்சலில் வைப்பதைப் பார்த்தார்.

காப்பியைக் குடித்துக் கொண்டிருந்தபோதுதான் அண்ணு சாம்பசிவம் உள்ளே வந்தார். இரண்டு வருஷங்களாக ஊர்ப் பக்கமே வராமல் இருந்த சன்னியாசித் தம்பியிடம் பேசிக் கொண்டிருந்த அண்ணு பேச்சினிடையே சொன்னுர்: ''இந்த வருஷம் சம்பாவுக்குக் கல்யாணம் செய்துவிடலாம் என்றிருக்கிறேன்.''

'' சம்பாவுக்குக் கல்யாணமா...? இந்த வருஷமா?'' என்று வியப்பைத் தெரிவித்த கோபாலசாமி, ''அவள் எந்த வருஷம் எஸ். எஸ். எல். ஸி. பாஸ் பண்ணினுள் ?'' என்று விசாரித்தார்.

''போன வருஷம்... ஒரு வருஷம் வீட்டில் உட்கார்ந்தாயிற்று....''

என்னவோ அந்தக் கணத்தில் கோபாலசாமிக்குப் பளிரென்று அந்த எண்ணம் மனசில் தோன்றியது. ''பையன் யாராவது பார்த்தீர்களா...?'' என்று விசாரித்தார்.

''பட்டாமணியார் மைத்துனன் பிள்ளை. விற்குடியில் இருக்கிறன். ஒரே பிள்ளை. இரண்டு வேலி நிலம் இருக்கிறது. தொந்தரவு இல்லாத இடம்.....''



கோபாலசாமி யோசனையில் ஆழ்ந்தார்:

மாலையில் தெருவில் நடந்த கோபாலசாமி பட்டாமணியம் வீட்டுத் திண்ணையில் வழக்கம் போல் கூட்டம் இருப்பதைப் பார்த்துவிட்டுப் படியேறிச் சின்னத் திண்ணையில் உட்கார்ந்தார். வழக்கமான விசாரிப்புகள் முடிந்த பிறகு பட்டாமணியார் சீட்டாட்டக்கோஷ்டியில் இருந்த ஒரு பையனைக் காண்பித்து, ''அவன்தான் என் மச்சினன்.....'' என்று அறிமுகப்படுத்தினார்.

'இருபது, இருபத்திரண்டு வயசில் சரியாக மீசைகூட முளைக்காமல் இருந்த நிலையில் சீட்டாட்டச் சுவாரசியத்தில் தன்னை இழந்திருந்த இவனுக்கா கல்யாணம்?' — குடும்ப பாரம் என்று வாழ்க்கையில் கல்யாணமே செய்து கொள்ளாத கோபாலசாமி எண்ணி வியந்தார். அந்த வியப்புணர்ச்சி அவர் சிந்தனையைத் தூண்டி விடவே, ''அப்புறமாக வருகிறேன்'' என்று சொல்லிக் கொண்டு எழுந்து கிழக்கு நோக்கி நடந்தார்.

கோபாலசாமிக்கு வயது நாற்பத்தி நாலு. கல்யாணம் செய்து கொள்ள வேண்டிய அந்த நாளில் அவரும் இன்னும் நாலைந்து பேர்களும் சேர்ந்து 'இந்த நாட்டுக்குச் சுதந்திரம் வரும் வரை திருமணம் செய்துகொள்வதில்லை' என்று பிரதிக்ஞை எடுத்துக் கொண்டார்கள். மற்ற நண்பர்கள் இரண்டொரு வருஷங்களிலேயே கல்யாணம் செய்து கொண்டு குடும்பத்தை வளர்த்துக்கொண்ட போது கோபாலசாமி மாத்திரம் அந்த உறுதியைக் கடைப்பிடித்துக் கல்யாணம் செய்து



கொள்ளாமலேயே காலத்தைக் கடத்தியவர். சுதந்திரம் வந்த பிறகு, அதுவரையில் அநுபவித்த பிரம்மசரிய வாழ்க்கையில் தம்மையே இழந்து அப்படியே வாழப் பழகிவிட்டவர். சென்னையில் சிறிய அச்சகத்தையும் பிரசுராலயத்தையும் நிறுவி இன்னமும் தம் வாழ்க்கையில் ஏதேதோ லட்சியங்கள் என்ற பிடிப்புக்களை வைத்துக் கொண்டு வாழ்பவர்.

இரவுச் சாப்பாட்டுக்குப் பிறகு அண்ணா வாசற்பக்கம் போனதும் கோபாலசாமி சம்பாவைத் தனியே அழைத்து, ''என்னம்மா கல்யாணம் செய்து கொள்கிறாயாமே? சுந்தரத்தைப் பார்த்தியோ? உனக்குப் பிடித்திருக்கிறதோ?'' என்று கேட்டார்.

''போங்கோ, சித்தப்பா !'' என்று சிணுங்கினாள் சம்பா.

பதினேழு வயதில், கிராமத்து மண்ணைத் தவிர வெளியுலகைப் பார்த்தறியாத சம்பாவின் மனத்தில் அந்தச் சுந்தரம் சிங்காரக் கனவுகளை ஏற்படுத்தியிருந்தது உண்மைதான். கல்யாணம் அப்பா அம்மாவுக்கு அதிகமாகக் கஷ்டம் ஏற்படாத வகையில் அமைகிறது என்பதுடன் அந்தச் சுந்தரம் சுமாரான சொத்து சுகங்களுடையவன், அதிகமாகப் பிக்கல் பிடுங்கல்கள் இல்லாத குடும்பம் என்ற சாதகமான காரணங்களும் சேர்ந்து அவள் மனத்தில் இன்ப லோகத்தையே சிருஷ்டித்து வந்தன. அந்தக் கிராமத்தில் அதிகமாக சினிமாக்களைப் பார்க்க வாய்ப்பும் இல்லை; அப்படித் தப்பித் தவறி இரண்டொரு படங்களைப் பார்க்க நேர்ந்தபோதும் அவற்றில் வரும் கனவுக் காட்சிகள் சம்பாவின் மனத்தில் எந்தவிதமான சலனத்தையும் ஏற்படுத்தவில்லை. அவள் வரை அவளுக்கு மூத்தவர்களான இரண்டு சகோதரிகளுமே இலட்சியப் பெண்கள். அந்த இருவரும் அந்த ஜில்லாவுக்குள்ளேயே சாதாரணக் குடும்பங்களில் வாழ்க்கைப்பட்டிருந்தார்கள். இருவருக்கும் குழந்தைச் செல்வங்களுக்கும் குறைவில்லை. அந்தப் பாதையில் தானும் செல்லும் நாளை சம்பா ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். அந்தப் பாதையே ஒரு பெண்ணுக்குத் திறந்து வைத்திருக்கிற ஒரே பாதை என்று சம்பா, அவள் பெற்றோர், சகோதரிகள், ராமநாதபுரம் பக்கத்தில் ஒரு சின்ன ஸ்டேஷனில் ஸ்டேஷன்மாஸ்டராகப் பணியாற்றிய ஒரே அண்ணா—ஆகிய எல்லோருக்கும் தோன்றியது.

கோபாலசாமி வாசலுக்கு வந்தார். திண்ணையில் உட்கார்ந்திருந்த அண்ணாவிடம், ''சம்பாவின் கல்யாணத்துக்கு இப்போது என்ன அவசரம்? சென்னையில் எல்லாம் இருபது இருபத்திரண்டு வயதுவரையில் பெண்கள் கல்யாணம் செய்து கொள்ளாமல் இருந்துவிட்டுப் பிறகுதான் செய்து கொள்கிறார்கள்'' என்று சொன்னார்.

அண்ணா சாம்பசிவம் சென்னையைப் பார்த்ததே இல்லை. ''நாமும் சென்னைப் பட்டினத்தில் இருந்தால் சரிதான். கிராமத்திலே இருக்கிறோமே! அவர்கள் எப்படி இருந்தால் நமக்கு என்ன? சம்பாவுக்கு இந்த மாதிரியான இடம் கிடைப்பது அவள் அதிர்ஷ்டம்தான். பெரியவள் இரண்டுபேருக்கும் எத்தனை அலைச்சல் அலைந்தேன் தெரியுமா ?'' என்று அந்த அனுபவங்களை நினைத்துப் பெருமூச்சு விட்டார் அவர்.

''அது இருக்கட்டும். எனக்கு என்னமோ தோன்றுகிறது. சம்பாவுக்கு இப்போது கல்யாணம் வேண்டாம். அவளாவது பி. ஏ. வரை படிக்கட்டும்'' என்று தம் யோசனையை வெளியிட்டார் கோபாலசாமி.

''என்னடா, இது, என்ன பேசறே ? கல்யாணத்துக்கு ஏற்பாடு பண்ணிக் கொண்டிருக்கிறோம். எல்லாப் பேச்சும் முடிந்து, பாக்கு வெற்றிலை மாற்றிக் கொள்ள வேண்டியதுதான் பாக்கி. இப்போது வந்து 'கல்யாணம் வேண்டாம், படிக்கட்டும்' என்கிறாயே, என்ன இது? இந்த வீட்டுக்கு ஆண்பிள்ளையில் இப்படி நீ ஒருவன் இருப்பது போதாது என்று பெண்ணில் ஒருத்தியாகச் சம்பாவும் அப்படி இருந்து பார்க்க வேண்டும் என்று உன் நினைப்பா... வாயை மூடு!'' என்று எரிந்து விழுந்தார் அண்ணா.

## கல்லூரி மாணவர்களுக்கு...



கல்கி பத்திரிகை தனது இருபத்தேழாண்டு இலக்கியப் பணியைப் பூர்த்திசெய்து இருபத்தெட்டாம் ஆண்டில் அடியெடுத்து வைக்கிறது. இந்த நன்னாளை யொட்டி இதோ கல்லூரி மாணவ, மாணவியரின் இலக்கிய உணர்வு வளர உதவும் வகையில் ஒரு போட்டி.

ரேழியிலிருந்து மைத்துனர் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்த சம்பாவின் அம்மா அங்கிருந்தபடியே கையை நெரித்தாள்; ''நன்றாகச் சொன்னார்....! பங்காளி என்றால் வயிற்றெரிச்சல் இருக்கும் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனாலும் இப்படியா?'' என்று முணுமுணுத்தாள்.

''அதுதான் உங்கள் இஷ்டப்படியே இரண்டு பெண்களுக்குக் கல்யாணம் செய்து வைத்திருக்கிறீர்களே.... அவர்கள் இரண்டு பேரும் எப்படி இருக்கிறார்கள்? வருஷம் தவறாமல் இருவரும் மாற்றி மாற்றிக் குழந்தைகள் பெற்றுக் கொண்டிருக்கிறார்கள். அவ்வளவுதான் ! சம்பா படிக்கட்டுமே!''

''படித்து விட்டு என்ன பண்ணுகிறது ? கலெக்டர் வேலைக்குப் போகிறதா? இல்லாவிட்டால் கோபாலு மாதிரி ஸ்டேஷன் மாஸ்டராகிறதா? என்னடா பேத்தறே?''

''நான் பேத்தவில்லை. எனக்கு என்னவோ சம்பா எல்லாரையும்விடக் கெட்டிக்

காரி என்று தோன்றுகிறது. எஸ். எஸ். எல். ஸி.யிலே எல்லாத்திலேயும் அறுபது, எழுபது மார்க் வாங்கியிருக்கிறாள். அவளை நன்றாகப் படிக்க வைத்தால் முன்னுக்கு வருவாள்.''

''பெண் படிச்சு என்னடா முன்னுக்கு வரது? சம்பா மாத்திரம் ஆண் பிள்ளையாக இருந்தால் நீ சொல்வது சரின்னு உன்னுடன் அனுப்பியிருப்பேன். ஒரு வயது வந்த பெண்ணைப் போய் நீ சொல்கிறே என்கிறதுக்காக உன்னுடன் அனுப்பினால் அவளை எங்கேயோ கல்லூரியிலே சேர்த்துவிட்டு நீ உன் ஆண்டி மடத்துக்குப் போய் விடுவே. அப்புறம் சம்பாவை யார் பார்த்துக் கொள்வார்கள்?''

''உனக்குத் தெரியாது. சம்பா ரொம்பக் கெட்டிக்காரி. அவளுக்கு மாத்திரம் சரியான வழி காண்பித்தால் போதும். ஹாஸ்டலில் சேர்த்து விட்டால் அவளைப்போல் நூற்றுக் கணக்கான பெண்கள். அப்புறம் பார்த்துக் கொள்கிறது. என்ன?''

''அப்பாவுக்குப் பிடிக்கிறது என்ன? நமக்கு எது வேணும்னு நாம்தான் நிர்மானித்துக் கொள்ளணும்.... ஒரு யுகம்னால் தெரியுமா உனக்கு?''

''பல கோடி வருஷங்கள் ஆனால் ஒரு யுகம். இப்போது கலியுகம். கலியுகம் முடிந்த பிறகு பிரளயம் வரும். உலகம் முழுவதும் அழிந்து போய்விடும். அப்போது பகவான் மாத்திரம் ஆலிலையில் மிதப்பார்....''

''அதெல்லாம் கதை! கலியுகம், திரேதா யுகம், பிரளயம் என்பதெல்லாம் வெறும் கதை! யுகம் என்றால் நாம் காணும் இதோ இந்த உலகத்தில் ஏற்படும் சில மாறுதல்கள். என் காலத்தில் — அந்த யுகத்தில் — நாட்டுக்குச் சுதந்திரம் வேண்டும் என்று எங்களுக்கு வேகம் இருந்தது. அந்தச் சுதந்திரம் கிடைக்கும் வரை கல்யாணம்கூடச் செய்து கொள்வதில்லை என்று பிரதிக்ஞை எடுத்துக் கொண்டோம். அது ஒரு யுகம். அதற்குப் பிறகு

---

ஆகஸ்டு 4-ந் தேதி இதழ் முதல் டிசம்பர் இறுதி இதழ் வரையில் கல்கிப் பத்திரிகையில் இடம் பெறும் எல்லாச் சிறப்புச் சிறுகதைகளையும் ஆழ்ந்து படித்துப் பாருங்கள். அவற்றில் சிறந்ததென நீங்கள் கருதும் ஏதேனும் ஒரு சிறப்புச் சிறுகதை குறித்துக் கல்கியில் இரண்டு பக்கங்களுக்கு மேற்படாத வகையில், இலக்கியத் திறனாய்வு செய்து எமக்கு 1969 ஜனவரி 15-ந் தேதிக்குள் கிடைக்குமாறு அனுப்பி வையுங்கள். சிறந்த இலக்கியத் திறனாய்வுக் கட்டுரைகளுக்கு முதல், இரண்டாவது, மூன்றாவது பரிசுகள் உண்டு. முதல் பரிசு: அடுத்த கல்லூரி ஆண்டுக்கான முழு சம்பளத் தொகை. இரண்டாம் பரிசு: இரண்டு 'டர்ம்' (Term) களுக்கான சம்பளத் தொகை. மூன்றாவது பரிசு: ஒரு 'டர்ம்' சம்பளத் தொகை. பரிசுத் தொகை கல்லூரி முதல்வருக்கு அனுப்பி வைக்கப்படும்.

திறனாய்வுக்குச் சிறப்புச் சிறுகதைகளை மட்டும் எடுத்துக் கொள்ளுங்கள். உறையின் மீது 'இலக்கியத் திறனாய்வுக் கட்டுரை' என்று குறிப்பிட்டு, ஆசிரியர், கல்கி, சென்னை—10 என்ற விலாசத்துக்கு அனுப்பவும். அடுத்த ஆண்டு கல்லூரிப் படிப்பைத் தொடர நினைப்பவர்கள் மட்டுமே இப்போட்டியில் கலந்துகொள்ளவும். கடிதப் போக்குவரத்துக் கிடையாது. கட்டுரைகளைத் திருப்பி அனுப்புவதற்கில்லை. கல்கி ஆசிரியரின் தீர்ப்பே முடிவானது.

---

''சீ..... எழுந்து போடா. பெரிசா உபதேசம் பண்ண வந்துவிட்டான்!'' என்று துண்டை உதறிப் போட்டுக் கொண்டு எழுந்தார் அண்ணா.

ஆனால் கோபாலசாமி விடவில்லை. சம்பாவைப் பார்க்கும்போதெல்லாம் அவர் சென்னையைப் பற்றியும், அங்கே கடற்கரையிலும் கல்லூரி வாசல்களிலும் ஆயிரக்கணக்கான பெண்கள் அவரவர் விருப்பப்படி வந்து போவதைப் பற்றியும் சொன்னார். சம்பாவின் கையைப் பார்த்துவிட்டு, ''உன் கையில் நல்ல ரேகை ஓடுகிறது. நீ நிச்சயமாகப் படிப்பாய். பாரேன், உன்னைப் படிக்க வைக்கிறேனா இல்லையா என்று.....!'' என்றெல்லாம் உற்சாகமூட்டினார்.

''போங்கோ, சித்தப்பா. நான் எங்கே போய்ப் படிக்கிறது? அப்பாவுக்கு அதெல்லாம் பிடிக்காது'' என்றாள் சம்பா.

இருபது வருஷங்களுக்குப் பிறகு சுதந்திரம் கிடைத்தது. அந்தச் சமயம் ஒரு யுக சந்திப்பு. இப்போது அடுத்த யுகம் நடக்கிறது. இந்த யுகத்தில் எல்லோரும் என்ன செய்ய வேண்டும், தெரியுமா? ஆண், பெண் எல்லோரும் எவ்வளவு தூரம் படித்து அறிவை வளர்த்துக் கொள்ள முடியுமோ, அவ்வளவுதூரம் வளர்த்துக் கொள்ள வேண்டும். அதற்குப் பிறகு நம் அறிவை ஏதாவது ஒரு வகையில் நாட்டுக்குக் கொடுக்க வேண்டும். அதுதான் இந்த யுக தர்மம்......''

''எப்படிப் படிக்கிறது சித்தப்பா? படித்து விட்டுத்தான் என்ன பண்ணுகிறது?''

''அப்புறம் என்ன பண்ணுவது என்பதைப் பற்றி அப்போது பார்த்துக் கொள்ளலாம்...''

சம்பாவுக்கு ஒரே குழப்பமாக இருந்தது. சித்தப்பா சொல்வதைப் போல் சென்னையில் கல்லூரியில் சேர்ந்து படிப்பதற்கும் ஆசை இருப்பது போலிருந்தது. ஆனால் அப்பா

சொன்னதைக் கேட்டால் அதுவும் பயமாக இருந்தது. அப்பா சமையல் அறையில் அம்மாவிடம் சொன்னார். ''அவனுக்கென்ன? சொல்லி விட்டுப் போய் விடுவான். இந்த ஊரிலே எந்தப் பெண் கல்லூரியிலே சேர்ந்து படித்திருக்கிறாள்? அப்படியே சேர்ந்து படித்தாலும் ஏதாவது தப்புத் தண்டாவாக நடந்தால் அப்புறம் நாம் இந்த ஊரிலே ஒரு நிமிஷம் இருக்க முடியுமோ அப்படி நடக்கா விட்டாலும்தான் சம்பாவைத் தனியாக ஹாஸ்டலில் சேர்க்க முடியுமா? மாதம் நூறு ரூபாய்க்கு எங்கே போகிறது.... முட்டாள், முட்டாள்....! பேத்தறான்....!''

''முதல் காரியமாக உங்க தம்பியை ஊருக்குப் போகச் சொல்லுங்கோ. கல்யாணப் பேச்சு நடக்கிற போது ஆசீர்வாதம் பண்ண வந்துவிட்டார், சன்யாசி!'' என்று அவள் அம்மா உறுமினாள்.

எதற்கும் கோபாலசாமி விடவில்லை. மறுபடியும் அதைப் பற்றி அண்ணாவிடம் ஆரம்பித்த போது, ''படிக்க வைக்கப் பணத்துக்கு எங்கேபோகிறது?'' என்று கேட்டார் அண்ணா.

''கல்யாணத்துக்கு என்று எவ்வளவு பணம் இருக்கிறது?'' என்று கேட்டார் கோபாலசாமி.

''ஏதாவது நாலைந்து ரூபாய் இருக்கும். அதை வைத்துக் கொண்டு எத்தனை வருஷங்கள் படிக்க வைக்க முடியும்? அதையும் படிப்பில் தொலைத்து விட்டால் பிறகு அவள் வாத்தியாரிச்சியாக அல்லது நர்ஸாகப் போகணும். அதுதானே உன் லட்சியம்? நீ என்ன சொன்னாலும் அது முடியாது! முதலில் நீ ஊரைப் பார்க்கப் போய்ச் சேர்!'' என்று முடித்தார்.

கோபாலசாமி அசைந்து கொடுக்கவில்லை. வாழ்க்கையில் இதைவிடப் பெரிய பெரிய சோதனைகளில் வெற்றி பெற்றிருந்த அவருக்கு இது ஒரு சாதாரண விஷயமாகத் தோன்றியது.

கடைசி பாணமாக வைத்திருந்ததைத் தொடுத்தார். ''சரி, இந்த வீட்டுச் சொத்தில் எனக்கும் ஒரு பாகம் உண்டல்லவா? இந்த இருபது முப்பது வருஷங்களாக என்ன கணக்கு? எனக்கு நீ கணக்குப் பார்த்துக் கொடுக்க வேண்டாம். என் பணத்தில் சம்பா படிக்கட்டும். பிற்பாடு கல்யாணம் என்று வரும்போது என் பாகத்தை விற்று அவளுக்குக் கல்யாணம் செய்துவைக்கிறேன்'' என்று சொன்ன தம்பியைப் பார்த்து வாய் அடைத்துப் போனார் அண்ணா.

உடனடியாக நடக்கவிருந்த கல்யாணம் நின்று போய், ஜூலை மாதம் கல்லூரிகள் திறந்தானதும் சம்பா தன் துணிமணிகளைப் பழைய பெட்டியொன்றில் அடைத்து எடுத்துக் கொண்டு சித்தப்பாவுடன் சென்னைக்கு ரயில் ஏறினாள்.

## 2

ரயில் நின்றது. சம்பா வண்டியிலிருந்து இறங்கினாள். உடைகள் வைத்திருந்த சூட்கேஸ், புத்தகங்கள் வைத்திருந்த பெட்டி, படுக்கை, பழக்கூடை — ஆகிய நான்கே சாமான்கள். அவளை அழைக்க வந்த அப்பாவுக்குச் சம்பாவைப் பார்த்ததும் தம் கண்களையே நம்ப முடியவில்லை. இந்த நான்கு வருஷங்களில் ஆறு மாதம், ஒரு வருஷத்துக்கொரு முறை வந்த விடுமுறைகளில் அவர் அவளைப் பார்த்துக் கொண்டுதான் இருந்தார். கடைசியாக ஆறு மாதங்களுக்குமுன் அவள் வந்தபோதுதான் அவர் அவளைப் பார்க்க முடியவில்லை. இந்த ஒரு வருஷ இடைவெளியில் சம்பாவிடம் ஏற்பட்டிருந்த மாற்றங்களைக் கண்டு அப்படியே பிரமித்துப் போய் நின்றார் சாம்பசிவம். அவருக்கு ஒரு கணம் இதே ஸ்டேஷனில் நான்கு வருஷங்களுக்கு முன், நாலு நாட்களில் நடக்கவிருந்த கல்யாணத்தை நிறுத்திவிட்டுச் சித்தப்பாவுடன் சிட்டிப் பாவாடையும் தாவணியுமாகப் பெற்றவர்களை விட்டுப் பிரிந்திருக்க நேரும் உணர்வை நினைத்து அழுது அழுது சிவந்த கண்களுடன் வண்டியேறிய சம்பாவின் உருவம் கண் முன்னால் வந்தது. அந்தச் சம்பாவுக்கும் இவளுக்கும் ஒரு சம்பந்தமும் இல்லை என்று சொல்லும்படி இப்போது மாறிப் போயிருந்தாள். எல்லாரையும்விட அவள் கொஞ்சம் உயரம்தான் என்றாலும் தன்னைவிட இவ்வளவு உயரமா? உயரம் மாத்திரம் இல்லை. அந்தக் கண்கள், மூக்கின் அமைப்பு, காதோரங்களில் பறந்து விழும் கேசங்கள், அப்பாவைப் பார்த்ததும் இதழோரத்தில் இழைய விடும் அந்த நேர்த்தியான புன்னகை — இவள் என் பெண்ணா? தம் பெண்ணிடமே அவருக்குக் கூச்சமாயிருந்தது.

அவளைக் குழந்தையிலிருந்து தூக்கி வளர்த்த வண்டிக்காரன் சுப்பையாகூட அவளைப் பார்த்ததும் வாயடைத்துப் போய் விட்டான்.

குசலப் பிரச்னம் முடிந்த பிறகு சுப்பையா பெட்டி படுக்கைகளை எடுத்துக் கொள்ள, சம்பா பழக் கூடையை எடுத்துக் கொண்டு



'யாருக்குச் சிலை' என்ற தலைப்பில் கல்வி நேயர்கள் தெரிவித்த கருத்துக்களில் சில அடுத்த இதழில் இடம் பெறுகின்றன.

# ஸ்ரீ கிருஷ்ண கான சபா (ரிஜிஸ்டர்டு)

'கானவிகார்'

**தியாகராயநகர் - சென்னை-17 ❁ (போன்: 442806 & 441953)**

## கோகுலாஷ்டமி சங்கீத உற்சவம் - 1968

எல்லாக் கச்சேரிகளும் மாலை 5-30 லிருந்து 9 மணி வரை

### 1968 ஆகஸ்டு

சனி 10: எம். எஸ். சுப்புலக்ஷ்மி - வி. வி. சுப்ரமணியம் டி. கே. மூர்த்தி - டி. எச். விநயக்ராம்.

ஞாயிறு 11: மதுரை சோமு-எம். எஸ். கோபாலகிருஷ்ணன் முருகபூபதி - ஷியாம்சுந்தர்

வியாழன் 15: எம். எல். வசந்தகுமாரி - திருவள்ளூர்-சுப்ரமணியம்-தஞ்சாவூர் கிருஷ்ணமூர்த்திராவ் கே. எம். வைத்யநாதன்.

வெள்ளி 16; 7 p.m. எம்பார் விஜயராகவாச்சாரியார் - ஹரிகதை காலக்ஷேபம்

சனி 17: எஸ். பாலசந்தர் (வீணை) டி.எஸ். வீரராகவன் தஞ்சாவூர் உபேந்திரன்.

ஞாயிறு 18: செம்மங்குடி - லால்குடி - திருச்சி சங்கரன்.

ஞாயிறு 25: எம். டி. ராமனுதன்-லால்குடி-பாலக்காடு மணி

சனி 31: டி. என். கிருஷ்ணன் (வயலின் ஸோலோ) உமையாள்புரம் சிவராமன்.

### 1968 செப்டம்பர்

ஞாயிறு 1: வோலட்டி வெங்கடேஸ்வரலு - டி. ருக்மணி குருவாயூர் துரை.

சனி 7: எம். எஸ். கோபாலகிருஷ்ணன் } இரு வீணைகள் எம். எஸ். அனந்தராமன் திருச்சி சங்கரன்.

ஞாயிறு 8: பாலமுரளி கிருஷ்ணு - எம். சந்திரசேகரன் வேலூர் ராமபத்ரன்.

சனி 14: சிட்டிபாபு (வீணை) வேலூர் ராமபத்திரன்.

ஞாயிறு 15: லால்குடி & ஸ்ரீமதி பிரம்மானந்தம் (இருவீணைகள்) பாலக்காடு மணி.

சனி 21: டி. கே. ரங்காச்சாரி - டி. என். கிருஷ்ணன் உமையாள்புரம் சிவராமன்.

திங்கள் 30: புல்லாங்குழல் என். ரமணி - டி. என் கிருஷ்ணன் முருகபூபதி.

18-8-68 ஞாயிறு மாலை 5 மணிக்கு: ராஜ்ய சேவா நிருத செம்மங்குடி ஸ்ரீநிவாச அய்யர் அவர்கள் ஷஷ்டிஅப்த பூர்த்தி நடைபெற்றதை யொட்டி பாராட்டு விழா ○ ஸ்ரீ டி. டி. கிருஷ்ணமாச்சாரி அவர்கள் தலைமை தாங்க இசைந்துள்ளார்கள்

சீசன் டிக்கெட்டுகள்: ரூ. 100, 60, 35 & 20. தினசரி டிக்கெட்டுகள்: ரூ. 10, 5, 3 & 2.

அட்வான்ஸ் புக்கிங் தினசரி காலை 6 மணி முதல் மாலை 8 மணி வரை ○ மைக் & ஒலிபெருக்கி ஏற்பாடு: A. R. A. சென்னை-4

ஸ்டேஷனுக்கு வெளியில் வந்தாள். டிக்கட்டை வாங்கிக் கொண்ட ஸ்டேஷன் மாஸ்டர், மணியடிக்கப் போன கிழப் போர்ட்டர், சாட்டைக் கம்புகளை இரும்புக் கிராதிக்கிடையே நீட்டிச் சவாரி பிடிக்கவிழையும் வாடகை வண்டிக்காரர்கள் அத்தனை பேர் கண்களுக்கும் சம்பா ஏதோ ஓர் அதிசய உருவமாகக் காட்சியளித்தாள். வண்டியில் ஏறிக் கொண்டவுடன் சாலைப் புழுதியைக் கிளப்பி விட்டுக் கொண்டு ஓட ஆரம்பித்தது. வண்டியின் ஓட்டத்தில் பெண்ணின் கைகளைப் பார்த்த அப்பா தன் பெண் சம்பாவுக்கு — பெரியவர்கள் இருவர்களுக்கும் வராத இந்தப் பொன்னிறம் எப்படி வந்தது என்று நினைவில் அதிசயப்பட்டுக் கொண்டிருந்தார்.

வீட்டை அடைந்து அம்மா பெண்ணைப் பார்த்ததும் தன் கண்ணே படும்போல் இருக்கிறதே என்று பயந்தாள். இந்த இரண்டு மூன்று வருஷங்களில் அம்மாவும் ரொம்பவும் மாறிப் போயிருந்ததைச் சம்பா கவனித்தாள். இரண்டு வருஷங்களுக்குமுன்னர் ஒரு தடவை விடுமுறைக்கு வந்திருந்தபோது ஒரு நாள் ஏதோ காரியம் செய்து கொண்டிருந்த அம்மா அப்படியே மயக்கமாய் விழுந்து விட்டாள். அவளை அந்த நிலையிலேயே பக்கத்து டவுனிலிருந்த ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போனபோது ''அதிகமான ரத்த அழுத்த வியாதி. இனி அதிகமாக வேலைகள் செய்யாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்'' என்று சொல்லி விட்டார்கள்.

அதற்குப் பின் நாலைந்து மாதங்களில் கொல்லைக் கிணற்றிலிருந்து தண்ணீர் கொண்டு வரக்கூட முடியாத நிலை ஏற்பட்ட பிறகு, சாம்பசிவம் கிராமத்து வீட்டைக் காலி செய்து கொண்டு தெற்கே ஸ்டேஷன் மாஸ்டராக இருந்த பிள்ளையுடன் போய் விட்டார். இந்த இரண்டு வருஷங்களில் அவ்வப்போது நெல் அறுவடை சமயம் என்று எப்போதாவது இங்கே வந்து ஒரு மாதம் இருந்து விட்டுப் போவதுடன் மாத்திரம் இந்த ஊருடன் அவர்களுக்கு இருந்த பந்தம் ஒட்டிக் கொண்டிருந்தது.

சம்பா வந்து சேர்ந்த நாலைந்து நாட்கள் கழித்து அம்மாதான் முதலில் ஆரம்பித்தாள்: ''படிப்பெல்லாம்தான் முடிந்துபோய் விட்டதே..... சித்தப்பா ஏதாவது வரன் பார்த்திருக்கிறாரா ?'' என்று.

''நான் வேலை பார்க்கப் போகிறேன், அம்மா!'' என்று அறிவித்தாள் சம்பா.

''என்ன வேலை? படிச்சது போதாதா ? நீ வேலை வேறே பார்த்து எங்களுக்குச் சம்பாதித்துப் போடணுமா? அதெல்லாம் ஒண்ணும் வேண்டாம். நிலத்திலே வருகிற பணம் கடைசி வரையில் எங்களுக்குப் போதும்!'' என்றாள் அம்மா.

''பணத்துக்காக இல்லே அம்மா, வேலை! படிச்சுவிட்டுச் சும்மா என்ன செய்கிறது ?''

''சும்மா என்ன? கல்யாணம் பண்ணிக்கிறது.....''

''அதுவரையில்.....?''

''அதுவரையில்னா? அதற்கும் இன்னும் வருஷக் கணக்காகவா இருக்கிறது? இதோ பாரு சம்பா, நீ குழந்தை இல்லே. உனக்கும் கல்யாணம் ஆகிக் குழந்தை பிறந்து அவள் உன்னைப் போலப் பெரிய பெண்ணாக வளர்ந்து நிற்கிறபோதுதான் உனக்கு நான் படுகிற வேதனை புரியும்....'' என்று அம்மா கண்ணீர் விட்டாள்.

அதிகம் படிக்காதவளாக, கிராம வழக்கங்களிலேயே ஊறி, வயதும் அதிகம் ஆகாமல் இருந்த அந்த நாள் சம்பாவுக்கு நாலு இடங்களுக்குப் போய் வரன் பார்ப்பது சாம்பசிவத்துக்குத் தெரிந்த வேலையாக இருந்தது. இப்போது பி. ஏ. என்ற பட்டத்தையும் வாங்கிக் கொண்டு, தன் தலைக்கு மேல் வளர்ந்து அறிவிலும் அனுபவத்திலும்கூட எங்கோ எட்டாத உயரத்தில் இருப்பது போல் தோன்றும் இவளுக்காக எந்தப் பெரிய மனிதர் வீட்டுப் படியேறி, ஜாதகம் வாங்கி, அவர்கள் திருப்திப்படும்படி என்ன பேசுவது என்ற பிரமிப்பில் அவர் மலைத்துப் போயிருந்தார்.

அவர்கள் கிராமத்துக்கு வந்த வேலை முடிந்து மறுபடியும் பிள்ளையிடம் போகவேண்டிய நாள் வந்தது. காலையில் ஒரு ரயிலும் மாலையில் ஒரு ரயிலும் மாத்திரம் வரும் சின்ன ஸ்டேஷனான அந்த ஊருக்குச் சம்பாவையும் அழைத்துக் கொண்டு போய் வைத்துக் கொண்டு என்ன செய்வது என்று புரியாமல் பெற்றவர்கள் தவித்தார்கள். அப்போதுதான் சம்பா மறுபடியும் சொன்னாள்: ''அநேகமாக செப்டம்பர் ஆரம்பத்தில் சென்னைக்குப் போய் வேலையில் சேர வேண்டியிருக்கும்'' என்று.

''என்ன வேலை?'' என்று அம்மா கேட்டபோது சம்பா சொன்னாள்: ''ரிசப்ஷனிஸ்ட்.''

பெண் சொல்லும் வார்த்தைக்கு அர்த்தம் எதுவும் புரியாமல் தவிக்கும் அம்மாவின் முகத்தைப் பார்த்துச் சம்பா சொன்னாள். '' 'ரிசப்ஷனிஸ்ட்' என்றால் 'வரவேற்பாளர்' என்று அர்த்தம். பெரிய பெரிய கம்பெனி ஆபீசுகளில் வாசலில் நுழைந்ததும் தனி அறை இருக்கும். கம்பெனியில் யாரைப் பார்க்க வேண்டும் என்றாலும் ரிசப்ஷனிஸ்டைக் கேட்டுக் கொண்டுதான் போகணும். வந்தவர்களின் காரியங்களை அறிந்து கொண்டு அவர்கள் பார்க்கவேண்டியவர்களின் சௌகரியத்தையும் அனுசரித்து நேரம் முதலியவைகளை ஒழுங்கு செய்துகொடுக்க வேண்டும். இன்னும் எத்தனையோ வேலைகள்......''

''வேலை கிடைத்தே விட்டதா....?''

''அநேகமாக முக்கால்வாசி கிடைத்தமாதிரிதான். இண்டர்வ்யூ எல்லாம் ஆகிவிட்டது.''

''இதுவும் சித்தப்பா ஏற்பாடுதானா.....?''

''இன்னமும் அவன் பேச்சை ஏன் இழுக்கிறே ? அவன்தான் பெண்ணைக் கொண்டு போய் மெட்ராசிலே விட்டு விட்டு எங்கேயோ ஆசிரமம் என்று வடக்கே போய் விட்டானே, அடுத்த வருஷமே....!'' என்று அப்பா எரிந்து விழுந்தார்.

'' இதெல்லாம் சரி என்று எனக்குத் தோன்றவில்லை. என்னமோ சித்தப்பா வந்து கலைத்தார் என்று நாலு நாட்களில் நடக்க இருந்த கலியாணத்தை நிறுத்தினோம். இனியும் நீ வேலை, அது இது என்று சொல்லிக் கொண்டு போவது எனக்குக் கொஞ்சம் கூடப் பிடிக்கவில்லை'' என்றாள் அம்மா.

''சம்பளம் எவ்வளவு? எல்லாம் பேசியாகி விட்டதா?'' என்று அப்பா விசாரித்தார்.

''நானூறு ரூபாய்.....!''

அப்பா அதிர்ந்து போய் விட்டார். ''வாசலில் உட்கார்ந்து வருகிற வர்கள், போகிறவர்களின் கேள்வி களுக்குப் பதில் சொல்வதற்கு நானூறு ரூபாயா?'' என்று வாயைப்பிளந்தார்.

''வருகிறவர்கள் போகிறவர்களுக் குப் பதில் சொல்வது மாத்திரம் இல்லே. இன்னும் எத்தனேயோ வேலே உண்டு. அதெல்லாம் உங்களுக்குப் புரியாது''என்று முடித்து விட்டாள் சம்பா.

அப்பா, அம்மாவுடன் அண்ணு ஸ்டேஷன் மாஸ்டராக இருந்த ஊரில் ஒரு மாதம் இருந்து விட்டு வேலேக்கு உத்தரவு வந்ததும் சம்பா மறுபடியும் தனியாகச் சென்னேக்குக் கிளம்பி விட்டாள். அம்மாவுக்கும் அப்பா வுக்கும் அவள் ரயில் ஏறும்போது நெஞ்சில் நெருப்புத் துண்டம் ஒன்று வந்து அடைத்தது. இது எதற்கு ஆரம்பமோ, எப்படி ஆகுமோ, கோபாலசாமி ஆரம்பித்து வைத்தது எங்கே கொண்டு போய் விடுமோ என்று எண்ணித் தவித்தார்கள்.

## 3

மறுபடியும் மாதங்கள் இரண்டு வருஷங்களாக நீண்டன. இரண்டு முறை சம்பா லீவில் வந்தாள். அவ் வப்போது இருநூறு, முந்நூறு என்று பணம் அனுப்பினுள். அவள் வளர்ச் சிக்கும், அழகின் கவர்ச்சிக்கும் முடிவே இல்லேயோ என்று தடவைக்குத் தடவை புது அழகுடனும் நிறத்துட னும் பொலிவுடன் தோன்றினுள். ஒரு தடவை வேறு வேலேயாகச் சென்னேக்குப் போயிருந்த அண்ணு தங்கையைப் பார்க்க அவள் அலுவல கத்துக்குப் போனுன். அவன் வாழ்க்கை முழுதும் ஏதோ சின்னச் சின்ன ஸ்டேஷன்களில் வேலே பார்த்து, பேண்ட் போட்டுக் கொண்டு ரயிலில் வந்து இறங்கும் எல்லோரையும் ஏ.டி. எஸ். ஸாகவும், டி. டி. எஸ். ஸாகவும் எண்ணி நடுங்கி வாழ்ந்து பழகப் பட்டவன். அப்படிப்பட்ட அண்ணு, தலேயில் எண்ணெய்ப் பசையே காணு மல் என்னவோ மாதிரியான விசித்திர மான கொண்டை அலங்காரமும் உட லில் தவழ்ந்து விளேயாடுவது போல் தோற்றம் அளிக்கும் புடவையும், எந்தப் புது மனிதன் வந்து நின்ருலும் 'இவன் எதற்காக வந்திருக்கிருன்?' என்று கண்களாலேயே ஆராயும் விழிகளுமாக, மேஜையின் மீது இருக்கும் டெலிபோன்கள் ஒரே சம யத்தில் அலற அவற்றில் ஒன்றை ஒரு பக்கத்துக் காதிலும் மற்றொன்றை அடுத்த பக்கத்துக் காதிலும் வைத் துக் கொண்டு ஏககாலத்தில் பேசும்

இவன் உண்மையில் தன் தங்கைதானு என்று எண்ணி நாணமடைந்தான். எப்படியோ பார்த்துப் பேசிவிட்டு அவன் பார்த்ததைப் பெற்றவர்களிடம் வந்து சொன்ன போது அவர்கள் கவலைதான் உள்ளூற வேதனையாக உருவெடுத்தது.

ஒரு நாள் சாம்பசிவத்துக்குக் கடிதம் வந்தது. பிரித்துப் பார்த்த போது, ''இந்திரா சர்க்கரை ஆலை'' என்ற பெரிய அச்சில் தலைப் பிருந்த அதில், 'விசலூரில் புதிதாகச் சர்க்கரை ஆலை ஒன்று நிறுவிக் கொண்டிருப்பதாகவும், இந்த வருஷமே உற்பத்தி தொடங்க விருக்கும் அதில் வேலைக்குச் சேரும் பெரிய உத்தியோகஸ்தர்களுக்கு வீட்டு வசதி செய்து கொடுப்பதற்குப் பூட்டிக் கிடக்கும் அவர் வீட்டைத் தர முடியுமா?' என்று கேட்டு எழுதியிருந்தார்கள். வேண்டிய ரிப்பேர்களை அவர்களே செய்துகொண்டு மாதம் ஐம்பது ரூபாய் வாடகை தருவதாக எழுதியிருந்ததைப் படித்து ஆச்சரியப்பட்டுப் போனுர் சாம்பசிவம்.

சம்பா அவ்வப்போது அனுப்பும் பணத்துடன் கிராமத்து வீட்டு வாடகைப் பணம் ஐம்பது ரூபாயும் சேர்ந்து வர ஆரம்பித்தது. அவர் நிலங்களைப் பார்த்துக் கொண்டு வந்த குத்தகைக்காரர் அந்த வருஷம் நெல்லுக்குப் பதில் எல்லா வயல்களிலும் கரும்புச் சாகுபடி செய்யப்போவதாக எழுதியிருந்தார். இத்தனை அமர்க்களம் நடந்தும் அவரால் ஒரு தடவை ஊருக்குப் போய்ப் பார்த்து விட்டு வர முடியாமல் இருந்தது. தள்ளாமை. கடைசிக் காலத்தில் பண விஷயத்தில் கவலை இல்லாமல் வைத்த கடவுள் சம்பா என்ற பெண் உருவத்தில் பெரிய கல்லாகக் கழுத்தில் கட்டி விட்டாரே என்ற ஏக்கமும் கவலையுமே அவர் மனசை வாட்டி எடுத்தது. அதையே நினைத்து நினைத்து அவரும் சம்பாவின் தாயாரும் இரவு நேரங்களில் தூக்கம் கொள்ளாமல் தவித்தார்கள்.

ஒரு நாள், தபாலில் வந்த சம்பாவின் கடிதத்தைப் படித்த சாம்பசிவம் அயர்ந்தே போனுர். அவள் கல்யாணம் கிட்டத்தட்ட நிச்சயமாகி விட்டதாம். எஞ்சினியர் ஒருவர் அவளைக் காதலிக்கிறாராம். பண விஷயம், அது இது என்றெல்லாம் அதிகமான பேச்சுக்கள் எழாதாம். அப்பாவும் அம்மாவும் அவரை ஒரு தடவை பார்த்துச் சம்மதம் கொடுக்க வேண்டுமாம்.

சாம்பசிவத்துக்கு எதுவுமே புரியாத புதிராக இருந்தது. சம்பாவின் கடிதம் மாத்திரம் அல்ல. அடுத்த வாரம் அந்தக் கடிதத்தின் தொடர்ச்சியாக அவர், மனைவி, பிள்ளையுடன் சென்னைக்குப் போனதும், திக்குத் திசை புரியாத அவ்வளவு பெரிய ஊரில் சம்பா ஒரு கைச் சொடுக்கில் தெருவில் போகும் டாக்சியை நிறுத்தி அவர்களை ஏற்றிக் கொண்டு எங்கெங்கோ அழைத்துக்கொண்டு போய் அறிமுகப்படுத்திய பெருமையும் அவளுக்கு வர இருந்த கணவரைப் பார்த்தவுடன் என்ன பேசுவது என்று புரியாமல் திகைத்த திகைப்பும், பின்னர் கல்யாணம் எளிய முறையில் சென்னையிலேயே நடந்ததும் — எல்லாம் ஏதோ கனவில் நடப்பன மாதிரியே அவருக்குத் தோன்றியது.

சாம்பசிவத்தின் அதிர்ச்சி அத்துடன் முடிந்து போய்விடவில்லை.

எஞ்சினியரான சம்பாவின் கணவர் விசலூர் சர்க்கரை ஆலையிலே உயர்தர அதிகாரியாக வந்து சேர்ந்தார்.

சம்பா புதிப்பிக்கப்பட்ட தன் வீட்டில் கம்பெனி கொடுக்கும் வாடகைப் பணத்தை வாங்கிக் கொண்டு, அதில் 'குடி' யிருக்க ஆரம்பித்தாள்!

## 4

சாம்பசிவம் விசலூருக்குப் 'பெண் வீட்டு'க்கு வந்திருந்தார். ஊருக்கு வந்திருக்கும் சர்க்கரை ஆலை வேறு பல மாற்றங்களைக் கொண்டு வந்திருக்கிறது. டவுனுக்குப் புது தார் ரோடு அமைந்திருக்கிறது. அதில் அடிக்கடி டவுன் பஸ் ஒன்று வந்து ஊரைத் தொடுகிறது. அவருக்கு நினைவு தெரிந்ததிலிருந்து நெல் வயல்களைத் தவிர, வேறு பயிரையே பார்த்திராத அவர் கண்களில் ஊர் முழுதும் ஆள் உயரத்துக்கு மேலாகக் காடாகக் கரும்புத் தோட்டங்கள் வளர்ந்திருந்தன. தன் சொந்த வீட்டுக்கே மாதம் பிறந்ததும் வாடகை வருகிறது!

பட்டாமணியார் வீட்டுத் திண்ணையில் சீட்டாட்டக் கோஷ்டி முன்னை விட உற்சாகத்துடன் ஈடுபட்டிருக்கிறது. அந்தக் கோஷ்டியின் நடுநாயகமாக இப்போது முப்பது வயதுக்குள் தலையில் வழுக்கை விழுந்து தொந்தியும், தொப்பையுமாக, இடுப்பு வேஷ்டி நழுவியது தெரியாமல் வாயிலிருந்து சொட்டும் புகையிலைச் சாற்றைப் புறங்கையால் வழித்தபடியே சுந்தரம் ஆட்டத்தில் லயித்திருக்கிருன். அவனைச் சுற்றியும் கழுத்திலும் மடியிலுமாக நாலு குழந்தைகள் அப்பா சீட்டாடும் அழகைப் பார்த்து ரசித்துக்கொண்டிருக்கின்றன.

சம்பா தாழ்வாரத்தில் வெய்யிலுக்கு மறைவாக வெட்டி வேர்த் தட்டியில் பணியாள் தண்ணீர் கொட்டுவதைப் பார்த்துவிட்டு ஈசிச்சேரில் அமர்ந்து ஏதோ புத்தகத்தைப் படித்தவாறிருக்கிருள். கூடத்தில் நாலைந்து கண்ணுடி அலமாரிகளில் பெரியதும் சிறியதுமாக — நூற்றுக்கணக்கான புத்தகங்கள் சம்பாவின் கையும் கண்ணும் படுவதற்காகக் காத்துக்கொண்டிருக்கின்றன.

உள்ளே இருந்து வந்த சமையற்காரர் ''மத்தியானம் என்ன டிபன் செய்வது?'' என்று சம்பாவைக் கேட்கிறார். ''அப்பாவைக் கேட்டுக் கொண்டு செய்யுங்கள்'' என்று அவரை அப்பாவிடம் அனுப்புகிருள் சம்பா.

அவளுக்கு எப்போதோ ஒரு தடவை சித்தப்பா சொன்னது மனசில் ஓடுகிறது. ''யுகம் என்ருல் பிரளயமும் இல்லை, ஆலிலைக் கிருஷ்ணனும் இல்லை. யுகம் என்ருல் நாம் காணும் இதோ இந்த உலகத்தில் ஏற்படும் சில மாறுதல்கள்....''

சித்தப்பாவைப் பற்றி நினைத்ததும் சம்பாவுக்குக் கண்களில் கண்ணீர் பொங்குகிறது. உள்ளே நுழையும் அப்பாவைப் பார்த்ததும் அவருக்குத் தெரியாமல் கண்களைத் துடைத்துக்கொள்கிருள்.



## விடாக்கண்டன் கொடாக்கண்டன்

சேர சோழ பாண்டியர் காலத்திலேயே ஜூடோ சண்டை தமிழகத்தில் பிரபலமாக இருந்தது! அதுமட்டுமா? டுவிஸ்ட் டான்ஸுக்குக்கூட அந்த நாளிலேயே மவுஸு உண்டு! இதையெல்லாம் இந்தப் படத் தயாரிப்பாளர் நமக்கு உணர்த்துகிறார்!

மகாராஜாக்களுக்கு இனி மானியம் இல்லை என்று காங்கிரஸ் முடிவெடுக்க நினைக்கிறது. அவர்கள் இனி தங்களிடம் ஏதேனும் தங்கப் பதக்கம் உள்ளதா? அதில் பாதாள பைரவி கோயிலில் புதைக்கப்பட்டுள்ள செல்வம் பற்றிய குறிப்பு ஏதேனும் இருக்கிறதா என்று ஆராயத் தொடங்கலாம்.

மூவேந்தர்களது ஒருமைப்பாட்டைச் சிலாகிக்க எடுக்கப்பட்ட படம் தமிழகத்தின் பெருமைப்பாட்டுக்கு உதவாது. தமிழ் வளர்த்த மூவேந்தர் காலத்தில் எத்தனை எத்தனை புலவர்கள்! அவர்களில் ஒருவர் கூடப் புரட்சிதாசனை வெல்ல முடியாது—இப்படத்தில் இடம் பெறுவது போன்ற ஆபாசமான பாடல்களை எழுதுவதில்.

தெலுங்குப் படத்திலிருந்து தமிழாக்கம் செய்யப்பட்டு வந்துள்ள படம் 'விடாக் கண்டன், கொடாக்கண்டன்!' இந்தப் படத்தை டைரக்ட் செய்தவர் பி. விட்டாலாச்சார்யா. என். டி. ராமராவ், ஜெயலலிதா நடிக்கும் படமானாலும் சுவையில்லை.

தமிழக மக்கள் பணத்தைப் பொறுத்த வரை கொடாக்கண்டர்களா யிருப்பார்களேயானால் படாதிபதிகளும் இது போன்ற படு மட்டமான படங்களைத் தயாரிப்பதில் விடாக் கண்டர்களாக விளங்க மாட்டார்கள்!




## எதிரும் புதிரும் (ஹிந்தி)

பெரும்பாலான படங்களில் காதலி ஒரு பூனை; காதலன் ஓர் எலி. தனக்கு இரையாகப் போகும் எலியைப் பூனை எப்படியெல்லாம் விட்டுப் பிடித்து வேடிக்கை பார்க்குமோ, அப்படிக் காதலனை ஆட்டிப் படைத்து, வாட்டி வதக்கி விடுவாள் காதலி. இப்படிக் காதல் கொலையுறும் நேரத்திலே ரசிகர்கள் சோர்ந்து விடுவார்கள். ஆனால் காதலன் சோர முடியாது. 'இடைவேளை'க்குப் பிறகும் படத்தை ஓட்டிச் செல்ல வேண்டிய பெரும் பொறுப்பு அவனுக்கு உண்டு அல்லவா?

'ஆம்னே ஸாம்னே' என்னும் இந்த ஹிந்திப் படத்தில் சசி கபூரும் ஷர்மிளா டாகுரும் இப்பணியைத் திறம்பட நிர்வகிக்கிறார்கள். காதலை முடித்துக் கொண்டு 'இரை'முக்கு வருகிறார்கள். அந்தக் கொலை முயற்சியாவது படத்துக்குக் கைகொடுத்து உதவுகிறதா என்றால், ஷர்மிளா டாகுர்தான் அதற்கும் தலையைக் கொடுக்க வேண்டியிருக்கிறது. இல்லாவிட்டால் இனம் தெரியாத கரம் ஒன்று பின்னாலிருந்து தன்னைப் பிடித்துத் தள்ள வேண்டுமென்பதற்காக மேடு ஏறுவாளா? தண்ணீரில் விழுந்து அவள் தப்பிய அதிசயத்தை என்னவென்பது? நல்ல வேளையாக அந்த அதிசயத்தைக் காட்டாமல் விட்டார்களோ, பிழைத்தோமோ?

கதை வளர வளரச் சிக்கல்கள் அதிகரிக்க வேண்டாமா? இம்மரபை ஒட்டிக் கணவனே மனைவியின் கழுத்தை நெரிக்கப் போகிறான். தடயம் கிடைத்துவிடக் கூடாதே என்பதற்காகக் கைகளைக் கைக்குட்டையால் மறைத்துக் கொள்ளுகிறான். காரணமில்லாமலா அவன் இப்படி ஒரு காரியம் செய்கிறான்? அவன் அப்படிச் செய்யாவிட்டால் மனைவி தன் கணவனையே கொலைகாரனாகக் கற்பனை செய்து கொள்ள முடியுமா?

இப்படியாகக் குற்றம் குறைகளுக்கான இலக்கணம் இம்மியும் வழுவாமல் எடுக்கப்பட்டிருக்கும் படம் 'ஆம்னே ஸாம்னே'.



ஆயிரமாயிரம் வாசக அன்பர்களின் உள்ளங்களைக் கொள்ளை கொண்ட

அமரர் 'கல்கி'யின்

# பொன்னியின் செல்வனை

"மீண்டும் வருக! வருக!" என

# லிப்கோ பதிப்பகம்

வாழ்த்தி வரவேற்கிறது!

★

இப்பொன்னாளில்
இல்லத்தரசிகளுக்கு விசேஷ சலுகையில் லிப்கோ வெளியீடுகளைப் பெருமகிழ்ச்சியுடன் அறிமுகப்படுத்துகிறோம்:




1. குடித்தனப் பாங்கு (திருமதி ப்ருந்தா வரதராஜன்)
   —152 பக்கங்கள் ... ரூ. 2.00
2. குழந்தை வளர்ப்புக் கலை (திருமதி ரங்கநாயகி ரங்கராஜன்)
   —200 பக்கங்கள் ... ரூ. 2.60
3. குழந்தைக்குப் பெயரிடுதலும் சீராட்டுதலும்
   —108 பக்கங்கள் ... ரூ. 1.30
4. குழந்தைக்கு வீட்டு வைத்தியம்
   (வைத்திய விசாரதை T. S. ஜனககுமாரி) ரூ. 0.80
5. இயற்கை தரும் இன்மருந்துகள்
   (வைத்திய விசாரதை T. S. ஜனககுமாரி)
   —608 பக்கங்கள் ... ரூ. 4.00
6. ஆங்கில ஆசிரியன் — 5-ம் பதிப்பு
   —432 பக்கங்கள் ... ரூ. 3.60
7. ஸ்ரீ மஹா பக்த விஜயம் (திருமதி குகப்ரியை)
   —496 பக்கங்கள் ... ரூ. 3.50
8. தமிழ்-தமிழ்-ஆங்கில அகராதி—2-ம் பதிப்பு
   —764 பக்கங்கள் ... ரூ. 6.80
9. ஸகல காரியஸித்தியும் ஸ்ரீ தேவீ பாகவதமும்
   —184 பக்கங்கள் ... ரூ. 2.25
10. ஸ்தோத்ரமாலை ... ரூ. 1.30




**விசேஷ சலுகை:**

மேற்கண்டவற்றில் எவையேனும் 3 பிரதிகளுக்கு ஒரே சமயத்தில் ஆர்டர் தந்தால் தபாற் செலவு இலவசம். பூரா விலையையும் முன் பணமாக 31-8-1968-க்குள் பதிப்பகத்தாருக்கு அனுப்பி வைக்கவேண்டும். (V. P. P. இல்லை.)

பதிப்பகத்தார்:




## தி லிட்டில் ப்ளவர் கம்பெனி

தி. நகர் :: சென்னை-17

எம். தாமோதரம் & கம்பெனி, 108, கார்ப்போரேஷன் பழக் கடை, சென்னை-1 என்னும் விலாஸத்திலும் மற்றும் ஹிக்கின்பாதம்ஸ் ரெயில்வே ஸ்டால்களிலும் கிடைக்கும்.

NALIN



முதலாவது அத்தியாயம்

# ஆடித் திருநாள்

ஆதி அந்தமில்லாத காலவெள்ளத்தில் கற்பனை ஓடத்தில் ஏறி நம்முடன் சிறிது நேரம் பிரயாணம் செய்யுமாறு நேயர்களை அழைக்கிறோம். விநாடிக்கு ஒரு நூற்றாண்டு வீதம் எளிதில் கடந்து இன்றைக்குத் தொள்ளாயிரத்து எண்பத்திரண்டு ஆண்டுகளுக்கு முந்திய காலத்துக்குச் செல்வோமாக.

தொண்டை நாட்டுக்கும் சோழநாட்டுக்கும் இடையில் உள்ள திருமுனைப்பாடி நாட்டின் தென் பகுதியில், தில்லைச் சிற்றம்பலத்துக்கு மேற்கே இரண்டு காத தூரத்தில், அலை கடல் போன்ற ஓர் ஏரி விரிந்து பரந்து கிடக்கிறது. அதற்கு





வீர நாராயண ஏரி என்று பெயர். அது தெற்கு வடக்கில் ஒன்றரைக் காத நீளமும், கிழக்கு மேற்கில் அரைக்காத அகலமும் உள்ளது. காலப்போக்கில் அதன் பெயர் சிதைந்து இந்த நாளில் 'வீராணத்து ஏரி' என்ற பெயரால் வழங்கி வருகிறது.

ஆடித் திங்கள் பதினெட்டாம் நாள் முன் மாலை நேரத்தில் அலைகடல்போல் விரிந்து பரந்திருந்த வீர நாராயண ஏரிக்கரைமீது ஒரு வாலிப வீரன் குதிரை ஏறிப் பிரயாணம் செய்து கொண்டிருந்தான். அவன் தமிழகத்து வீர சரித்திரத்தில் புகழ்பெற்ற வாணர் குலத்தைச் சேர்ந்தவன். வல்லவரையன் வந்தியத் தேவன் என்பது அவன் பெயர். நெடுந்தூரம் பிரயாணம் செய்து அலுத்துக் களைத்திருந்த அவனுடைய குதிரை மெள்ள மெள்ள நடந்து சென்று கொண்டிருந்தது. அதைப்பற்றி அந்த இளம் வீரன் சிறிதும் கவலைப்பட

1

# சிறுவர் விருந்து



தயாரிப்பு: வாண்டுமாமா



இதைப் பார்த்த உடன் சுருண்டு சுருண்டு செல்லும் ஒரே கோடுபோலிருக்கும். ஆனால் நன்றாக உற்றுப் பார்த்தால் உண்மை விளங்கும். வட்டத்துள் வட்டமாகப் பல வட்டங்களாலானது இந்தக் கோலம்.

உன்
கண்
உன்னை
ஏமாற்றினால்...!



## இயற்கை விநோதம்

குதிரைகளால் நின்றுகொண்டே தூங்க முடியும். படுத்துத் தூங்குவதை விட நின்றபடி தூங்கும்போதுதான் அவைகளால் நிம்மதியாகத் தூங்க முடிகிறது என்று ஆராய்ச்சியில் கண்டிருக்கிறார்கள். தசைநார்களின் கட்டுப்பாட்டுக்கும் மூளையின் இயக்கத்துக்கும் நேரடியான தொடர்பு இல்லாததே குதிரைகளால் இப்படி நின்ற நிலையில் தூங்குவதற்குச் சாத்தியமாகிறது. தூங்கும் குதிரைகளின் தசைநார்கள் துவளுவதுண்டு. அப்போது விரைப்பான கால்கள் மடங்குவதுண்டு. ஆனால் குதிரைகள் தூக்க நிலையிலேயே இதைச் சமாளித்துக் கொண்டு விடும். நின்றபடி தூங்கும் குதிரைகள் கீழே விழுவது ரொம்ப அபூர்வம். சில குதிரைகளால் மாதக் கணக்கில் கீழே படுக்காமலே வாழ முடியும்.



குதிரையைப் பற்றி இன்னும் சில சுவையான விஷயங்களைச் சொல்லட்டுமா? உலகில் முதலில் தோன்றிய குதிரைக்கு இயோஹிபஸ் (Eohippus) என்று பெயர். நாய்க்குட்டியைப்போலத்தான் இவை இருந்தன. இப்போதைப் போல இயோஹிபஸ்களுக்குக் குளம்புகள் கிடையாது. விரல்கள் இருந்தன. இந்த இயோஹிபஸ்கள் காலப் போக்கில் வளர்ந்தன. ஓநாயின் அளவு பெரிதானபோது இவற்றிற்கு மெஸோஹிப்பஸ்(Mesohippus) என்று பெயர். ஏறத்தாழத் தன்னுடைய இன்றைய உருவத்தைக் குதிரை அடைந்தது எப்போது தெரியுமா? இருபது மில்லியன் ஆண்டுகளுக்கு முன்னால். அப்போது அதற்கு மெரிக்ஹிப்பஸ் (Merichippus) என்று பெயர்.

## பதினெண் கீழ்க்கணக்கு

| | | | |
|---|---|---|---|
| 1 | | 8 | |
| | 6 | | 3 |
| 6 | | 3 | |
| | 1 | | 8 |

மேலே இங்குள்ள கட்டங்களில் சில எண்களை எழுதியிருக்கிறேன். சில கட்டங்கள் காலியாக உள்ளன. காலியான கட்டங்களில் அவன் எழுதியுள்ள அதே எண்களைத் தக்கபடி மாற்றி எழுதினால் அந்தக் கட்டங்களைக் கீழும் மேலும் இடமும் வலமும் குறுக்கேயும் எப்படிக் கூட்டினாலும் பதினெட்டு வருமாம். உன்னால் எழுத முடியுமா?

## இதற்கும் ... அதற்கும்

குரங்குகள் 'மாடர்ன் ஆர்ட்' வரையும்போது எழுதிய வரைபடங்கள்தான் கீழே உள்ள இரண்டும். பார்ப்பதற்கு ஒன்றே போலத் தோன்றினாலும் இடப் பக்கத்துப் படத்தோடு ஒப்பிடும்போது வலப் பக்கப் படத்தில் எட்டு வித்தியாசங்கள் உள்ளன. அவை எவை என்று கண்டுபிடியுங்கள், பார்க்கலாம்.





# குதிரை லாடம்

கந்தன் ஓர் அழகிய முயல் குட்டி. ஒரு நாள் தன் தகப்பனாருடன் சந்தைக்கு நடந்து போய்க் கொண்டிருந்தான். வழியில் ஒரு பளபளப்பான புதிய குதிரை லாடம் கிடந்தது. அதைக் கண்ட தகப்பனார், ''கந்தா! அதை எடுத்துப் பையில் போட்டுக் கொள்'' என்றார். கந்தனுக்கு அது கௌரவக் குறைவாகப்பட்டது. 'கேவலம் இந்த இரும்புத் துண்டுக்காகக் குனிந்து அதை எடுத்துப் பையில் போட்டுக் கொள்ளுவதாவது' என்று எண்ணினான். ஆகவே, ''இந்த இரும்பு லாடத்தினால் என்னப்பா உபயோகம்? அது வேண்டாம்'' என்று சொல்லி மேலே நடந்தான். ஆனால் அவன் தகப்பனார் பதில் ஏதும் சொல்லவில்லை. தாமே குனிந்து அந்த லாடத்தை எடுத்து வைத்துக் கொண்டு நடந்தார்.

சந்தையில் வாங்க வேண்டிய பொருளை வாங்கியபின் தாம் வழியில் எடுத்த லாடத்தை லாடமடிக்கும் தொழிலாளியிடம் கொடுத்தார். அவன் அதற்காகப் பத்து பைசா கொடுத்தான். அந்தப் பத்துப் பைசாவுக்கு இரண்டு காரட்டுகள் வாங்கி மடியில் கட்டிக் கொண்டார் அவன் தந்தை.

இருவரும் வீடு திரும்பிக் கொண்டிருந்தார்கள். உச்சி வெய்யில். சாலையில் மரங்கள் கூட இல்லை. வீட்டை அடைய இன்னும் மூன்று மைல் நடந்தாக வேண்டும். கந்தனுக்கோ தாகம் நாக்கை வறட்டியது. கண்ணுக்கெட்டிய தூரம் வரை நீர்நிலைகளே கிடையாது. கந்தனுக்குக் கண் இருண்டது. தாகம் தாங்க முடியவில்லை. முன்னால் தலையில் மூட்டையுடன் சென்றுகொண்டிருந்த அவன் தகப்பனார் கொஞ்சமும் களைப்படையவில்லை. கந்தனோ அவருக்குச் சமமாக நடக்க முடியவில்லை. தள்ளாடி வந்து கொண்டிருந்த அவன் கண்கள் வியப்பில் விரிந்தன. பளபளக்கும் காரட்டொன்று அவன் அப்பாவின் மடியிலிருந்து நழுவி விழுந்தது. கந்தன் ஆவலோடு அதை எடுத்துச் சுவைத்தான். தாகத்துக்கு அது அமுதமாக இருந்தது. அடுத்து இன்னொரு துண்டு காரட், இன்னொன்று, இன்னொரு துண்டு – இப்படி துண்டு துண்டாகக் கீழே விழ இவன் குனிந்து குனிந்து அவைகளைப் பொறுக்கி எடுத்துச் சுவைத்துத் தாகம் தணிந்தான். ஒரு பெரிய ஆலமரம் எதிர்ப்பட்டது. அதன் நிழலில் போய் நின்ற அவன் தகப்பனார் புன்முறுவலுடன் தம் மகனைப் பார்த்து, ''போகும்போது ஒரு தடவை குனிந்து அந்தக் குதிரை லாடத்தை நீ எடுத்திருந்தால் இப்போது இத்தனை தடவை நீ குனிந்து குனிந்து பொறுக்கி எடுத்திருக்கவேண்டாம். மடியிலே கட்டிக் கொண்டு மகிழ்ச்சியோடு சுவைத்துக் கொண்டு வந்திருக்கலாமே. உனக்கு உழைப்பின் உயர்வை எடுத்துக் காட்டவே, எந்தச் சிறிய பொருளையும் அலட்சியப்படுத்தக் கூடாது என்பதை அறிவுறுத்தவே நான் காரட்டுத் துண்டங்களை நழுவ விட்டுக்கொண்டு வந்தேன்'' என்றார். கந்தன் வெட்கத்தினால் தலைகுனிந்தான்.

| | | | |
|---|---|---|---|
| 1 | 3 | 8 | 6 |
| 8 | 6 | 1 | 3 |
| 6 | 8 | 3 | 1 |
| 3 | 1 | 6 | 8 |

விடைகள் :

(1) குரங்கின் வலப்பக்கத்திலுள்ள பிரஷ்களில். (2) பிரஷ் உள்ள பாத்திரத்தின் கழுத்தில். (3) நீட்டும் படத்தின் வலப்பக்க மூலையிலுள்ள கோடுகளுள். (4) ஒட்டைச் சிவிங்கியின் காது. (5) குரங்கின் இடது தோளுக்கு மேலுள்ள கம்பத்தின் கனம். (6) ஒட்டைச்சிவிங்கியின் உடலின் புள்ளிகள் (7) கருப்பு வர்ண ஜாடியில். (8) 'கலபம்' என்பது 'களப'மாகியுள்ளது.

வில்லே. அகண்டமான அந்த வீரநாராயண ஏரியின் தோற்றம் அவன் உள்ளத்தை அவ்வளவாக வசீகரித்திருந்தது.

ஆடிப் பதினெட்டாம் பெருக்கன்று சோழ நாட்டு நதிகளிலெல்லாம் வெள்ளம் இரு கரையும் தொட்டுக் கொண்டு ஓடுவது வழக்கம். அந்த நதிகளிலிருந்து தண்ணீர் பெறும் ஏரிகளும் பூரணமாக நிரம்பிக் கரையின் உச்சியைத் தொட்டுக் கொண்டு அலேமோதிக் கொண்டிருப்பது வழக்கம். வட காவேரி என்று பக்தர்களாலும் கொள்ளிடம் என்று பொது மக்களாலும் வழங்கப்பட்ட நதியிலிருந்து வடவாற்றின் வழியாகத் தண்ணீர் வந்து வீர நாராயண ஏரியில் பாய்ந்து அதை ஒரு பொங்குங் கடலாக ஆக்கியிருந்தது. அந்த ஏரியின் எழுபத்து நான்கு கணவாய்களின் வழியாகவும் தண்ணீர் குமுகுமுவென்று பாய்ந்து சுற்றுப் பக்கத்தில் நெடுந்தூரத்துக்கு நீர் வளத்தை அளித்துக் கொண்டிருந்தது. அந்த ஏரித் தண்ணீரைக் கொண்டு கண்ணுக்கெட்டிய தூரம் கழனிகளில் உழவும் விரை தெளியும் நடவும் நடந்து கொண்டிருந்தன. உழுது கொண்டிருந்த குடியானவர்களும் நடவு நட்டுக் கொண்டிருந்த குடியானவப் பெண்களும் இனிய இசைகளில் குதூகலமாக அங்கங்கே பாடிக் கொண்டிருந்தார்கள். இதையெல்லாம் கேட்டுக் கொண்டு வந்தியத்தேவன் களேத்திருந்த குதிரையை விரட்டாமல் மெதுவாகவே போய்க் கொண்டிருந்தான். ஏரிக்கரை மீது ஏறியதிலிருந்து அந்த ஏரிக்கு எழுபத்து நான்கு கணவாய்கள் உண்டு என்று சொல்லப்படுவது உண்மை தானு என்று அறிந்துகொள்ளும் நோக்கத்துடன் அவன் கணவாய்களே எண்ணிக் கொண்டே வந்தான். ஏறக்குறைய ஒன்றரைக் காத தூரம் அவன் அந்த மாபெரும் ஏரிக்கரையோடு வந்த பிறகு எழுபது கணவாய்களே எண்ணியிருந்தான்.

ஆகா! இது எவ்வளவு பிரம்மாண்டமான ஏரி! எத்தனே நீளம்! எத்தனே அகலம்! தொண்டை நாட்





டில் பல்லவப் பேரரசர்களின் காலத்தில் அமைத்த ஏரிகளையெல்லாம் இந்த ஏரிக்கு முன்னால் சிறிய குளங் குட்டைகள் என்றே சொல்லத் தோன்றும் அல்லவா? வட காவேரியில் வீணாகச் சென்று கடலில் விழும் தண்ணீரைப் பயன்படுத்துவதற்காக மதுரை கொண்ட பராந்தகரின் புதல்வர் இளவரசர் இராஜாதித்தர் இந்தக் கடல்போன்ற ஏரியை அமைக்க வேண்டும் என்று எண்ணினாரே? எண்ணி அதைச் செயலிலும் நிறைவேற்றினாரே? அவர் எப்பேர்ப்பட்ட அறிவாளியாக இருந்திருக்க வேண்டும்? வீர பௌருஷத்திலேதான் அவருக்கு இணை வேறு யார்? தக்கோலத்தில் நடந்த போரில் தாமே முன்னிலையில் யானைமீது ஏறிச் சென்று போராடினார் அல்லவா? போராடிப் பகைவர்களின் வேலை மார்பிலே தாங்கிக் கொண்டு உயிர் நீத்தார் அல்லவா? அதனால் 'யானைமேல் துஞ்சிய தேவர்' என்ற சிறப்புப் பெயர் பெற்று வீர சொர்க்கம் அடைந்த வீராதி வீரர் அல்லவா?

இந்தச் சோழ குலத்து மன்னவர்களே அதிசயமானவர்கள்தாம்! அவர்கள் வீரத்தில் எப்படியோ, அப்படியே அறத்திலும் மிக்கவர்கள். அறத்தில் எப்படியோ அப்படியே தெய்வபக்தியில் சிறந்தவர்கள்.

இப்படியெல்லாம் எண்ணிக் கொண்டு வீர நாராயண ஏரிக்கரையின் தென் கோடிக்கு வந்தியத்தேவன் வந்து சேர்ந்தான். அங்கே வடகாவேரியிலிருந்து பிரிந்து வந்த வடவாறு ஏரியில் வந்து சேரும் காட்சியைக் கண்டான். ஏரிக் கரையிலிருந்து சிறிது தூரம் வரையில் ஏரியின் உட்புறம் படுகையாக அமைந்திருந்தது. வெள்ளம் வந்து மோதும் போது கரைக்குச் சேதம் உண்டாகாமல் இருக்கும் பொருட்டு அந்தப் படுகையில் கருவேல மரங்களையும் விளா மரங்களையும் நட்டு வளர்த்திருந்தார்கள். கரையோரமாக நாணல் அடர்த்தியாக வளர்ந்திருந்தது. தென்மேற்குத் திசையிலிருந்து இருபுறமும் மர வரிசையுடன் வடவாற்றின் புது வெள்ளம் வந்து வீரநாராயண ஏரியில் கலக்கும் காட்சி சற்றுத் தூரத்திலிருந்து பார்க்கும்போது அழகிய வர்ணக்கோலம் போட்டதுபோல் காணப்பட்டது.

இந்த மனோகரமான தோற்றத்தின் இனிமையையும் குதூகலத்தையும் அதிகப்படுத்தும்படியான இன்னும் சில காட்சிகளை வந்தியத்தேவன் அங்கே கண்டான்.

அன்று பதினெட்டாம் பெருக்குத் திருநாள் அல்லவா? பக்கத்துக் கிராமங்களிலிருந்து, தந்த நிறத் தென்னங் குருத்துகளால் சப்பரங்கள் கட்டி இழுத்துக் கொண்டு கும்பல் கும்பலாக மக்கள் அங்கே வந்து கொண்டிருந்தார்கள். ஆண்களும் பெண்களும் குழந்தைகளும் புதிய ஆடைகள் அணிந்து, விதவிதமான அலங்காரங்கள் செய்து கொண்டு வந்திருந்தார்கள். பெண்களின் கூந்தல்களைத் தாழம்பூ, செவந்திப் பூ, மல்லிகை, முல்லை, இருவாட்சி, செண்பகம் முதலிய மலர்கள் கொத்துக் கொத்தாய் அலங்கரித்தன. கூட்டாஞ்சோறும், சித்திரான்னமும் எடுத்துக் கொண்டு பலர் குடும்பங் குடும்பமாக வந்திருந்தார்கள். சிலர் ஏரிக் கரையில் தண்ணீர் ஓரமாக நின்று கொண்டு, சித்திரான்னம் முதலியவற்றைக் கமுகு மட்டைகளில் போட்டுக் கொண்டு உண்டார்கள். இன்னும் சில தைரியசாலிகள் சிறிது தூரம் தண்ணீரில் நடந்து சென்று வடவாற்றங் கரையை அடைந்து அங்கு நின்றபடி சாப்பிட்டார்கள். குழந்தைகள் சிலர் சாப்பிட்ட கமுகு மட்டைகளைக் கணவாய்களின் ஓரமாய் எறிய, அந்த மட்டைகள் கணவாய்களின் வழியாக ஏரிக்கரைக்கு வெளியே விழுந்தடித்து ஓடி வருவதைக் கண்டு கைகொட்டிச் சிரித்தார்கள். ஆடவர்களில் சில வம்புக்காரர்கள் தங்கள் காதலிகளின் கூந்தல்களில் சூடியிருந்த மலர்களை அவர்கள் அறியாமல் எடுத்துக் கணவாய் ஓரத்தில் விட்டு ஏரிக்கரைக்கு மறு பக்கத்தில் அவை ஓடி வருவதைக் கண்டு மகிழ்ந்தார்கள்.

இதையெல்லாம் பார்த்துக் கொண்டு சிறிது நேரம் வல்லவரையன் அங்கேயே நின்று கொண்டிருந்தான். அங்கு நின்ற பெண்களில் இனிய குரலையுடைய சிலர் பாடுவதையும் காது கொடுத்துக் கேட்டான். அவர்கள் ஓடப் பாட்டும், வெள்ளப் பாட்டும், கும்மியும் சிந்தும் பாடினார்கள். மிகுந்த குதூகலத்துடன் பாடினார்கள்.

**"வடவாறு பொங்கி வருது**
**வந்து பாருங்கள், பள்ளியரே!**
**வெள்ளாறு விரைந்து வருது**
**வேடிக்கை பாருங்கள் தோழியரே!**
**காவேரி புரண்டு வருது**
**காண வாருங்கள், பாங்கியரே!"**

என்பன போன்ற வெள்ளப் பாட்டுக்கள் வந்தியத்தேவன் செவிகளில் இன்ப வெள்ளமாகப் பாய்ந்தன.

வேறு சிலர் சோழகுல மன்னர்களின் வீரப் புகழைக் கூறும் பாடல்களைப் பாடினார்கள். முப்பத்திரண்டு போர்களில் ஈடுபட்டு உடம்பில் தொண்ணூற்றாறு காயங்களை ஆபரணங்களாகப் பூண்டிருந்த விஜயாலய சோழனின் வீரத்தைச் சில பெண்கள் பாடினார்கள். அவனுடைய மகன் ஆதித்த சோழனுடைய வீரத்தைப் போற்றி, அவன் காவேரி நதி உற்பத்தியாகும் இடத்திலிருந்து கடலில் சேரும் இடம் வரையில் அறுபத்துநாலு சிவாலயங்கள் எடுப்பித்ததை ஒரு பெண் அழகிய பாட்டாகப் பாடினாள். ஆதித்தனுடைய மகன் பராந்தக சோழ மகாராஜன் பாண்டியர்களையும் பல்லவர்களையும் சேரர்களையும் வென்று ஈழத்துக்குப் படை அனுப்பி வெற்றிக்கொடி நாட்டிய வரலாற்றினை இன்னொரு பெண் உற்சாகம் ததும்பப் பாடினாள். ஒவ்வொருத்தியும் பாடிய போது அவளைச் சுற்றிலும் பலர் நின்று கேட்டார்கள். அவ்வப்போது, ''ஆ! ஆ!'' என்று கோஷித்துத் தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டார்கள்.



குதிரை மீது இருந்தபடியே அவர்களுடைய பாடல்களைக் கேட்டுக் கொண்டிருந்த வந்தியத்தேவனை ஒரு மூதாட்டி கூர்ந்து கவனித்தாள். ''தம்பி! வெகு தூரம் வந்தாய் போலிருக்கிறது. மிகவும் களைத்திருக்கிறாய்! குதிரை மீதிருந்து இறங்கி வந்து கொஞ்சம் கூட்டாஞ்சோறு சாப்பிடு!'' என்றாள்.

உடனே, பல இள நங்கைகள் நம் வாலிபப் பிரயாணியைப் பார்த்தார்கள். அவனுடைய தோற்றத்தைக் குறித்துத் தங்களுக்குள் இரகசியமாகப் பேசிக் கொண்டு கலகலவென்று சிரித்தார்கள். வந்தியத்தேவனை ஒரு பக்கம் வெட்கமும் இன்னொருபுறம் குதூகலமும் பிடுங்கித் தின்றன. அந்த மூதாட்டி சொற்படி இறங்கிச் சென்று அவள் தரும் உணவைச் சாப்பிடலாமா என்று ஒரு கணம் சிந்தித்தான். அப்படிச் சென்றால் அங்கே நின்ற இள மங்கைமார்கள் பலரும் அவனைச் சூழ்ந்து கொண்டு பரிகசித்துச் சிரிப்பார்கள் என்பது நிச்சயம். அதனால் என்ன? அத்தனை அழகிய பெண்களை ஒரே இடத்தில் காண்பது சுலபமான காரியமா? அவர்கள் தன்னைப் பரிகசித்துச் சிரித்தாலும் அந்த ஒலி தேவகானமாகவே இருக்கும். வந்தியத்தேவனின் யௌவனக் கண்களுக்கு அந்த ஏரிக்கரையில் நின்ற நங்கைகள் எல்லாரும் அரம்பைகளாகவும் மேனகைகளாகவுமே தோன்றினார்கள்!

ஆனால் அதே சமயத்தில் தென் மேற்குத் திசையில் வடவாற்றின் நீரோட்டத்தில் தோன்றிய ஒரு காட்சி அவனைச் சிறிது தயங்கச் செய்தது. வெள்ளைப் பாய்கள் விரிக்கப்பட்ட ஏழெட்டுப் பெரிய ஓடங்கள் வெண் சிறகுகளை விரித்துக் கொண்டு நீரில் மிதந்து வரும் அன்னப் பட்சிகளைப் போல், மேலக் காற்றினால் உந்தப்பட்டு விரைந்து வந்து கொண்டிருந்தன.

ஏரிக் கரையில் பலவகைக் களியாட்டங்களில் ஈடுபட்டிருந்த ஜனங்கள் அத்தனை பேரும் அந்தப்படகுகள் வரும் திசையையே ஆவலுடன் பார்க்கத் தொடங்கினார்கள்.

அந்தப் படகுகளிலே ஒரு படகு எல்லாவற்றுக்கும் முன்னதாகவிரைந்து வந்து ஏரிக்கரை வடக்கு நோக்கித் திரும்பும் மூலையை அடைந்தது. அந்தப் படகில் கூரிய பிரகாசமான வேல்களை ஏந்திய ஆஜானுபாகுவான வீரர்கள் பலர் இருந்தார்கள்.

அவர்களில் சிலர் ஏரிக்கரையில் குதித்திறங்கி அங்கே இருந்த ஜனங்களைப் பார்த்து, ''போங்கள்! போங்கள்!'' என்று விரட்டினார்கள். அவர்கள் அதிகமாக விரட்டுவதற்கு இடம் வையாமல் ஜனங்களும் அவரவர்களுடைய பாத்திரங்கள் முதலியவற்றை எடுத்துக் கொண்டு விரைந்து கரையேறத் தொடங்கினார்கள்.

வந்தியத்தேவனுக்கு இது ஒன்றும் விளங்கவில்லை. இந்த வீரர்கள் யார்? பின்னால் வரும் பாய் விரித்த படகுகளில் யார் வருகிறார்கள்? எங்கிருந்து வருகிறார்கள்? ஒருவேளை அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்களாக இருப்பார்களோ?

ஏரிக்கரையில் கையிலே கோல் பிடித்து நின்ற பெரியவர் ஒருவரை வல்லவரையன் அணுகினான். ''ஐயா! இந்த வீரர்கள் யாரைச் சேர்ந்தவர்கள்? அதோ பின்னால் வரும் ஓடங்கள்

யாருடையவை? எதற்காக இவ் வீரர்கள் மக்களை விரட்டுகிறார்கள்? மக்களும் எதற்காக விரைகிறார்கள்?'' என்று கேள்விகளை அடுக்கினான்.

''தம்பி! உனக்குத் தெரியவில்லையா, என்ன? அதோ அந்தப் படகுகளுள் நடுப் படகில் ஒரு கொடி பறக்கிறதே! அதில் என்ன எழுதியிருக்கிறது, பார்!'' என்றார் பெரியவர்.

''பனைமரம் போல் தோன்றுகிறது.''

''பனைமரந்தான்! பனைமரக்கொடி **பழுவேட்டரையர்** கொடி என்று உனக்குத் தெரியாதா?''

''மகாவீரர் பழுவேட்டரையரா வருகிறார்?'' என்று வந்தியத்தேவன் திடுக்கிட்ட குரலில் கேட்டான்.

''அப்படித்தான் இருக்க வேண்டும். பனைமரக் கொடியை உயர்த்திக் கொண்டு வேறு யார் வர முடியும்?'' என்றார் பெரியவர்.

**வ**ல்லவரையனுடைய கண்கள் அளவிலா வியப்பினால் விரிந்து படகுகள் வந்த திசையை நோக்கின. பழுவேட்டரையரைப் பற்றி வல்லவரையன் எவ்வளவோ கேள்விப்பட்டிருந்தான். யார்தான் கேள்விப்படாமலிருக்க முடியும்? தெற்கே ஈழ நாட்டிலிருந்து வடக்கே கலிங்க நாடு வரையில் அண்ணன் தம்பிகளான பெரிய பழுவேட்டரையர், சின்னப் பழுவேட்டரையர் என்பவர்களுடைய பெயர்கள் பிரசித்தமாயிருந்தன. உறையூருக்குப் பக்கத்தில் வடகாவேரியின் வடகரையில் உள்ள பழுவூர் அவர்களுடைய நகரம். விஜயாலய சோழன் காலத்திலிருந்து பழுவேட்டரையர் குலம் வீரப் புகழ் பெற்றிருந்தது. அக்குடும்பத்தார் சோழ மன்னர் குடும்பத்துடன் கொள்வினை கொடுப்பினை செய்து வந்தனர். இது காரணமாகவும், அவர்களுடைய குலத் தொன்மை, வீரப் புகழ் இவை காரணமாகவும் பழுவேட்டரையர் குலம் அரச குலத்தின் சிறப்புக்களெல்லாம் பெற்றிருந்தது. தனியாகக் கொடி போட்டுக் கொள்ளும் உரிமையும் அந்தக் குலத்துக்கு உண்டு.



இப்போதுள்ள பழுவேட்டரையர் இருவரில் மூத்தவர் இருபத்து நான்கு போர்களில் ஈடுபட்டவர். அவருடைய காலத்தில் அவருக்கு இணையான வீரர் சோழ நாட்டில் யாருமில்லை என்று புகழ் பெற்றவர். இப்போது சோழ நாட்டு அரசாங்கத்தில் மிக உன்னதமான பல பதவிகளை வகித்து வந்தார். அவர் சோழ சாம்ராஜ்யத்தின் தனாதிகாரி; தான்யாதிகாரி. தன பண்டாரமும் தான்ய பண்டாரமும் அவருடைய அதிகாரத்தில் இருந்தன. அரசியலின் தேவைக்குத் தகுந்தபடி இறை விதித்து வசூலிக்கும் அதிகாரம் அவரிடம் இருந்தது. எந்தச் சிற்றரசரையும், கோட்டத் தலைவரையும், பெரிய குடித்தனக்காரரையும், ''இவ்வாண்டு இவ்வளவு இறை தர வேண்டும்!'' என்று கட்டளையிட்டு வசூலிக்கும் உரிமை அவருக்கு இருந்தது. ஆகவே, சுந்தர சோழ மகாராஜாவுக்கு அடுத்தபடியாகச் சோழ சாம்ராஜ்யத்தில் இப்போது வலிமை மிக்கவர் பழுவேட்டரையர்தான்.

அத்தகைய மகாவீரரும், அளவிலா வலிமையும் அதிகாரமும் படைத்தவருமான பெரிய பழுவேட்டரையரைப் பார்க்க வேண்டும் என்ற ஆவல் வந்தியத்தேவனுடைய உள்ளத்தில் பொங்கியது. ஆனால் அதே சமயத்தில், காஞ்சி நகரின் புதிய பொன் மாளிகையில் இளவரசர் ஆதித்த கரிகாலர் தன்னிடம் அந்தரங்கமாக அழுத்திச் சொன்ன செய்தி அவனுக்கு நினைவு வந்தது.

''வந்தியத்தேவா! நீ சுத்த வீரன் என்பதை நன்கு அறிவேன். அத்துடன் நீ நல்ல அறிவாளி என்று நம்பி, இந்தப் பொறுப்பை உன்னிடம் ஒப்புவிக்கிறேன். நான் கொடுத்த இரு ஓலைகளில் ஒன்றை என் தந்தை மகாராஜாவிடமும், இன்னொன்றை என் சகோதரி இளைய பிராட்டியிடமும் ஒப்புவிக்க வேண்டும். தஞ்சையில் இராஜ்யத்தின் பெரிய பெரிய அதிகாரிகளைப் பற்றிக்கூட ஏதேதோ கேள்விப்படுகிறேன். ஆகையால் நான் அனுப்பும் செய்தி யாருக்கும் தெரியக் கூடாது. எவ்வளவு

முக்கியமானவரா யிருந்தாலும் நீ என்னிடமிருந்து ஓலை கொண்டு போவது தெரியக் கூடாது. வழியில் யாருடனும் சண்டை பிடிக்கக் கூடாது. நீயாக வலுச்சண்டைக்குப் போகாமலிருந்தால் மட்டும் போதாது. மற்றவர்கள் வலுச் சண்டைக்கு இழுத்தாலும் நீ அகப்பட்டுக் கொள்ளக் கூடாது. உன்னுடைய வீரத்தை நான் நன்கறிவேன். ஆகையால் வலிய வரும் சண்டையிலிருந்து விலகிக் கொண்டாலும் கௌரவக் குறைவு ஒன்றும் உனக்கு ஏற்பட்டு விடாது. முக்கியமாக, பழுவேட்டரையர்களிடமும் என் சிறிய தந்தை மதுராந்தகரிடமும் நீ மிக்க ஜாக்கிரதையாக நடந்து கொள்ள வேண்டும்.''



சோழ சாம்ராஜ்யத்தின் பட்டத்துக்குரிய இளவரசரும் வடதிசைச் சைன்யத்தின் மகாதண்ட நாயகருமான ஆதித்த கரிகாலர் இவ்விதம் சொல்லியிருந்தார். மேலும் வந்தியத்தேவன் நடந்து கொள்ள வேண்டிய விதங்களைப் பற்றியும் படித்துப் படித்துக் கூறியிருந்தார். இவையெல்லாம் நினைவு வரவே, பழுவேட்டரையரைப் பார்க்க வேண்டும் என்ற ஆவலை வல்லவரையன் அடக்கிக் கொண்டான். குதிரையைத் தட்டி விட்டு வேகமாகச் செல்ல முயன்றான். என்ன தட்டிவிட்டாலும் களைப்புற்றிருந்த அந்தக் குதிரை மெதுவாகவே சென்றது. இன்று இரவு கடம்பூர் சம்புவரையர் மாளிகையில் தங்கிவிட்டு நாளைக் காலையில் புறப்படும்போது வேறு நல்ல குதிரை சம்பாதித்துக் கொண்டு கிளம்ப வேண்டும் என்று மனத்துக்குள் தீர்மானித்துக் கொண்டான்.

## இரண்டாம் அத்தியாயம்

# ஆழ்வார்க்கடியான் நம்பி

ஏரிக்கரையிலிருந்து கீழிறங்கித் தென்திசை சென்ற பாதையில் குதிரையைச் செலுத்திய போது வந்தியத்தேவனுடைய உள்ளம் ஏரி அலைகளின் மீது நடனமாடிய படகைப் போல் ஆனந்தக் கூத்தாடியது. உள்ளத்தின் உள்ளே மறைந்து கிடந்த குதூகலம் பொங்கித் ததும்பியது. வாழ்க்கையில் வேறு யாரும் காணாத அதிசய அநுபவங்களைத் தான் அடையும் காலம் நெருங்கி விட்டதென்று அவனுடைய உள்ளுணர்ச்சி சொல்லியது. சோழ நாட்டை அணுகும் போதே இவ்வளவு ஆனந்தக் கோலாகலமா யிருக்கிறதே? கொள்ளிடத்தைத் தாண்டிவிட்ட பின்னர் அச்சோழ நாட்டின் நீர் வளமும் நில வளமும் எப்படியிருக்கும்? அந்நாட்டில் வாழும் மக்களும் மங்கையரும் எப்படியிருப்பார்கள்? எத்தனை நதிகள்! எத்தனை குளங்கள்! எத்தனை தெளிநீர் ஓடைகள்! கவிகளிலும் காவியங்களிலும் பாடப்பெற்ற பொன்னி நதியின் காட்சி எப்படியிருக்கும்! அதன் கரைகளில் பூத்துக் குலுங்கும் புன்னை மரங்களும், கொன்னை மரங்களும், கடம்ப மரங்களும் எத்தகைய மனோகரமான காட்சியா யிருக்கும்! நீரோடைகளில் குவளைகளும் குமுதங்களும் கண்காட்டி அழைப்பதும், செந்தாமரைகள் முக மலர்ந்து வரவேற்பதும் எத்தகைய இனிய காட்சியாயிருக்கும்! காவேரியின் இருகரைகளிலும் சிவபக்திச் செல்வர்களான சோழ பரம்பரையினர் எடுப்பித்துள்ள அற்புத வேலைப்பாடமைந்த ஆலயங்கள் எவ்வளவு அழகாயிருக்கும்!

ஆகா! பழையாறை நகர்! சோழ மன்னர்களின் தலைநகர்! பூம்புகாரையும் உறையூரையும் சிறிய குக்கிராமங்களாகச் செய்துவிட்ட பழையாறை! அந்நகரில் உள்ள மாடமாளிகைகளும், கூடகோபுரங்களும், கடை வீதிகளும், படை வீடுகளும், சிவாலயக் கற்றளிகளும் திருமாலின் விண்ணகரங்களும் எப்படியிருக்கும்? அந்த ஆலயங்களில் இசை வல்லவர்கள் இனிய குரலில் தேவாரப் பாடல்களையும் திருவாய்மொழிப் பாசுரங்களையும் பாடக் கேட்டோர் பரவசமடைவார்கள் என்று வந்தியத்தேவன் கேள்வியுற்றிருந்தான். அவற்றையெல்லாம் கேட்கும் பேறு

தனக்கு விரைவில் கிடைக்கப் போகிறது. வீரத்தில் வேலனையும், அழகில் மன்மதனையும் நிகர்த்த பராந்தக சுந்தர சோழ மகாராஜாவை நேருக்கு நேர் காணப் போகிறான். அவ்வளவு தானா? அவருடைய செல்வப் புதல்வி, ஒப்புயர்வில்லாத நாரீமணி குந்தவைப் பிராட்டியையும் காணப் போகிறான்!

ஆனால் வழியில் தடை எதுவும் நேராமல் இருக்க வேண்டும். எந்தத் தடை நேர்ந்தால்தான் என்ன? கையிலே வேல் இருக்கிறது. இடையிலே தொங்கிய உறையிலே வாள் இருக்கிறது. மார்பிலே கவசம் இருக்கிறது. நெஞ்சிலே உரம் இருக்கிறது.

ஆதவன் மறைவதற்குள்ளே கடம்பூரை அடைய வேண்டும் என்ற கருத்துடன் சென்று கொண்டிருந்த வந்



தியத்தேவன் சிறிது நேரத்துக்கெல்லாம் வீர நாராயணபுர விண்ணகரக் கோயிலை நெருங்கினான்.

அன்று ஆடித் திருமஞ்சனத் திருவிழாவும் சேர்ந்திருந்தபடியால் கோயிலைச் சுற்றியுள்ள மரத் தோப்புகளில் பெரும் ஜனக்கூட்டம் சேர்ந்திருந்தது.

பலாச் சுளைகளும் வாழைப் பழங்களும் கரும்புக் கழிகளும் பலவகைத் தின்பண்டங்களும் விற்பவர்கள் ஆங்காங்கே கடை வைத்திருந்தார்கள். பெண்கள் தலையில் சூடிக் கொள்ளும் மலர்களையும் தேவபூஜைக்குரிய தாமரை மொட்டுகள் முதலியவற்றையும் சிலர் விற்றுக் கொண்டிருந்தார்கள். தேங்காய், இளநீர், அகில், சந்தனம், வெற்றிலை, வெல்லம், அவல், பொரி முதலியவற்றைச் சிலர் குப்பல் குப்பலாகப் போட்டுக் கொண்டிருந்தார்கள். ஆங்காங்கே வேடிக்கை விநோதங்கள் நடந்து கொண்டிருந்தன. ஜோசியர்கள், ரேகை சாஸ்திரத்தில் வல்லவர்கள், குறி சொல்லுகிறவர்கள், விஷக்கடிக்கு மந்திரிப்பவர்கள், இவர்களுக்கும் அங்கே குறைவில்லை. இதையெல்லாம் பார்த்துக் கொண்டு சென்ற வந்தியத்தேவன் ஓரிடத்தில் ஒரு பெருங்கூட்டம் நின்று கொண்டிருப்பதையும், அந்தக் கூட்டத்துக்குள்ளே யிருந்து யாரோ சிலர் உரத்த குரலில் வாக்குவாதம் செய்யும் சத்தம் வருவதையும் கவனித்தான். என்ன விவாதம் நடைபெறுகிறது என்பதை அறிந்துகொள்ள அவனுக்கு ஆவல் பிறக் கொண்டு எழுந்தது. அந்த ஆவலை அடக்கிக் கொள்ள அவனால் முடியவில்லை. கூட்டத்துக்கு வெளியில் சாலை ஓரமாகக் குதிரையை நிறுத்திவிட்டுக் கீழே இறங்கினான். குதிரையை அங்கேயே நிற்கும்படி தட்டிக் கொடுத்துச் சமிக்ஞையால் சொல்லி விட்டுக் கூட்டத்தைப் பிளந்து கொண்டு உள்ளே போனான்.

அங்கே விவாதத்தில் ஈடுபட்டிருந்தவர்கள் மூன்றே பேர்தான் என்பதைப் பார்க்க அவனுக்கு வியப்பு ஏற்பட்டது. ஆனால் விவாதத்தில் ஈடுபட்டவர்கள் மூன்றே பேர்கள் என்றாலும், கூட்டத்தில் இருந்தவர்கள் பலர் அவ்வப்போது அவரவர்களுக்கு உகந்த வாதக்காரரின் கட்சியை ஆதரித்துக் கோஷங்களைக் கிளப்பினார்கள். அதனாலேதான் அவ்வளவு சத்தம் எழுந்தது என்பதை வந்தியத்தேவன் தெரிந்துகொண்டான். பிறகு என்ன விவாதம் நடைபெறுகிறது என்பதைக் கவனித்தான்.

**வா**தமிட்ட மூவரில் ஒருவர் உடம்பெல்லாம் ஊர்த்வபுண்டரகமாகச் சந்தனம் அணிந்து தலையில் முன் குடுமி வைத்திருந்த வைஷ்ணவ பக்த சிகாமணி. கையில் அவர் ஒரு குறுந்தடியும் வைத்திருந்தார். கட்டையாயும் குட்டையாயும் வைரம் பாய்ந்த திருமேனியுடன் விளங்கினார்.

இன்னொருவர் தமது மேனியெல்லாம் பட்டை பட்டையாகத் திருநீறு அணிந்திருந்த சிவபக்தர்.

மூன்றாவது மனிதர் காவி வஸ்திரம் தரித்துத் தலையையும் முண்டனம் செய்து கொண்டிருந்தார். அவர் வைஷ்ணவரும் அல்ல; சைவரும் அல்ல. இரண்டையும் கடந்தவரான அத்வைத வேதாந்தி என்று தெரிய வந்தது.

சைவர் சொன்னார்: "ஓ, ஆழ்வார்க்கடியான் நம்பியே! இதற்கு விடை சொல்லும்! சிவபெருமானுடைய

முடியைக் காண்பதற்குப் பிரம்மாவும், அடியைக் காண்பதற்குத் திருமாலும் முயன்றார்களா, இல்லையா? முடியும் அடியும் காணாமல் இருவரும் வந்து சிவபெருமானுடைய பாதங்களில் சரணாகதி அடைந்தார்களா, இல்லையா? அப்படியிருக்கச் சிவ பெருமானைக் காட்டிலும் உங்கள் திருமால் எப்படிப் பெரிய தெய்வம் ஆவார்?''

இதைக் கேட்ட ஆழ்வார்க்கடியான் நம்பி தன் கைத்தடியை ஆட்டிக்கொண்டு, ''சரிதான்காணும்! வீர சைவ பாததூளி பட்டரே! நிறுத்தும் உம் பேச்சை! இலங்கை அரசனாகிய தசகண்ட ராவணனுக்கு உம்முடைய சிவன் வரங்கள் கொடுத்தாரே? அந்த வரங்கள் எல்லாம் எங்கள் திருமாலின் அவதாரமாகிய இராம பிரானின் கோதண்டத்தின் முன்னால் தவிடு பொடியாகப் போகவில்லையா? அப்படியிருக்க, எங்கள் திருமாலைக் காட்டிலும் உங்கள் சிவன் எப்படிப் பெரிய தெய்வமாவார்?'' என்று கேட்டான்.



இந்தச் சமயத்தில் காவி வஸ்திரம் அணிந்த அத்வைத சந்நியாசி தலையிட்டுக் கூறியதாவது: ''நீங்கள் இருவரும் எதற்காக வீணில் வாதம் இடுகிறீர்கள்? சிவன் பெரிய தெய்வமா, விஷ்ணு பெரிய தெய்வமா என்று எத்தனை நேரம் நீங்கள் வாதித்தாலும் விவகாரம் தீராது. இந்தக் கேள்விக்குப் பதில் வேதாந்தம் சொல்கிறது. நீங்கள் கீழான பக்தி மார்க்கத்தில் இருக்கிற வரையில்தான் சிவன்–விஷ்ணு என்று சண்டையிடுவீர்கள். பக்திக்கு மேலே ஞானமார்க்கம் இருக்கிறது. ஞானத்துக்கு மேலே ஞாஸம் என்று ஒன்று இருக்கிறது. அந்த நிலையை அடைந்து விட்டால் சிவனும் இல்லை. விஷ்ணுவும் இல்லை. சர்வம் பிரம்மமயம் ஜகத். ஸ்ரீ சங்கரபகவத்பாதாச்சாரியார் பிரம்மசூத்திர பாஷ்யத்தில் என்ன சொல்லியிருக்கிறார் என்றால்.....''

இச்சமயம் ஆழ்வார்க்கடியான் நம்பி குறுக்கிட்டு, ''சரிதான் காணும் நிறுத்தும்! உம்முடைய சங்கராச்சாரியார் அவ்வளவு உபநிஷதங்களுக்கும் பகவத் கீதைக்கும் பிரம்ம சூத்திரத்துக்கும் பாஷ்யம் எழுதி விட்டுக் கடைசியில் என்ன சொன்னார் தெரியுமா?

**''பஜ கோவிந்தம் பஜ கோவிந்தம்**
**பஜ கோவிந்தம் மூடமதே!''**

என்று மூன்றுவாட்டி சொன்னார். உம்மைப் போன்ற மௌடீகர்களைப் பார்த்துத்தான் 'மூடமதே!' என்று சங்கராச்சாரியார் சொன்னார்!'' எனக் கூறியதும் அந்தக் கூட்டத்தில் 'அஹா'காரமும், பரிகாசச் சிரிப்பும், கரகோஷமும் கலந்து எழுந்தன.

அதனால் சந்நியாசி சும்மா இருக்கவில்லை. ''அடே! முன்குடுமி நம்பி! நான் 'மூடமதி' என்று நீ சொன்னது சரிதான். ஏனென்றால் உன் கையில் வெறுந்தடியை வைத்துக் கொண்டிருக்கும் நீ வெறுந்தடியன் ஆகிறாய். உன்னைப் போன்ற வெறுந்தடியனோடு பேச வந்தது என்னுடைய மூடமதியினால் தானே?'' என்றார்.

''ஓய்! சுவாமிகளே! என் கையில் வைத்திருப்பது வெறுந்தடியல்ல. வேண்டிய சமயத்தில் உம்முடைய மொட்டை மண்டையை உடைக்கும் சக்தி உடையதுங்காணும்!'' என்று கூறிக்கொண்டே ஆழ்வார்க்கடியான் கையில் இருந்த குறுந்தடியை ஓங்கினான். அதைப் பார்த்த அவன் கட்சியார், 'ஓஹோ!' என்று ஆர்ப்பரித்தனர்.

அப்போது அத்வைத சுவாமிகள், ''அப்பனே! நிறுத்திக் கொள்! தடி உன்னுடைய கையிலேயே இருக்கட்டும். அப்படியே நீ உன் கைத்தடியால் என்னை அடித்தாலும் அதற்காக நான் கோபங் கொள்ள மாட்டேன். உன்னுடன் சண்டைக்கு வரவும் மாட்டேன். அடிப்பதும் பிரம்மம்; அடிபடுவதும் பிரம்மம். என்னை நீ அடித்தால் உன்னையே அடித்துக் கொள்கிறவனாவாய்!'' என்றார்.

ஆழ்வார்க்கடியான் நம்பி, ''இதோ எல்லோரும் பாருங்கள்! பிரம்மத்தைப் பரப் பிரம்மம் திருச்சாத்துச் சாத்தப்

போகிறது. என்னை நானே தடிகொண்டு தாக்கப் போகிறேன் !'' என்று தடியைச் சுழற்றிக் கொண்டு சுவாமிகளை நெருங்கினன்.

இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த வல்லவரையனுக்கு ஒருகணம் அந்த முன்குடுமி நம்பியின் கைத்தடியை வழிமறித்துப் பிடுங்கிக் கொண்டு அவனை அந்தத் தடியினல் நாலு திருச்சாத்துச் சாத்தலாமா என்று தோன்றியது.

ஆனல் திடீரென்று சுவாமியாரைக் காணேம் ! கூட்டத்தில் புகுந்து அவர் மறைந்துவிட்டார். அதைப் பார்த்துக் கொண்டிருந்த வைஷ்ணவகோஷ்டியார் மேலும் ஆர்ப்பரித்தார்கள்.

ஆழ்வார்க்கடியான் வீரசைவருடைய பக்கமாகத் திரும்பி, ''ஓய், பாததூளி பட்டரே! நீர் என்ன சொல்லுகிறீர் ? மேலும் வாதம் செய்ய விரும்புகிறீரா ? அல்லது சுவாமியாரைப்போல் நீரும் ஓட்டம் எடுக்கிறீரா?'' என்ருன்.

''நானு? ஒரு நாளும் அந்த வாய் வேதாந்தியைப் போல் ஓட்டம் எடுக்க மாட்டேன். என்னையும் உம்முடைய கண்ணன் என்று நினைத்திரோ? கோபியர் வீட்டில் வெண்ணெய் திருடி உண்டு மத்தால் அடிபட்டவன்தானே உம்முடைய கண்ணன்!...'' என்று பாததூளி பட்டர் சொல்லுவதற்குள், ஆழ்வார்க்கடியான் குறுக்கிட்டான். ''ஏன் காணும்? உம்முடைய பரமசிவன் பிட்டுக்கு மண் சுமந்து முதுகில் அடிபட்டதை மறந்து விட்டீரோ ?'' என்று கேட்டுக் கொண்டு கைத்தடியை வீசிக் கொண்டு வீர சைவர் அருகில் நெருங்கினன்.

ஆழ்வார்க்கடியான் நல்ல குண்டாதி குண்டன். வீர சைவராகிய பாததூளி பட்டரோ சற்று மெலிந்த மனிதர்.

மேற்கூறிய இருவரையும் விவாதத்தில் உற்சாகப்படுத்தி வந்தவர்கள் தாங்களும் கைகலக்க ஆயத்தமாகி ஆரவாரம் செய்தார்கள்.

இந்த மூடச் சண்டையைத் தடுக்க வேண்டும் என்ற எண்ணம் வல்லவரையன் மனத்தில் உண்டாயிற்று.

அவன் நின்ற இடத்திலிருந்து சற்று முன்னல் வந்து, ''எதற்காக ஐயா நீங்கள் சண்டை போடுகிறீர்கள்? வேறு வேலை ஒன்றும் உங்களுக்கு இல்லையா ? சண்டைக்குத் தினவு எடுத்தால் ஈழ நாட்டுக்குப் போவதுதானே? அங்கே பெரும் போர் நடந்து கொண்டிருக்கிறதே ?'' என்ருன்.

நம்பி சட்டென்று அவனைத் திரும்பிப் பார்த்து, ''இவன் யாரடா, நியாயம் சொல்ல வந்தவன்!'' என்ருன்.

கூட்டத்திலே இருந்தவர்களில் சிலருக்கு வந்தியத்தேவனுடைய வீரத் தோற்றமும் அவனுடைய அழகிய முக விலாசமும் பிடித்திருந்தன.

''தம்பி! நீ சொல்லு! இந்தச் சண்டைக்காரர்களுக்கு நியாயத்தை எடுத்துச் சொல்லு! உனக்குப் பக்கபலமாக நாங்கள் இருக்கிருேம்!'' என்று அவர்கள் சொன்னர்கள்.

''எனக்குத் தெரிந்த நியாயத்தைச் சொல்லுகிறேன். சிவ பெருமானும் நாராயண மூர்த்தியும் தங்களுக்குள் சண்டை போட்டுக் கொள்வதாகத் தெரியவில்லை. அவர்கள் சிநேகமாகவும் சுமுகமாகவும் இருந்து வருகிருர்கள். அப்படியிருக்க, இந்த நம்பியும் பட்டரும் எதற்காகச் சண்டை போட்டுக் கொள்ள வேண்டும்?'' என்று வல்லவரையன் கூறியதைக் கேட்டு, அந்தக் கூட்டத்தில் பலரும் நகைத்தார்கள்.

அப்போது வீர சைவபட்டர், ''இந்தப் பிள்ளை அறிவாளியாகவே தோன்றுகிருன். ஆனல் வேடிக்கைப் பேச்சினல் மட்டும் விவாதம் தீர்ந்து விடுமா ? 'சிவன் பெரிய தெய்வமா, திருமால் பெரிய தெய்வமா?' என்ற கேள்விக்கு இவன் விடை சொல்லட்டும்'' என்ருர்.

''சிவனும் பெரிய தெய்வந்தான், திருமாலும் பெரிய தெய்வந்தான். யாரை வேண்டுமானலும் தொழுது கொள்ளுங்கள், சண்டை எதற்கு ?'' என்ருன் வல்லவரையன்.

''அது எப்படிச் சொல்லலாம் ? சிவனும் விஷ்ணுவும் சமமான தெய்வங்கள் என்று சொல்வதற்கு ஆதாரம் என்ன?'' என்று ஆழ்வார்க்கடியான் அதட்டிக் கேட்டான்.

''ஆதாரமா? இதோ சொல்லுகிறேன். நேற்று மாலை வைகுண்டத்துக்குப் போயிருந்தேன். அதே சமயத்தில் பரமசிவனும் அங்கே வந்திருந்தார். இருவரும் சம ஆசனத்தில் அமர்ந்திருந்தார்கள். அவர்களுடைய உயரம் ஒன்றுகவே இருந்தது. ஆயினும் ஐயத்துக்கு இடமின்றி என் கையினல் முழம் போட்டு இருவர் உயரத்தையும் அளந்து பார்த்தேன்....''

''அட பிள்ளாய்! பரிகாசமா செய்கிருய்?'' என்று ஆழ்வார்க்கடியான் கர்ஜனை செய்தான்.

கூட்டத்தினர், ''சொல்லு, தம்பி ! சொல்லு!'' என்று ஆர்ப்பரித்தார்கள்.

''அளந்து பார்த்ததில் இருவரும் சமமான உயரமே இருந்தார்கள். அதோடு விடாமல் சிவனையும் திருமாலையும் நேரிலேயே கேட்டுவிட்டேன். அவர்கள் என்ன சொன்னர்கள் தெரியுமா ? 'அரியும் சிவனும் ஒண்ணு, அறி

யாதவர் வாயிலே மண்ணு' என்று சொன்னார்கள். அவ்விதம் சொல்லி, தங்களைப் பற்றிச் சண்டை போடுகிற வர்களின் வாயிலே போடுவதற்கு இந்தப் பிடி மண்ணையும் கொடுத்தார்கள்!'' என்று கூறிய வல்லவரையன், மூடியிருந்த தனது வலக் கையைத் திறந்து காட்டினான். அதற்குள்ளே ஒரு பிடி மண் இருந்தது. அதை வீசி உதறினான்.

கூட்டத்திலிருந்தவர்களில் பலர் அப்போது பெரும் உற்சாகம் கொண்டு தலைக்குத் தலை தரையிலிருந்து ஒரு பிடி மண் எடுத்து, நம்பியின் தலையிலும், பட்டர் தலையிலும் வீசி எறிய ஆரம்பித்தார்கள். இந்தத் துராக்ரகச் செயலைச் சிலர் தடுக்க முயன்றார்கள்.

''அடே! தூர்த்தர்களா! நாஸ்திகர்களா!'' என்று சொல்லிக் கொண்டு ஆழ்வார்க்கடியான் தன் கைத் தடியைச் சுழற்றிக்கொண்டு கூட்டத்துக்குள் பிரவேசித்தான்.



ஒரு பெரிய கலவரமும் அடிதடி சண்டையும் அப்போது அங்கே நிகழும் போலிருந்தன.

நல்ல வேளையாக, அந்தச் சமயத்தில், சற்றுத் தூரத்தில் ஒரு பெரிய சலசலப்பு ஏற்பட்டது.

''சூராதி சூரர், வீரப்பிரதாபர், மாற பாண்டியன் படையை வீறு கொண்டு தாக்கி வேரோடு அறுத்த வெற்றிவேல் உடையார், இருபத்து நாலு போர்களில் சண்டையிட்டு, அறுபத்து நான்கு விழுப் புண்களைப் பெற்ற திருமேனியர், சோழ நாட்டுத் தனாதிகாரி, தானிய பண்டார நாயகர் இறை விதிக்கும் தேவர், பெரிய பழுவேட்டரையர் விஜயம் செய்கிறார்! பராக்! பராக்! வழி விடுங்கள்!'' என்று இடிமுழக்கக் குரலில் கட்டியம் கூறுதல் கேட்டது.

இவ்வாறு கட்டியம் கூறியவர்கள் முதலில் வந்தார்கள். பிறகு முரசு அடிப்பவர்கள் வந்தார்கள். அவர்களுக்குப் பின்னால் பனைமரக் கொடி தாங்குவோர் வந்தார்கள். பின்னர், கையில் வேல் பிடித்த வீரர்கள் சிலர் கம்பீரமாக நடந்து வந்தார்கள்.

இவர்களுக்குப் பின்னால் வந்த அலங்கரித்த யானையின்மீது ஆஜானுபாகுவான கரிய திருமேனியர் ஒருவர் வீற்றிருந்தார். மத்தகஜத்தின் மேல் அந்த வீரர் வீற்றிருந்த காட்சி, ஒரு மாமலைச் சிகரத்தின்மீது கரிய கொண்டல் ஒன்று தங்கியதுபோல் இருந்தது.

கூட்டத்தில் இருந்தவர்கள் அத்தனை பேரும் சாலையின் இருபுறத்திலும் வந்து நின்றது போல் வல்லவரையனும் வந்து நின்று பார்த்தான். யானைமீது இருந்தவர்தான் பழுவேட்டரையர் என்பதை ஊகித்துக் கொண்டான்.

யானைக்குப் பின்னால் பட்டுத் திரையினால் மூடப்பட்ட சிவிகை ஒன்று வந்தது. அதற்குள் இருப்பது யாரோ என்று வல்லவரையன் சிந்திப்பதற்குள்ளே, செக்கச் சிவந்த நிறத்துடன் வளையல் அணிந்த ஒரு கரம் சிவிகைக்குள்ளேயிருந்து வெளிப்பட்டுப் பல்லக்கின் பட்டுத் திரையைச் சிறிது விலக்கியது. மேகத்தினால் மூடப்பட்டிருந்த பூரண சந்திரன் மேகத் திரை விலகியதும் பளீரென்று ஒளி வீசுவது போல் சிவிகைக்குள்ளே காந்திமயமான ஒரு பெண்ணின் முகம் தெரிந்தது.

பெண் குலத்தின் அழகைக் கண்டு களிக்கும் கண்கள் வல்லவரையனுக்கு உண்டு என்றாலும், அந்தப் பெண்ணின் முகம் பிரகாசமான பூரண சந்திரனையொத்த பொன் முகமாயிருந்தாலும், எக்காரணத்தாலோ வல்லவரையனுக்கு அம்முகத்தைப் பார்த்ததும் உள்ளத்தில் மகிழ்ச்சி தோன்றவில்லை.

அதே நேரத்தில் அந்தப் பெண்ணின் கண்கள் வல்லவரையனுக்கு அருகில் உற்று நோக்கின. மறுகணம் ஒரு பீதிகரமான 'கிறீச்' என்ற கூச்சல் கேட்டது. உடனே சிவிகையின் பட்டுத் திரை முன்போல் மூடிக் கொண்டது.

வல்லவரையன் தன் அக்கம்பக்கத்தில் நோக்கினான். தனக்கு அருகில் எதையோ யாரையோ பார்த்துவிட்டுத்தான் அந்த மாது 'கிறீச்'சிட்டு விட்டுச் சிவிகைத் திரையை மூடிக் கொண்டாள் என அவன் உள்ளுணர்ச்சி சொல்லிற்று. எனவே, சுற்றுமுற்றும் பார்த்தான். ஆழ்வார்க்கடியான் தனக்குச் சற்றுப் பின்னால் ஒரு புளிய மரத்தில் சாய்ந்து கொண்டு நிற்பதைக் கண்டான்!

அந்த வீர வைஷ்ணவ நம்பியினுடைய முகம் சொல்ல முடியாத விகாரத்தை அடைந்து கோர வடிவமாக மாறி இருப்பதையும் பார்த்தான்.

வல்லவரையனுடைய உள்ளத்தில் காரணம் விளங்காத திகைப்பும் அருவருப்பும் ஏற்பட்டன. **(தொடரும்)**

குடும்பப் பிரச்னை



# பச்சைக் குழந்தையைப் பாதுகாப்பது எப்படி?

குழந்தை வளர்ப்புத் துறையில் நிபுணரான டாக்டர் வி. பாலகோபால்ராஜு சென்னை அரசினர் பொது மருத்துவமனையில் குழந்தை மருத்துவப் பிரிவின் இயக்குநராகவும், பேராசிரியராகவும் பணியாற்றுபவர். அவர் தெரிவிக்கும் கருத்துக்கள் நமது தாய்மார்களுக்கு ஒரு வழிகாட்டியாகும். முதிர்ந்த அநுபவம் பெற்றுள்ள டாக்டர் ராஜு பாரதக் கலாசாரத்தைப் பெரிதும் போற்றுபவர். நமது பண்பாட்டில் நன்கு ஊறித் திளைத்தவர்.

தாய்ப்பாலின் உயர்வினை எடுத்துரைக்கையில், ''குழந்தை பிறந்து ஒன்பது மாதங்கள் வரைக்குமாவது அது தாய்ப்பால் அருந்த வேண்டியது இன்றியமையாதது. தாய்ப்பால் வெறும் போஷாக்கு அளிப்பதோடு நின்றுவிடவில்லை. நோய்களைத் தடுக்கும் எதிர்ப்புச் சக்தியையும் இது அளிக்கிறது. சிசுவின் உடம்பில் ஒரு சிறு காயம் அல்லது கொப்புளம் ஏற்பட்டால், அந்த நோய்க் கிருமிகளை எதிர்த்துப் போராடி அழிக்கும் போர் வீரர்களை (Anti bodies) தாய்ப் பாலிலிருந்துதான் குழந்தை பெற இயலும். இந்தச் சக்தியைப் பசும் பாலிலிருந்தோ புட்டிப் பால்களிலிருந்தோ பெற முடியாது. பிறந்தது முதல் சுமார் ஆறு மாத காலம் வரை இச்சக்தி குழந்தையின் உடலில் இயல்பாகவே இருக்கும். இந்நோய் எதிர்ப்பு அணுக்கள் (Anti bodies) ஆறு மாதங்களுக்குப் பிறகு மறையத் தொடங்கும். 1, 2, 3 என்று 10 வரை இலக்கமிட்டு, முதலில் தாய்ப் பாலைக் குறிப்பிட்டு, அடுத்தபடியாகச் சிறந்த உணவுகளைக் குறிப்பிட வேண்டுமானால் இரண்டு முதல் ஆறு வரையுள்ள இடங்கள் காலியாகவேதான் இருக்கும்!... பசும்பால், புட்டிப் பால் இவை எதுவுமே இந்த இடங்களைப் பெற இயலாது! தாய்ப் பாலுக்கு இணையானதோ அல்லது அடுத்தபடி ஏறக்குறைய இணையானதோ எதுவுமே யில்லை'' என்கிறார் டாக்டர் ராஜு.

''தாய்ப்பால் இல்லை என்றால் பசும் பாலோ அல்லது புட்டிப் பாலோ வாங்கிக் கொடுக்கத்தானே வேண்டும்'' என்று கேட்டதற்கு, ''தாய்ப்பால் இல்லை என்பது வீண் பிரமை! தாய்மார்களின் அறியாமையே இந்த 'பிரமை' தோன்றுவதற்குக் காரணம். தாய்மார்களின் மார்பகம் ஓர் அட்சய பாத்திரம். சிசுவின் தேவைக் கேற்பக்

**தாய்ப்பாலை விடச் சிறந்த உணவு குழந்தைக்கு வேறு ஏதும் கிடையாது என்று பாலுணவு தயாரிக்கும் ஸ்தாபனத்தினரே தாங்கள் தாய்மார்களுக்கென்று பிரசுரித்துள்ள குறிப்புப்புத்தகங்களில் கூறுகின்றனர்.**

படம் உதவி :
அமுல் பாலுணவு தயாரிப்போர்



கனிந்து சுரக்கும் தன்மையை இயற்கை அதற்கு அளித்துள்ளது. குழந்தைக்கு ஒரு தடவை பால் கொடுத்தால், எஞ்சியுள்ள பாலைத் தாய்மார்களே வெளியேற்றி விட வேண்டியது அவசியம். முற்றும் காலியான இடத்தில் மீண்டும் பால் சுரக்கும். இன்னொன்றும் குறிப்பிட வேண்டும். காலையில் முதல்தடவையாக இடது மார்பிலிருந்து பால் கொடுத்தால், அடுத்த தடவை வலது மார்பிலிருந்து முதலில் பால் கொடுப்பதே சிறந்தது. ஐந்து நிமிடங்களுக்குப் பிறகு குழந்தையை இடப் பக்கத்துக்கு மாற்ற வேண்டும். பால் சரியானபடி சுரப்பதில் தடை ஏற்படாதிருக்க,



இரட்டிப்பு மகிழ்ச்சி என்பது இதுதானோ?

படம் உதவி: கிளாக்ஸோ, ஆஸ்டர்மில்க் பால் உணவு தயாரிப்போர்





குழந்தைக்கு நீங்கள் தரக்கூடிய சிறந்த 'டானிக்' உங்கள் அன்பை வெளிப்படையாகக் காண்பித்துக் கொள்வதுதான்.

படம் உதவி: ஜான்ஸன் அண்டு ஜான்ஸன் குழந்தைப் பராமரிப்புச் சாதனங்கள் தயாரிப்போர்

இப்படி மாற்றி மாற்றிப் பால் கொடுப்பது சிறந்த வழியாகும்.

ஒரு நாளைக்கு ஆறு தடவைகளுக்குக் குறையாமல் குழந்தை தொடர்ந்து பால் ஊட்டிக் கொண்டே வருமானால் நிச்சயம் பால் சுரக்கும். எனவே, 'பால் இல்லை' என்பது தாய் தன்னையும் ஏமாற்றிக் கொண்டு குழந்தையையும் ஏமாற்றுவதாகும். விளையாட்டு அம்மை, வைசூரி முதலிய நோய்கள் அணுகாமல் தடுக்கும் ஆற்றல் தாய்ப் பாலுக்கு உண்டு. வயிற்றுப்போக்கு குழந்தைகளுக்கு அடிக்கடி சகஜமாக வரக்கூடிய வியாதி. தாய்ப்பால் அருந்தும் குழந்தைக்கு வயிற்றுப்போக்கு வருவதில்லை. தாய்ப்பாலில் உள்ள அமில சத்து வயிற்றுப் போக்கு வராமல் தடுக்கிறது. பசும் பாலோ 'ஆல்கலி' நிறைந்தது. எனவே, வயிற்றுப் போக்கினைத் தடுக்கும் ஆற்றல் அற்றது. தவிர, தாய்ப்பால்தானே மலிவானது? பசும் பால், புட்டிப்பால் எல்லாம் என்ன விலை தெரியுமல்லவா?'' என்றார்.

''ஒரு நாளைக்கு இவ்வளவு தடவை பால் கொடுக்கவேண்டும் என்று கணக்கு உண்டா?'' என்று என் சந்தேகத்தை வெளியிட்டேன்.

''இல்லை. குழந்தை பசி காரணமாக அழுதால் நேரக் கணக்குப் பார்க்கவே வேண்டாம். இரவு ஒரு மணியாக இருந்தாலும் தாய்ப் பால் கொடுக்கலாம். புட்டிப் பால் டப்பாக்களின் மீது 'இரவு பத்து மணிக்குப் பிறகு பால் கொடுக்காதே' என்று எச்சரிக்கை ஒன்று காணப்படும். கவனித்திருக்கிறீர்களா?'' என்று சிரித்தவாறு கேட்டுவிட்டுத் தொடர்ந்தார் டாக்டர் ராஜு. ''இரவில் பசிக்கக் கூடாது என்று சிசுவுக்கு விதி ஏதுமில்லை. இரவாயினும் சரி, பகலாயினும் சரி, பால் கொடுத்தவுடன் குழந்தையைத் தாய் தன் தோளின் மீது ஒரு தடவை அல்லது இரண்டு தடவை ஏப்பம் விடும்வரை சாத்திக்கொண்டு சில நிமிடங்கள் கழித்துத் தொட்டிலில் ஒருக்களித்துப் படுக்க வைக்க வேண்டும். மல்லாந்து படுப்பது குழந்தைக்கு ஆபத்து. ஒருக்களித்துப் படுக்க வைப்பதிலும் இடது பக்கமாகப் படுக்க வைப்பது சிறந்தது. பால் குடித்த குழந்தை உடனே மல்லாந்து படுத்தால், அதிகப்படியான பாலை வாந்தியெடுக்கும்போது அது நுரையீரலுக்குள் போய் விடும்! மூச்சு முட்டித் திணறிச் சில நிமிடங்களுக்குள் குழந்தையின் உயிருக்கே ஆபத்தாக முடியும்!'' என்று எச்சரித்துவிட்டு, தம் நண்பர் ஒருவரது குழந்தையின் முதல் ஆண்டு நிறைவு விழாவில் இப்படி ஒரு சோக சம்பவம் ஏற்பட்டதையும் குறிப்பிட்டார். ஆண்டு நிறைவு விழாவில் பலர் தூக்கிக் கொஞ்சி விளையாடியதன் காரணமாகக் குழந்தை களைத்துத் தூங்கியதாம். பெரிய அதிகாரி ஒருவர் இரவு ஒரு மணிக்கு (அப்போதுதான் அவரது அலுவல்கள் முடிந்து ஓய்வு கிடைத்ததாம்) குழந்தையைப் பார்க்க வந்தாராம். தூங்கிக் கொண்டிருந்த குழந்தையைப் பெற்றோர் எழுப்பினர். அந்த அதிகாரி தாம் கொண்டு வந்த பரிசுப் பொருளைக் கொடுத்துவிட்டுக் குழந்தையைப் பார்த்துவிட்டுத் திரும்பினார். குழந்தை அழுது கொண்டிருக்கவே தாய் அதற்குப் பால் புகட்டிவிட்டு மல்லாந்து படுக்க விட்டாள். சில நிமிடங்களுக்குள் குழந்தை வாந்தி எடுத்துப் பால் நுரையீரலுக்குள் நுழைந்து குழந்தை மூச்சு விட முடியாமல் திணறி... பெற்றோர்கள் கண்ணெதிரிலேயே உயிர் நீத்த சோக நிகழ்ச்சியைக் குறிப்பிட்டு, ''ஜெனரல் ஆஸ்பத்திரியில் இப்படி நிகழ்ந்தால் உடனே நுரையீரலுக்குள் சென்ற பாலினை உறிஞ்சி வெளியே எடுத்துவிட வசதிகள் உள்ளன. ஆனால் வீடுகளில் இந்த வசதிகள் ஏது?'' என்றார்.

''சிறு குழந்தைகளுக்கு எண்ணெய் தேய்த்துக் குளிப்பாட்டுகிறார்களே — அது அவசியந்தானா?''

''தேவையில்லை. கண்களிலும் காதுகளிலும் வழிய வழிய எண்ணெயை ஊற்றுவதால் ஒரு பயனுமில்லை. குழந்தைக்குத் தொந்தரவும், கண் கரிப்பும்தான் மிச்சம். பெண் குழந்தைகளானால் எட்டு ஒன்பது வயதுக்கு மேல் தலைக்கு எண்ணெய் தேய்க்கலாம். கூந்தல் பளபளப்பாக 'ஷாம்பூ' போட்டது போலாகும். சிறு குழந்தைகளுக்கு எண்ணெய் தேய்க்கும்போது தாய்மார்கள் ஒரு பெரும் தவறு இழைக்கிறார்கள். கொதிக்கும் வெந்நீரைக் குழந்தையின் மீது ஊற்றுகிறார்களே — அதனைத்தான் சொல்லுகிறேன். குழந்தையின் மேனி சிவப்பாகும் என்று தவறாக எண்ணுவதே இந்தச் சித்திரவதைக்குக் காரணம். குழந்தையின் உடலில் உள்ள சூடு எவ்வளவோ அந்த அளவு வெதுவெதுப்பாக உள்ள நீர்தான் குழந்தைக்கு உகந்தது. குளிப்பது குழந்தைக்கு ஓர் உடற் பயிற்சியாகவும் சுகமாகவும் இருக்க வேண்டும். தலையில் ஊற்றிய நீர் குழந்தையின் முகத்தில் விழுந்து வழியவும் விடக் கூடாது. ஒரு பேஸினில் நீர் நிரப்பி அதில் குழந்தையின் தலையைச் சற்றே உயர்த்திப் பிடித்துக் குளிப்பாட்ட வேண்டும். எண்ணெய் தேய்த்துக் குளிப்பாட்டியதும் குழந்தைக்கு வசம்பு கோரோஜனை முதலிய காரமான பொருளைக் கொடுப்பதும் தவிர்க்கப்பட வேண்டும்'' என்றார்.

''குழந்தையைக் குளிப்பாட்டுவதே ஓர் அருங்கலை போலிருக்கிறதே! எண்ணெய் தேய்ப்பது இருக்கட்டும்; விளக்கெண்ணெய் புகட்டுகிறார்களே, அது தேவைதானா? நிமை பயப்பதா?'' என்றேன்.

''விளக்கெண்ணெய் குடலில் தங்கினால் தீங்கு விளையும் என்று மக்கள் கருதுவது பிழை. எனினும் விளக்கெண்ணெய் புகட்டுவது அவசியமுமில்லை. தவிர்க்கப்பட வேண்டும். மலச்சிக்கல் பற்றியும் தாய்மார்களுக்கு உண்மை நிலை புரிவதில்லை. போதுமான தரத்தில் நல்ல பால் இல்லாததாலேயே குழந்தைகளுக்கு மலச்சிக்கல் ஏற்படுகிறது. ஆட்டுப் புழுக்கை போல் இறுகலாக மலப் பிரவிர்த்தி ஆனால்தான் குழந்தைக்கு மலச் சிக்கல் இருக்கிறது என்று உணர்ந்துகொள்ள வேண்டும். தாய்ப்பால் அருந்தும் சிசுக்களுக்கு இந்தச் சங்கடம் ஏற்படாது.

''நமது தாய்மார்கள் குழந்தையிடம் அன்பு செலுத்துவதிலும் பராமரிப்பதிலும் ஈடு இணையற்றவர்கள் என்பதைப் பெருமையுடன் நான் கூறுவேன். அறியாமை காரணமாகத்தான் தாய்மார்கள் பல தவறுகளைச்

செய்திருக்கிறார்களே ஒழிய அலட்சியத்தினால் அல்ல. குழந்தைக்கு நான்கு அல்லது ஐந்து மாதங்கள் நிறைந்தவுடன் கடித்துச் சுவைத்துப் புசிக்கக் கூடிய உணவு சிறிதளவு அன்றாடம் கொடுப்பது நலம். பாலில் துவைத்தெடுத்த இட்டிலி, நன்றாகப் பிசைந்து நெய் கலந்த சாதம் முதலிய உணவு வகைகள் கொடுக்கலாம்.

பசும்பாலில் நிறையத் தண்ணீர் கலந்து குழந்தைக்குக் கொடுப்பது தவறு. சிறிதளவு கலந்தால் போதும். அவ்வப்போது குழந்தைக்குத் தாகத்துக்குத் தண்ணீர் கொடுப்பதும் அவசியம். கோடைக்காலத்தில் இது இன்றியமையாதது. தாய்மார்கள் பலருக்கு இது தெரிவதில்லை. உடலிலிருந்து நீர் பெருமளவு பல வகைகளில் வெளிப்பட்டுக் கொண்டே இருப்பதால் பருகுவதற்கு நீர் கொடுப்பது அவசியம். வசதி இல்லாதவர்கள் 'கிரைப் வாட்டர்' கொடுக்க வேண்டாம். 'கிரைப் வாட்டர்கூடக் கொடுத்தேன் டாக்டர்! குழந்தை அழுவதை நிறுத்தவே இல்லை!' என்று ஏழைத் தாய்மார்கள் பலர் பிரலாபிப்பதைக் கேட்டிருக்கிறேன். கிரைப் வாட்டருக்குப் பதில் பால் கொடுத்திருந்தால் குழந்தை அழுகையை நிறுத்தியிருக்கும்! 'குழந்தைக்குப் பசி. பசிக்குக் கிரைப் வாட்டர் ஒரு உணவாகுமா?' என்று நான் அறிவுறுத்துவதுண்டு. குழந்தைகளுக்குக் காப்பி, தேநீர் கொடுப்பது தவறு. அதை நிறுத்தினால் குழந்தைக்கு நல்லது. பணமும் மிச்சம். குழந்தைக்கு வயிற்றுப் போக்குக் கண்டால் டாக்டர்கள் ஆரோரூட் (Arrowroot) கஞ்சியைக் கொடுக்கச் சொல்வார்கள். ஆனால் இதனை ஒன்றிரண்டு நாட்கள்தான் கொடுக்கலாம். தொடர்ந்து பல நாட்கள் கொடுப்பது தவறு. ஆரோரூட் குழந்தைக்கு நல்ல உணவாகாது. அதில் புரதச் சத்து இல்லை. வயிற்றுப் போக்கு உள்ள குழந்தைக்குப் பருக நிறைய நீர் கொடுக்க வேண்டியது மிகவும் முக்கியம்.

உடை விஷயத்திலும் கவனம் தேவை. அதிகமான துணி மணிகளைப் போட்டுக் குழந்தையின் உடலை மூடக் கூடாது. உடலில் அதிகம் வியர்வை பெருகாமல் கவனித்துக் கொள்ள வேண்டும். நல்ல காற்றோட்டம் தேவை. கம்பளியால் போர்த்தி, சாளரங்களை மூடி வைத்துக் குழந்தையின் உடல் வியர்வையால் தெப்பமாக நனையும்படி விடக் கூடாது. குழந்தை பிறந்து மூன்று மாதங்களில் அம்மைத் தடுப்பு ஊசியும், 4, 5, 6வது மாதங்களில் 'டிரிபிள் ஆண்டிஜென்' ஊசியும் இளம்பிள்ளை வாதம் வராமல் தடுக்க 'போலியோ டிராப்ஸு'ம் கொடுப்பது அவசியமாகும்.''

''கர்ப்பிணிகளின் கவனக் குறைவால் குழந்தையின் நலம் கெடுமல்லவா? அது பற்றியும் சில பயனுள்ள அறிவுரைகள் வழங்கினால் நல்லது என்று நினைக்கிறேன், டாக்டர்!'' என்று கேட்டுக் கொண்டதும், டாக்டர் ராஜு கூறினார்: ''சூலுண்ட தாய்மார்கள் முதல் மூன்று மாதங்களுக்குச் சென்னை, மதுரை போன்ற உஷ்ணப் பிரதேசங்களிலிருந்து உதகமண்டலம், கோடைக்கானல் போன்ற குளிர்ப் பிரதேசங்களுக்குப் போவது நல்லதன்று. மன வியாகூலங்களும், கோபதாபங்களும், தாய்ப்பால் போதிய அளவு சுரப்பதற்குத் தடையாக அமையும். நல்ல நூல்களைத் தேர்ந்து படிக்க வேண்டும். வீர புருஷர்களின் வரலாறுகளைப் படிப்பது நல்லது. சிவாஜியின் தாய் எல்லாத் தாய்மார்களுக்கும் இவ்விஷயத்தில் நல்ல எடுத்துக் காட்டாக விளங்கியவள். 'பிள்ளைத்தாய்ச்சி விரும்பிக் கேட்டதைக் கொடுக்க வேண்டும்' என்று பெரியவர்கள் கூறுவதுண்டு. கணவனுக்கும் குழந்தைக்கும் பெரியவர்களுக்கும் உணவு படைத்து விட்டுக் கடைசியில் எஞ்சியதைப் புசித்து மகிழ்வதுதான் நம் பெண்களின் பண்பாடு. அதில்தான் அவர்கள் மன நிறைவு பெறுகிறார்கள். இதன் பயனாகப் போதிய போஷாக்கு சூலுண்ட தாய்க்குக் கிடைக்காமல் போய்விடும். இதன் பொருட்டுத்தான் மேற்கண்ட அறிவுரை ஏற்பட்டது. தாய்க்கு அளிக்கும் சத்துணவுதானே வயிற்றிலுள்ள சிசுவுக்குப் போஷாக்கு! எனவே இது பயனுள்ள அறிவுரை'' என்றார் டாக்டர் ராஜு.

''நீங்கள் கூறியதனைத்துமே தாய்க்குலம் வரவேற்கும் சிறந்த அறிவுரைகள் அல்லவா?'' என்று டாக்டருக்குக் கல்கி வாசகர்கள் சார்பில் நன்றி கூறி விடை பெற்றேன்.

— 'பர்ணன்'

---

## அண்ணலுக்குப் பிடித்த பாடல்



காந்திஜிக்குப் பிடித்தமான ஒரு குஜராத்திப் பாடலின் வரிகள் பின்வருமாறு :

ஒரு குவளைத் தண்ணீருக்குப் பதில் ஒரு வேளை விருந்தளி; அன்புடன் கூறும் முகமனுக்கு ஆர்வத்துடன் பணிந்து வணங்கு; ஒரு காசு உனக்கு அளித்தவனுக்கு ஒளிர் பொன் கொடுத்து மகிழ்; உன் உயிரைக் காத்தவனுக்கு உயிர் அளிக்கத் தயங்காதே; இங்ஙனம் அறிஞர் உரைகளையும் செயல்களையும் மதித்து நட; ஒவ்வொரு சிறு தொண்டுக்கும் பதின்மடங்கு பரிசுபெறுவாய்!

ஆனால் உண்மையில் பெரியோர், மன்பதையை ஒன்றென உணர்ந்தோர் இழைக்கப்பட்ட தீமைக்குப் பதில் நன்மை செய்து மகிழ்கின்றனர் !

ஆதாரம் : **சத்தியசோதனை**

தகவல் : **வி. ச. வாசுதேவன்**

# தமிழ்ப் படத்துக்குத்

வழக்கம்போலவே இந்த ஆண்டும் தமிழ்ப் படத்துக்குத் தங்கப் பதக்கம் கிடைக்கவில்லை. ஜனாதிபதியின் தங்கப் பதக்கத்தை நாம் பெறவே முடியாதா? தமிழ்ப் படவுலகில் புதிய திருப்பம் உடனே வரவேண்டும்! — 'பொம்மை'யில் திருவனந்தபுரம் மணி ஏக்கம்.

## இது பற்றித் திரு ஏ. பி. நாகராஜன் அவர்களைக் கேட்டபோது அவர் கூறியதாவது :

தமிழ் நாட்டில் தயாரிக்கப்படும் தமிழ்ப் படங்களில் ஜனாதிபதியின் தங்கப் பதக்கத்தைப் பெறும் தகுதியுள்ள படங்களும் இல்லாமல் இல்லை. மத்திய சர்க்கார் ஜனாதிபதியின் தங்க, வெள்ளி மற்றும் பாராட்டுப் பத்திரங்களைத் தரமுள்ள இந்தியப் படங்களுக்கு வழங்குவதற்கென ஒரு குழுவை அமைத்திருக்கிறார்கள். அக்குழு தீர்மானித்துத் தேர்ந்தெடுக்கும் படங்கள் பரிசுகள் பெறுகின்றன. அக் குழுவிலிருக்கும் அங்கத்தினர்கள் தமிழ்ப் படங்களைப் பார்த்து நன்றாகப் புரிந்துகொள்ள முடியாதவர்களாக இருப்பார்கள் என்று நான் நினைக்கிறேன்.

திரு பந்துலு அவர்கள் 'வீரபாண்டிய கட்டபொம்மன்' படத்தை, நமது நாட்டுச் சுதந்திரத்துக்காகப் பாடுபட்ட வீரனின் கதையை ஏராளமான பொருள் செலவில் படமாக அருமையாக எடுத்திருந்தார். அந்தப் படம் எகிப்து நாட்டில் நடைபெற்ற சர்வதேசப் பட விழாவில் பரிசு பெற்றது. மொழி தெரியாத வெளி நாட்டவர் நமது இந்தியத் தமிழ்ப் படத்தைப் பாராட்டிப் பரிசு வழங்கினார்கள். ஆனால் ஏனோ அந்தப் படத்துக்கு இந்தியாவில் ஜனாதிபதியின் தங்கப் பதக்கம் கிடைக்கவில்லை. மிகவும் வருத்தப்பட வேண்டிய விஷயம் இது.

ஒரு மனிதனின் ஒன்பது விதமான குணங்களை திரு சிவாஜி கணேசன் ஒருவரே ஒன்பது விதமான பாத்திரங்களாக ஏற்று, 'நவராத்திரி' படத்தின் மூலமாகத் திறம்பட வெளிப்படுத்தினார். ஒருவரே ஒன்பது விதமான வேடம் தாங்கி நடிப்பது என்பது சாதாரணமானது அல்லவே! அவருடைய நடிப்புக்காவது 'நவராத்திரி' படம் தங்கப் பதக்கம் பெறும் என்று நம்பினோம். எங்கள் நம்பிக்கை பொய்த்துவிட்டது.

வங்கமொழியில் சத்தியஜித்ரேயின் படம் தங்கப் பதக்கம் பெற்றுள்ளது.

## சினிமா சிந்தனை

நமது இந்திய நாட்டுக் கலாசாரம், பண்பாடு இவைகளுக்கேற்ப இதிகாசப் புராணங்களில் உள்ள கதைத் தொகுப்பில் ஒருசிலவற்றைத் 'திருவிளையாடல்' படத்தின் மூலமாக எடுத்திருந்தோம். மேனாட்டுப் பாணியில் தமிழ்ப் படங்கள் உருவாகி வெளி வந்து கொண்டிருக்கும் தருணத்தில் எங்கள் படத்தை வெளியிட்டோம். படமும் மக்களிடையே அமோகமான ஆதரவைப் பெற்று, வெள்ளி விழாவும் கொண்டாடியது. மக்களின் ஆதரவு பெற்று இருபத்தைந்து வாரங்கள் நிறைந்த வசூலுடன் ஓடிய 'திருவிளையாடல்' படத்தைப் பணம் கட்டி ஜனாதிபதியின் தங்கப் பதக்கம் பெற மத்திய சர்க்கார் குழுவுக்கு அனுப்பினோம். பலன் ஏமாற்றம்தான். இந்த ஏமாற்றத்துக்குப் பிறகு நாங்கள் ஒரு முடிவுக்கு வந்து விட்டோம். என்ன முடிவு தெரியுமா? இனி எங்கள் படத்தை அதாவது நான் தலையிட்டுத் தயாரிக்கும் படத்தை ஜனாதிபதியின் தங்கப் பதக்கம் பெற வேண்டி மத்திய சர்க்கார் குழுவுக்கு அனுப்புவதில்லை என்று! மனம் மிகவும் நொந்து விட்டேன். இப்போது நான் தயாரித்துள்ள தில்லானா மோகனாம்பாளையும் தமிழரின் கலைச் சிறப்பை - பரதம் நாதசுவரம் இவற்றின் உயர்வை - எடுத்துக் காட்டும் நோக்கத்துடனேயே உருவாக்கினேன்.



# தங்கப் பதக்கம்?

தமிழ்ப் படத் தயாரிப்பாளர்களை நமது மாநில சர்க்கார் ஊக்குவித்தால் தமிழ்ப் படத்தின் தரம் மேலும் உயர வாய்ப்பிருக்கிறது என்பது எனது அபிப்பிராயம். பம்பாய் அரசாங்கம் மிகச் சிறந்த படமெனத் தேர்ந்தெடுக்கும் படங்களுக்கு 'தமாஷா' வரிவிலக்கு அளித்து வருகிறார்கள். இந்தச் சலுகை தமிழ்ப் படமான 'வீரபாண்டியக் கட்டபொம்மனுக்கு'க் கிடைக்கும் என்று நினைத்தேன். கிடைக்கவில்லை. பின்னர் 'கப்பலோட்டிய தமிழனுக்'காவது கிடைக்கும் என்றிருந்தேன், கிடைக்கவில்லை. எந்தக் காரியத்திலுமே 'ஊக்குவித்தல்' இல்லையென்றால் அதனால் ஏற்படும் பலன் மிகவும் குறைந்துதான் போகும் என்பது என் கருத்து. (தமிழக அரசு கலைச் சிறப்புமிக்க தமிழ்த் திரைப் படங்களை ஊக்குவிக்க முன் வந்துள்ள நற்செய்தி சமீபத்தில் கிடைத்துள்ளது.)

'தமிழ் நாடு சங்கீத நாடக அகாடெமி' தேர்ந்தெடுக்கும் சிறந்த படத்துக்கும், அதில் சம்பந்தப்பட்ட படத் தயாரிப்பாளர், டைரக்டர், நடிகர், நடிகையர்களுக்கு மட்டுமே பரிசு வழங்குவது வழக்கம். ஒரு முறை இம் மாதிரி தேர்ந்தெடுக்கப்பட்ட படத்தையும், பரிசு பெற்றவர்களையும் பாராட்டிப் பேசும்படி என்னை அழைத்திருந்தனர். நான் பேசியதாவது: ''ஒரு படத்தின் வெற்றிக்குக் கருவூலமாக இருப்பது கதை. அந்தக் கதாசிரியரை விடுத்து மற்றவர்களைப் பாராட்டிப் பரிசு வழங்குவது என்பது ஒரு குடும்பத்தில் உள்ள தாய், தகப்பன், குழந்தைகள் இவர்களில் தாயை மட்டும் விடுத்து மற்றவர்களைப் புகழ்ந்து பாராட்டுவது போலிருக்கிறது.''

இது பற்றி அன்றைய கவர்னர் திரு விஷ்ணுராம் மேதி அறிந்து ''கதாசிரியரை விடுத்து மற்றவர்களைப் பாராட்டிப் பரிசு வழங்கி வந்திருந்தால் அது மன்னிக்க முடியாதது'' என்று குறிப்பிட்டார். இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு தமிழ் நாடு சங்கீத நாடக அகாடெமி கதையாசிரியரையும் கௌரவித்துப் பரிசு வழங்குவது என்று தீர்மானித்துள்ளது.

ஒரே செட்டில் பதினைந்து நாட்கள் நடக்கும் நிகழ்ச்சியைப் பின்னிப் பிணைந்த படம்தான் ஸ்ரீதரின் 'நெஞ்சில் ஓர் ஆலயம்.' துணிகர முயற்சியில் உருவாகிய இந்தப் படத்துக்கு அமோக ஆதரவு மக்களிடையே இருந்தது. ஆனால் அதே ஆதரவு ஜனாதிபதியின் தங்கப் பதக்கம் பெற உரியது என்று தீர்மானிக்கும் குழுவிடம் இல்லை. அன்றாடம் நடக்கும் வாழ்க்கை நிகழ்ச்சிகளை அழகுற, குடும்பச் சூழ்நிலையில் உருவாக்கி, படமெடுத்து ரசிகப் பெருமக்களைப் பெரிதும் கவர்ந்து வருகிறார் நண்பர் கோபாலகிருஷ்ணன். அவரது படத்துக்கும் இதே நிலைதான்.

இதையெல்லாம் நோக்கும்போதுதான் தமிழ் தெரியாதவர்கள் மத்திய சர்க்கார் அமைக்கும் குழுவில் அங்கத்தினர்களாக இருப்பார்களோ என ஐயுறத் தோன்றுகிறது என்கிறார் திரு ஏ. பி. நாகராஜன்.

பேட்டி: **திரைத் துருவி**

இடது பக்கம்: டைரக்டர் ஸ்ரீதர், டைரக்டர் கோபாலகிருஷ்ணன்,

கீழே: டைரக்டர் ஏ. பி. நாகராஜன்.



மலையாள செம்மீனுக்கும் ஜனாதிபதியின் தங்கப்பதக்கம் கிடைத்தது.



இருமலா?

# க்ளைகோடின்

சாப்பிட்டதும் போய்விட்டதே!



சற்று முன்புதான் அவள் இருமலால் தவித்துக் கொண்டிருந்தாள் என்றால் நம்புவீர்களா? பிறகு க்ளைகோடின் சாப்பிட்டாள். க்ளைகோடின் அவள் இருமலை வெகுசீக்கிரம் பூரணமாக நிறுத்திவிட்டது

## பூரண இருமல் கட்டுப்பாட்டுக்கு க்ளைகோடினுக்கு இணை எதுவுமில்லை!

பாதிக்கப்பட்ட எல்லா பகுதிகளிலிருந்தும் இருமலை விரட்டியடிக்க மருத்துவரீதியாக அங்கீகரிக்கப்பட்ட க்ளைகோடின் புதிய ஃபார்முலா செயல்படுவது எப்படி என்று பாருங்கள்:

தொண்டையில்— சளி அடைப்பை அகற்றி, எரிச்சலைச் சமனப்படுத்துகிறது.

நுரையீரல்களில்— அடைத்துக் கொண்டிருக்கும் கோழையைத் தளர்த்தி, சளியை வெளியேற்றுகிறது.



மூளையில்— இருமல் கேந்திரத்தைக் கட்டுப்படுத்துகிறது.

மார்பில்— இறுகிய தசைநார்களுக்கு இதமளித்து சுலபமாக சுவாசிக்க உதவுகிறது.






**க்ளைகோடின்**

டேர்ப் வசாகா

இருமல்களுக்கு, மிக அதிகமாக விற்பனையாகும் வீட்டு நிவாரணி

அலெம்பிக் கெமிகல் ஒர்க்ஸ் கோ. லிட்., பரோடா-3

everest/352a/AWC tm

# ஓநாய்க் கோட்டை.

கதை: வாண்டுமாமா · சித்திரம் ரமணி.

30


















மயக்கந் தெளியாத மனைவி ரூபமதியைக் கையிலேந்தி நண்பன் கந்தனும், தாமகேதுவும் பின் தொடர நாசமாகிக் கொண்டிருக்கும் ஓநாய்த் தெய்வன் கோயில் பிராந்தியத்திலிருந்து – வெளியேறி விரைந்து கொண்டிருந்தான் ஆனந்தன்...



அப்போது அந்தக் கொடிய காவல் மிருகத்தின் இடி ஓசை கேட்டதும் ரூபமதிக்கும் நினைவு திரும்பியது. முன்பு போல மலையேறி மறுபக்கம் செல்ல முடியாது. கணவாய் வழியேதான் சென்றாக வேண்டும். ஆனால் வழியையோ காத்து நின்றது கொடிய மிருகம்......














பிளந்த வாயைமூடிய மிருகம் தன் வாயினுள் இரை அகப்படாததைக் கண்டு ஆத்திரங் கொண்டது. கந்தன் விலகி அதன் பிடரியைப் பற்றிக் கொண்டான்.




ஆத்திரங் கொண்ட மிருகத்தின் கழுத்திலே தன் கத்தியைப்பலங்கொண்ட மட்டும் பலதடவை செரு கிறான்....






கந்தன் ஓங்கி வளர்ந்ததோர் மரத்தின் மீது ஏறி விநோத மான ஓசைகளை எழுப்பிறான். கானகத்தின் குரல் அது. சில நாழிகையில் கந்தனின் தோழன் ஜம்பு அங்கு — தோன்றிறான்.......




கந்தனின் கட்டளைப்படி ரூபமதியை அழைத்துக் கொண்டு கிளம்பிய ஜம்பு, அவளை யானை மீதமர்த்திக் கந்தனின் இருப்பிடத்துக்குச் செல்லும்படி உத்தரவிடு கிறான்.......



# யார்சொன்னது லக்மே டால்கம் விலையுயர்ந்-தது என்று?

## தூவித் தூவி மகிழுங்கள் மேனிமுழுதும்!



தூவித் தூவி மகிழுங்கள் ஆசை தீர. மகரந்த மாரி பொழியட்டும் மெய்குளிர.

நாளெல்லாம் நேசக் கதை சொல்லும் நறுமணம். விரும்பிய மாத்திரத்தில் கைக் கெட்டும் விலைநயம். லக்மே டால்கம்- உரிமை கொள்வீர்கள் உடலார.

உபயோகித்து மகிழ்ச்சிச் சுழலிலே நிலைக்க 'லக்மே கரமான' நறுமணவகைகள் நான்கு: லேவெண்டர், நிர்வாண், வெட்டிவேர், சந்தனம்.



Lakmé

# லக்மே டால்கம்



# மகாபாரதம்

## ராஜாஜி

பிறகு, யுதிஷ்டிரன் அருச்சுனனை நோக்கி, ''உனக்கு எந்தத் தொழிலில் அமர எண்ணம்? அப்பனே! ஒளிக்க முடியாத உன் வீரியத்தை எவ்வாறு ஒளிப்பாய்?'' என்றான். இவ்வாறு அருச்சுனனைக் கேட்கும்போது அவனுடைய பிரதாப காரியங்களையும் கீர்த்தியையும் எடுத்துச் சொல்லப் புகுந்த யுதிஷ்டிரன், நிறுத்த முடியாதவனாக இருபது சுலோகங்கள்வரையில் தம்பியை வருணித்துக் கொண்டே போகிறான். புகழுக்குத் தகுந்தவன் அருச்சுனனைப் போல் உலகத்தில் வேறு யார்?

''அண்ணன்மார்களே! வில்லின் நாண் தேய்த்துத் தழும்பு ஏறிய என்னுடைய கைகளை யாரும் பார்க்காதபடி எப்போதும் ரவிக்கை தரித்து அரசனுடைய ஸ்திரீகளுக்கிடையில் அவர்களுக்கு வேலை செய்யும் நபும்ஸகனாக நான் அமர்ந்து என்னை மறைத்துக் கொள்வேன். இவ்வாறான சாபமும் எனக்கு ஊர்வசி தந்திருக்கிறாள். இந்திரனிடம் சென்றிருந்த போது என்னை அவள் விரும்பிய காலத்தில் நீ எனக்குத் தாயைப் போன்றவள் என்று நான் மறுத்தேன். அவள் கோபம் கொண்டு நீ புருஷத் தன்மையை இழப்பாய்'' என்று என்னைச் சபித்தாள். அந்தச் சாபம் நான் வேண்டும்பொழுது ஒரு வருஷ காலம் மட்டும் என்னை அண்டும் என்று இந்திரன் அனுக்கிரகித்திருக்கிறான். அது இப்பொழுது உதவும். வெண் சங்கினால் செய்யப்பட்ட வளையல்களை அணிந்து ஸ்திரீகளைப் போல் தலைமயிரைப் பின்னிவிட்டுக் கொண்டு ரவிக்கை தரித்து, விராடன் அந்தப்புரத்து வேலையில் இழிதொழிலில் அமர்ந்து மறைவேன். ஸ்திரீகளுக்கு நர்த்தனம், கானம் கற்பிப்பேன். யுதிஷ்டிரனுடைய அரண்மனையில் திரௌபதிக்குப் பரிசாரகம் செய்து பழக்கப் பட்டிருக்கிறேன் என்று விராடன் அந்தப்புரத்தில் வேலைக்கு வைத்துக் கொள்ளக் கேட்பேன்'' என்று சொல்லித் திரௌபதியைப் பார்த்துச் சிரித்தான் தனஞ்சயன்.

யுதிஷ்டிரன், ''ஹா! உலகத்தில் கீர்த்தியினாலும் பராக்கிரமத்தாலும் வாசுதேவருக்குச் சமமானவன். பரத வம்சத்தில் உதித்தவன். மேரு மலையைப் போன்றவன், விராடனிடத்தில் 'நான் நபும்சகன்; எனக்கு அந்தப்புர வேலை தா' என்று கேட்கப் போகிறானா? இதுவும் நம் விதியா?'' என்று மீண்டும் துக்கத்தில் ஆழ்ந்தான்.

பிறகு தருமபுத்திரன் நகுலசகதேவர்களைப் பார்த்தான். ''அப்பா, நகுலனே! அழகிய சியாமள நிறத்தவனே! சுகானுபவத்துக்குத் தகுந்தவனே! துக்கத்துக்குத் தகாதவனே! நீ என்ன வேலையில் அமரப் போகிறாய்?'' என்று மாத்ரியை நினைத்துக் கொண்டு பரிதபித்துக் கேட்டான்.

''நான் விராடனுடைய குதிரை லாயத்தில் வேலைக்கு இருக்கப் போகிறேன். குதிரைகளைப் பழக்குவதிலும் பார்த்துக் கொள்வதிலும் என் மனம் சந்தோஷமடையும். குதிரைகளுக்குச் செய்ய வேண்டிய வைத்தியமும் நான் நன்றாய்ப் படித்திருக்கிறேன். எந்தக் குதிரைக் குட்டியையும் என்னால் அடக்க முடியும். ஏறிச் சவாரி செய்து பழக்குவதிலும், வண்டி, தேர் முதலிய வாகனங்களில் கட்டிப் பழக்குவதிலும் நான் சாமர்த்தியம் பெற்றிருக்கிறேன். பாண்டவர்களிடத்தில் நான் குதிரைகளைப் பார்த்துக் கொண்டிருந்தேன் என்று சொல்லி விராட ராஜனிடம் வேலை சம்பாதித்துக் கொள்வேன்'' என்றான்.

''பிரஹஸ்பதிக்குச் சமமான புத்தி படைத்த சகதேவன், நீதி சாஸ்திரத்தில் சுக்கிரன் போன்ற நிபுணன், மந்திராலோசனையில் ஒப்பற்ற இவன் என்ன செய்வான்?'' என்றான் யுதிஷ்டிரன்.

''நகுலன் குதிரைகளைப் பார்க்கட்டும். நான் மாடுகளைப் பார்த்து வரும்

வேலையில் அமரலாம் என்றிருக்கிறேன். விராடனுடைய பசுக்களையும் காளைகளையும் நோய்களாவது காட்டு மிருகங்களாவது அண்டாமல் காத்து வருவேன். மத்ஸ்ய ராஜ்யத்தினுடைய பசுக்கள் எண்ணிக்கையில் பெருகி புஷ்டியாக வளர்ந்து நிறையப் பால் தரும்படியாகப் பார்த்து வருவேன். காளைகளின் லட்சணங்களும் எனக்கு நன்ருய்த் தெரியும்'' என்ருன் சகதேவன்.

''கிருஷ்ணையே! நீ என்ன வேலை செய்ய முடியும்?'' என்று திரௌபதியைக் கேட்க நினைத்த தருமபுத்திரன் அந்தக் கேள்வியைக் கேட்க முடியாதவனுகத் திகைத்தான். 'பிராணனைக் காட்டிலும் பிரியமானவள். பெற்ற தாயைப் போல் பூஜித்துக் காப்பாற்றத் தக்கவள். மிருதுவான தேகத்தைக் கொண்ட அரசகுமாரி, எந்தச் சேவக வேலையில் எவ்வாறு அமர முடியும்' என்று திகைத்தான்.

''ராஜேந்திரனே! என் காரணமாக நீர் சோகத்தில் திகைக்க வேண்டாம். என்னைப் பற்றி மனக் கவலைப்படாமல் இருக்க வேண்டும். பிரபுவே! நான் விராடனுடைய அந்தப்புரத்தில் வேலைக்கு இருப்பேன். ராஜ ஸ்திரீகளுக்குத் தோழியாகவும், பரிசாரகம் செய்தும் வருவேன். என் சுதந்திரத்தையும் கற்பையும் காப்பாற்றி வருவேன். ஸைரந்திரிகளுக்கு இந்த உரிமை உண்டு. தலைமயிர் பின்னுவதிலும் அந்தப்புர ஸ்திரீகளுடன் சந்தோஷமாகச் சம்பாஷணை செய்து காலம் கழிக்கச் செய்யும் வேலையிலும் நான் இருப்பேன். யுதிஷ்டிரனுடைய அரண்மனையில் திரௌபதி தேவிக்கு இவ்வாறே சேவை செய்து பழகியிருக்கிறேன் என்று சொல்லி விராடராஜனுடைய மனைவியிடம் வேலை சம்பாதித்துக் கொண்டு இருப்பேன்'' என்ருள்.

''கல்யாணி! உன்னுடைய குலத்துக்குத் தகுந்த மங்களகரமான வார்த்தையைப் பேசினுய்!'' என்று யுதிஷ்டிரன் திரௌபதியின் தைரியத்தைப் பாராட்டினுன்.

இவ்வாறு பாண்டவர்கள் தீர்மானித்த பிறகு தௌம்யர் அவர்களை ஆசீர்வதித்து, அவர்களுக்குப் புத்திமதிகளும் சொன்னுர். ''ராஜக்கிரகத்தில் வேலைக்கு இருக்கிறவர்கள் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். அதிகமாகப் பேசாமல் அரசனை உபாசிக்க வேண்டும். கேட்ட பின்னரே யோசனை சொல்ல வேண்டும். கேளாமல் ஒருபோதும் அரசனுக்கு யோசனை சொல்லப் புகலாகாது. சமயம் பார்த்து அரசனைப் புகழ வேண்டும். அற்ப காரியமாயினும் அரசனிடத்தில் தெரிவித்தே செய்ய வேண்டும். அரசன் மனித உருவம் கொண்ட நெருப்பு ஆவான். அதிகம் கிட்ட நெருங்கக் கூடாது. அலட்சியம் செய்யக் கூடாது. எவ்வளவு நம்பிக்கையும் அதிகாரமும் பெற்ற போதிலும் எந்த சமயமும் உடனே நீக்கப்படலாம் என்று வாயிலைப் பார்த்தவண்ணமாகவே எப்போதும் இருக்க வேண்டும். அரசர்களிடத்தில் நம்பிக்கை வைத்தல் மூடத்தனமாகும். அரசனுடைய அன்பைப் பெற்றுவிட்டதாக எண்ணி, அவனுடைய வாகனத்திலாவது ஆசனத்திலாவது ரதத்திலாவது ஏறக் கூடாது. அரசனிடத்தில் சேவை செய்கிறவன் சோம்பலற்று மனத்தை அடக்கினவனுகவே இருக்க வேண்டும். அரசனுல் கௌரவிக்கப்பட்டாலும் அவமதிக்கப்பட்டாலும் சந்தோஷமாவது மன வருத்தமாவது காட்டக் கூடாது.

'' ரகசியமாகச் சொல்லப் பட்ட வார்த்தைகளை வெளியில் பேசக் கூடாது. குடிகளிடமிருந்து எந்தவிதமான பரிதானமும் வாங்கக் கூடாது. வேறொரு சேவகனைப் பார்த்துப் பொருமைப்படக் கூடாது. அறிவுள்ளவர்களை விட்டு மூடர்களை அதிகாரத்தில் அரசன் வைப்பான். அதைக்



கண்டு மனக் கசப்பு அடையக் கூடாது. அரண்மனை ஸ்திரீகள் விஷயத்தில் மிகவும் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். அவர்களிடத்தில் நேசம் பாராட்டக் கூடாது.''

இவ்வாறு ராஜசேவகர்களுக்கு வேண்டிய இன்னும் அநேக எச்சரிக்கைகளைத் தௌம்யர் உபதேசம் செய்துவிட்டு, ''பாண்டவர்களே! ஒரு வருஷம் விராடனிடத்தில் சேவக விருத்தியில் இவ்வாறு பொறுமையுடன் இருந்து முடித்தீர்களானால், பிறகு உங்களுடைய ராஜ்யத்தை அடைந்து சுகமாக வாழ்வீர்கள்'' என்று ஆசீர்வதித்தார்.

## 44. மானம் காத்தல்

தருமபுத்திரன் சந்நியாசி வேஷம் தரித்தான். அருச்சுனன் ஒரு நபும்ஸகனாகவே மாறிவிட்டான். மற்றவர்களும் தோற்றம் மாறி யாரும் கண்டு கொள்ளாதவாறு ஆனார்கள். உருவம் மாறி இருந்தாலும் அவர்களுக்கு இயற்கையான வசீகரத் தோற்றமும் தேஜசும் பழையபடி இருந்தன. ஆகையால் விராட ராஜனிடம் வேலையில் அமர்வதற்காகப் போன காலத்தில், இவர்கள் அரசு புரியும் யோக்கியதை படைத்தவர்களாகக் காணப்படுகிறார்கள், குற்றேவல் செய்யத் தகுந்தவர்களல்ல என்று ஒவ்வொருவரைப் பற்றியும் எண்ணி வேலையில் அமர்த்திக் கொள்ள விராடன் முதலில் தயங்கினான். ஆயினும் பாண்டவர்கள் வற்புறுத்தியதின் பேரில் தைரியம் கொண்டு, சந்தோஷமாகவே அவர்கள் கேட்டுக் கொண்ட பணிவிடை ஸ்தானங்களில் அவரவர்களை அமைத்தான்.

யுதிஷ்டிரன் விராடராஜனுக்கு ஆஸ்தானத் தோழனாக இருந்து கொண்டு அவனுடன் சொக்கட்டான் ஆடிக் கொண்டு காலம் கழித்து வந்தான். பீமன் மடைப்பள்ளித் தலைவனாக வேலை செய்து வந்தான். அவ்வப்போது பிரசித்திபெற்ற மல்லர்களுடன் குஸ்தி பிடித்தும் துஷ்ட மிருகங்களைச் சமாளித்தும் அரசனை மகிழ்வித்து வந்தான்.

அருச்சுனன் பிருகன்னளை என்ற பெயருடன் அந்தப்புரப் பெண்களுக்கு, முக்கியமாக விராடன் மகள் உத்தரைக்கும் அவளுடைய தோழிகளுக்கும் வேலைக்காரர்களுக்கும், நிருத்தியமும் கானமும் வாத்தியங்கள் வாசிக்கவும் கற்பித்து வந்தான். நகுலன் குதிரைகளைப் பழக்குவதிலும் அடக்குவதிலும் அவற்றின் நோய்களுக்குச் சிகிச்சை செய்வதிலும் பாதுகாப்பதிலும் மிகுந்த



திறமை காட்டி விராடனுக்குச் சேவை செய்து வந்தான். சகதேவன் பசுக்களை யும் காளைகளையும் கவனித்து வந்தான்.

பல தாசிகளுடைய பணிவிடை யைத் தான் பெறத்தக்க ராஜகுமாரி யான பாஞ்சாலி, விராடன் மனைவி சுதேஷ்ணைக்கு ஊழியம் செய்து கொண்டு, அந்தப்புர ஸைரந்திரியாகக் காலம் கழித்தாள். பர்த்தாக்களுடைய சத்தியப் பிரதிக்ஞையைக் காப்பாற் றும் பொருட்டு மனத்துக்கு ஒவ்வாத குற்றேவல் பணிகளில் ஈடுபட்டாள்.

சுதேஷ்ணையின் சகோதரன் கீசகன், விராடனுடைய சேனைத் தலைவன். அவ னும் அவன் குலத்தவரும் விராடனுடைய படை வீரர்களாக இருந்து விருத்த னை விராடராஜனுடைய பலத்தை மிகவும் பெருக்கினார்கள். மஸ்த்ய தேசத்துக்கு உண்மையான அரசன் கிழவன் விராடன் அல்ல, கீசகனே என்று பாமர ஜனங்கள் சொல்லிவந் தார்கள். அவனுடைய செல்வாக்கு அவ்வளவு ஓங்கியிருந்தது.

அந்தக் கீசகன் தன் பலத்தாலும் அரசனிடம் தனக்கிருந்த செல்வாக்கா லும் செருக்கடைந்து மதி இழந்தவனா னான். திரௌபதியைக் கண்டது முதற் கொண்டு காமவிகாரமடைந்து, இவள் ஒரு வேலைக்காரிதானே, இவளை எளிதில் அடையலாம் என்று எண்ணிப் பல தடவை முயற்சி செய்தான்.

சுதேஷ்ணையிடமாவது மற்றவர்களிட மாவது இதைப் பற்றிச் சொல்லிக் கொள்ளத் திரௌபதி கூச்சப்பட் டாள். தன்னை யாராவது அவமதித் தால் அவர்களைத் தன்னுடைய பதி களான கந்தர்வர்கள் ரகசியமாக வதம் செய்து விடுவார்கள் என்று சொல்லிக் கொண்டு வந்தாள். அவ ளுடைய ஒழுக்கத்தையும் தேஜஸை யும் பார்த்துக் கந்தர்வர்களைப் பற்றி அவள் சொன்னதை எல்லோரும் நம்பி வந்தார்கள். ஆனால், கீசகன் கந்தர்வர் களைப் பொருட்படுத்தவில்லை. பல தடவை திரௌபதியை அடைய முயற்சி செய்தும் பயன்பெறாமல் கடைசி யில் தன்னுடைய சகோதரி சுதேஷ்ணை யிடம் விஷயத்தைத் தெரிவித்தான்.

"உன்னுடைய ஸைரந்திரியைப் பார்த்தது முதல் எனக்குத் தூக்கமில்லை. சுகமில்லை. அவளை எப்படியாவது என் னிடம் நீ சேர்ப்பிக்க வேண்டும்" என்று சகோதரியைக் கெஞ்சினான்.

சொல்ல வேண்டிய புத்திமதியும் நல்ல வார்த்தைகளும் அவள் எவ் வளவோ சொல்லிப் பார்த்தாள். கீசகன் கேட்க வில்லை. முடிவில் சுதேஷ்ணை, கீசகன் சொன்னதை ஒப்புக் கொண்டாள். இருவருமாக யுக்தி செய்து திரௌபதியை வலையில் சிக்க வைக்கத் தீர்மானித்தனர்.

ஒரு நாள் இரவில் கீசகனுடைய வீட்டில் விசேஷமான பணியாரங் களும், மதுபானமும் தயார் செய்து அந்தச் சமயம் சுதேஷ்ணை ஸைரந்திரி யைக் கூப்பிட்டு, "நீ தம்பி கீசகன் வீட்டுக்குப் போய் இன்று அங்கே பக்குவமாக இருக்கும் மதுபானத்தை இந்தப் பாத்திரம் நிறைய வாங்கி வா" என்று கூறி ஓர் அழகிய பொன் கலசத்தை அவளிடம் கொடுத்தாள்.

"நான் இந்த நேரத்தில் கீசகன் வீட்டுக்குத் தனியாகப் போகமாட் டேன்: எனக்குப் பயமாக இருக்கிறது. வேறு யாரையாவது அனுப்புங்கள், எத்தனையோ வேலைக்காரிகள் இருக் கிறார்களே!" என்று சொல்லிப் பலவாறு சுத் திரௌபதி வேண்டிக் கொண்டாள்.

சுதேஷ்ணை கேட்கவில்லை. கோபித் துக் கொண்டவள் போல் நடித்து, "நீயே போக வேண்டும். வேறு யாரையும் அனுப்ப முடியாது" என்று திரௌபதியை அனுப்பினாள்.

கீசகன் வீட்டில் அவள் பயந்த வாறே நடந்தது. காமவெறி கொண்ட அந்த நீசன், திரௌபதியைக் கெஞ்சியும் வற்புறுத்தியும் தொந்தரவு செய்தான்.

"ராஜ குலத்தைச் சேர்ந்த நீ கீழ் ஜாதியைச் சேர்ந்த என்னை ஏன் விரும்பு கிறாய்? அதர்மத்தில் ஏன் பிரவேசிக் கிறாய்? கணவனைப் படைத்த ஒரு ஸ்திரீயை ஏன் தீண்டப் பார்க்கிறாய்? நசித்துப் போவாய். எனக்குக் காவ லாக இருக்கும் கந்தர்வர்கள் கோபம் கொண்டு உன்னை வதம் செய்து விடு வார்கள்!" என்று அவன் விருப்பத்தை மறுதளித்தாள்.

எவ்வளவு வற்புறுத்தியும் திரௌபதி கேளாததைக் கண்டு கீசகன் அவ ளுடைய கையைப் பிடித்து இழுத்தான். திரௌபதி தன் கையிலிருந்த பாத்தி ரத்தைக் கீழே போட்டுவிட்டு அவனை உதறித் தள்ளி வெளியே ஓடினாள். கீசகன் கோபம் மேலிட்டு அவளைப் பின்தொடர்ந்தான். ராஜ சபையிடம் முறையிட்டுக் கொண்டு ஓடின அவளை அதிகாரத்தினாலும், செல்வத்தினாலும், மதம் கொண்டு யாரையும் லட்சியம் செய்யாமல், 'சீ! தாசி!' என்று சொல் லிப் பல பேரும் பார்க்கக் காலால் உதைத்தான். விராடனைத் தன் வசப் படுத்திக் கொண்டு சகல அதிகாரமும் பெற்றிருந்த சேனைத் தலைவனைக் கண்டு எல்லோருக்கும் பயம். அவன் அக்கிர மத்தைத் தைரியமாக நின்று கண்டிக்க யாரும் முன்வரவில்லை. **(தொடரும்)**


2x2 பாப்ளின்கள் கோடையிலும்
உங்களைக் குளுமையுடன்
வைப்பதற்கே; அணிய எளிதான,
பராமரிக்க இலகுவான பாடிஸ்ட்,
டெரீன்/பருத்தி கலப்பு நெசவு;
சொற்ப அளவே இஸ்திரித்
தேவையுள்ள சுசங்காத் தன்மையுடைய
ஸான் பொரைஸ்டு பாப்ளின்கள்-
எல்லாம் உங்கள் சக்திக் கேற்ற
விலைகளிலே. எவர் விரும்புவதற்கும்
ஏற்ற திஜுசுகள், நவீன வண்ணங்கள்,
இன்ப வண்ணங்கள்.
அழகான துணிகளிலே
எடுப்பான பிரிண்டுகள்
TATA Textiles




மிளகாயாவது இனிப்பதாவது? இதென்ன தப்பு அபிப்பிராயத்தை உண்டாக்கக் கூடிய தலைப்பு? என்று மிளகாயைக் கடித்துவிட்டவர்கள் மாதிரி வாசகர்கள் சீறலாம்! அதற்கு அவர்களுக்கு உரிமை உண்டு! மிளகாயைப் பற்றிச் சில இனிப்பான செய்திகள் செவிகளில் விழுந்தன. அதனால்தான் இந்தத் தலைப்பு. இந்தத் தலைப்பினால் மிளகாயின் இயற்கைக் காரத்தைக் குறைத்துவிட முடியாது. மதிப்பை உயர்த்தலாம்!

அந்நியச் செலாவணிக்கு வழி செய்து கொடுக்க இந்த மிளகாய் உதவுகிறது என்பது பொருளாதார விற்பன்னர்களுக்கு இனிக்கும் செய்தி இல்லையா?

மிளகாயில் வைட்டமின்கள் 'ஏ'யும், 'ஸி'யும் இருக்கின்றன என்ற கண்டுபிடிப்பு, வைட்டமின் மாத்திரைகளையும் டானிக்குகளையும் வாங்கி விழுங்க வசதியில்லாத ஏழை மக்களுக்கு இனிப்பான செய்தி இல்லையா?

வடக்கெல்லையில் சில பகுதிகளில் முற்றுகை இட்டது போதாதென்று மிளகாய் ஏற்றுமதி மார்க்கெட்டிலும் நமக்குப் போட்டியாகத் தன் சரக்கை முன் கொண்டு நிறுத்தி, சீனா முற்றுகை இடுகிறது என்ற சமாசாரம் அரசியல்வாதிகளின் மேடைப் பேச்சுக்கு உகந்த செய்தி இல்லையா?

இனிக்கும் மிளகாய் என்று தலைப்புக் கொடுத்ததில் தவறு இல்லையே!

மிளகாயைப் பற்றி இதோ மேலும் சில செய்திகள்:

காட்டமான, காரமான மிளகாய் உற்பத்தியில் பாரதத்துக்குத் துணையாக மெக்ஸிகோ, ஜப்பான், எதியோப்பியா, உகாண்டா, நைஜீரியா, தாய்லாந்து, துருக்கி இந்தோனேஷியா, சீனா, பாகிஸ்தான் ஆகிய நாடுகள் நிற்கின்றன.

அரசியலில் தீவிரவாதிகள், மிதவாதிகள் என்று இருப்பது போல மிளகாய் உலகிலும் உண்டு.

காரம் குறைந்த 'பாப்ரிகா' என்ற வகை மிளகாயை ஸ்பெயின், யுகோஸ்லோவியா, ருமேனியா ஆகிய நாடுகள் பயிரிட்டு, அண்டை நாடுகளுக்கு ஏற்றுமதி செய்கின்றன.

மற்ற நாடுகளில் மிளகாய் பயிராவதில்லை என்று பொருள் இல்லை. அங்கேயெல்லாம் உள்நாட்டுத் தேவைக்குத்தான் போதுமானதாயிருக்கிறது:

பாரதத்திலும் அப்படி. பொன்றும் தேவைக்கு மேல் அபரிமிதமாக விளைந்து மிஞ்சவில்லை. நூறு மிளகாய் காய்த்தால் அதில் தொண்ணூற்றி ஏழு மிளகாய்களை நாமே சாப்பிட்டு விடுகிறோம். ஏற்றுமதிக்காக மிஞ்சுவது மூன்று மிளகாய். இந்த மூன்று மிளகாயிலும் கிட்டத்தட்ட இரண்டே முக்கால் மிளகாயை அண்டை நாடான இலங்கைக்கேதான் இதுவரை அனுப்பிக் கொண்டு வருகிறோம். நாம் அனுப்பும் அளவு இலங்கையின் தேவையில் சரி பாதி தான். மறு பாதியை இலங்கை மற்ற நாடுகளிலிருந்து வாங்குகிறது.

இந்தப் பாதித் தேவைப் பூர்த்திக்கும் பங்கம் ஏற்படலாம் என்று பாரதம் அச்சப்படுகிறது. காரணம் சீனாவும், பாகிஸ்தானும் விலையைக் குறைத்துத் தங்கள் சரக்கைத் தள்ளத் தயாராக இருக்கின்றன.

இதனால் 1964–65ல் அனுப்பியதை விட ஆறு மடங்கு அதிகமாக 1966–67ல் பாகிஸ்தான் இலங்கைக்கு மிளகாய் ஏற்றுமதி செய்திருக்கிறது.



சென்னை சாஸ்திரி பவனில் ஒரு காரமான கண்காட்சி நடைபெற்றது. அந்த மிளகாய் வற்றல் காட்சியைத் திறந்து வைத்தவர் விவசாய அமைச்சர் ஏ. கோவிந்தசாமி அவர்கள்.

பாரதத்தின் ஏற்றுமதி அளவு 1964ல் அதிகமாக இருந்தது. (15,414 டன்கள்) அடுத்த இரண்டு வருடங்களில் மிகவும் குறைந்து, 1967ல் ஏறத்தாழ மூவாயிரம் டன் அதிகரித்து 9434 டன்களை எட்டியது.

ஏற்றுமதியின் அளவு ஜப்பானில் கடந்த சில ஆண்டுகளாகக் குறைந்து கொண்டே வருகிறது. உற்பத்திச் செலவு அதிகரித்ததும், உள்நாட்டுத் தேவை பெருகியதுமே இதற்குக் காரணம்.

பாரத மிளகாய் ரகம் இப்போது சற்றுக் கூடுதலாகவே அமெரிக்கா செல்லும் வாய்ப்பு இருப்பதாகத் தோன்றுகிறது. காரணம், இதுவரை ஜப்பானிலிருந்து அங்கு போய்க் கொண்டிருந்த சரக்கின் அளவு குறைந்து கொண்டு வருகிறது.

ஆனால் அமெரிக்க இறக்குமதியாளர்கள் இந்திய மிளகாய் வியாபாரத்துக்குப் பல நிபந்தனைகள், கட்டுப்பாடுகள் எல்லாம் விதிக்கிறார்கள். காம்பு இல்லாத மிளகாயாக அவர்களுக்குத் தேவையாம். பக்குவமான காலத்தில் காம்புகளை அகற்றி மிளகாய்களைப் பாதுகாக்க வேண்டும். அப்படிப் பாதுகாக்காவிட்டால் உள்ளே இருக்கும் விதைகள் சிந்திவிடும். விதைகள் சிந்தினால் நிறை குறையும். நிறை குறைந்தால் பணமும் குறையுமே! மேலும் அவர்களுக்கு, ரகம் ரகமாகப் பிரித்துக் கண் கவரும் விதத்தில் 'பாக்' பண்ணி அனுப்ப வேண்டும்!

அமெரிக்கா, கானடா, ஐரோப்பிய நாடுகள், கிழக்கு ஆசிய நாடுகள் முதலிய வற்றில் நம் மிளகாய் வியாபாரத்தைப் பெருக்கும் வழிகளை ஆராய ஒரு தூதுக் குழுவே சமீபத்தில் புறப்படவிருக்கிறது.

மெக்ஸிகன் மிளகாய் ரகம், மெக்ஸிகோ நாட்டுத் தொப்பி மாதிரியே பெரிதாக இருக்கிறது. சீனச் சிவப்பு மிளகாய் நம் பக்கத்துச் சாத்தூர் மிளகாய் வத்தலைப் போல் இரண்டு மடங்கு பெரிதாக இருக்கிறது. ஜப்பான் நாட்டு மிளகாய் ரகத்துக்கும் நம் நாட்டு மிளகாய்க்கும் இடையே அதிக வித்தியாசமில்லை.

வைட்டமின் 'ஏ' மிளகாய் வத்தலில் அதிகமாகவும் வைட்டமின் 'ஸி' பச்சை மிளகாயில் அதிகமாகவும் இருக்கின்றன. புரதச் சத்து பச்சை மிளகாயில் இருப்பதை விட வத்தல் மிளகாயில் ஐந்து மடங்கு கூட இருக்கிறது.

மேலே சொன்ன விஷயங்களெல்லாம் சமீபத்தில் சென்னையில் நடந்த மிளகாய்க் கருத்தரங்கத்தில் சேகரித்தவைதான்.

'மிளகாய்க்கு ஒரு கருத்தரங்கமா?' என்று பிரமிக்காதீர்கள்!

ஏற்கனவே ஏலக்காய், புகையிலை, மிளகு ஆகிய மூன்றுக்கும் கருத்தரங்குகள் நடத்தி அனுபவப்பட்ட ஏற்றுமதி அபிவிருத்திக் குழுதான் இந்தக் கருத்தரங்கத்துக்கும் ஏற்பாடு செய்திருந்தது. பிற நாட்டு மிளகாய் வற்றல்கள், பண்டங்கள் கொண்ட கண்காட்சி ஒன்றையும், தயார் செய்திருந்தார்கள். இல்லாவிடில் மெக்ஸிகோ மிளகாயைச் சென்னையில் பார்க்க முடியுமா?

---




**பி**ன்லாந்து நாட்டினர் தங்களுடைய தாய்மொழியில் பற்று மிகுந்தவர்கள். அதே சமயத்தில் தங்களுடன் கூடவே வாழும் சுவீடிஷ்காரர்களின் தாய் மொழிக்கும் அவர்கள் உரிய மதிப்பு அளிக்கத் தவறியதில்லை. பின்லந்தின் தலைநகர் ஹெல்ஸிங்கியில் நவீன வசதிகளுடன் கூடிய அஞ்சல் நிலையம் ஒன்று கட்டி முடிக்கப்பட்டது. அந்தக் கட்டிடத்தின் முகப்பில் பெயரிடுவது பற்றி ஒரு சிறு சர்ச்சை ஏற்பட்டது. நகரின் மக்கள் தொகையில் சுவீடிஷ்காரர்கள் பத்தில் ஒரு பகுதியினர். ஆகையால் அவர்கள் கட்டிடத்தின் முகப்பில் தங்கள் மொழிப்படி 'போஸ்ட்' (Post) என்ற சொல்லையும் வைக்க வேண்டும் என்றனர். பின்லந்தினர் மொழியின் படி 'போஸ்டி' (Posti) என்ற சொல்லுக்கு அஞ்சல் என்று பெயர். 'இந்தக் கட்டிடத்துக்கு போஸ்டி என்ற பெயர் ஒன்று மட்டும் இருந்தால் போதும்' என்று பின்லந்துக்காரர்கள் கூறிப்பார்த்தார்கள். ஆனால் சுவீடிஷ்காரர்கள் இதற்கு இணங்கவில்லை. ஆகவே, இரு சாராருக்கும் திருப்தி அளிக்கக்கூடிய வழி ஒன்றை நகரசபை கண்டுபிடித்து அதைச் சிபாரிசு செய்தது. அதன்படி கட்டிடத்தின் முகப்பில் நியான் விளக்குகளைக் கொண்டு போஸ்டி (Posti) என்ற பின்னிஷ் பெயரை அமைத்துவிட வேண்டும். மக்கள் தொகையில் சுவீடிஷ்காரர்கள் பத்தில் ஒரு பகுதியினர் அல்லவா? ஆகவே, பத்து விநாடிகளுக்கு ஒரு முறை போஸ்டி என்ற சொல்லிலுள்ள (i) என்ற எழுத்து அணைந்து அணைந்து எரியும்படி செய்துவிட வேண்டும். அப்போது சுவீடிஷ்காரர்கள் விரும்பியது போல் போஸ்ட் என்ற பெயரையும் வைத்து விட்டது போல் ஆகிறதல்லவா? இந்தச் சிபாரிசுப்படிதான் இன்றும் ஹெல்ஸிங்கியில் மொழி ஒற்றுமை வளர்ந்து வருகிறது!

தகவல்: **''கோக்கி''**

ஆதாரம்: **நாஷனல் ஜியாகரபிகல் புல்லட்டின்**









# திடீர் நடிப்பு

திடீர் இட்டிலி, திடீர் சாம்பார் எல்லாம் நமக்குத் தெரியும். ஆனால் இது என்ன திடீர் நடிப்பு ?

தாரா ராமநாத சாஸ்திரி இந்தக் கலையில் நிபுணர். ஓங்கோல் வி. எஸ். ஆர். சர்மா கல்லூரியில் தெலுங்கில் விரிவுரையாளராகப் பணியாற்றும் சாஸ்திரி அவர்களிடம் ஏதாவது ஒரு கதையின் குறிப்பிட்ட கட்டத்தைச் சொல்லிவிட வேண்டியதுதான். உடனே அந்தக் காட்சிக்குரிய வசனத்தைத் தாமே தயாரித்து, நடித்தும் விடுகிறார் ஒரு சில நிமிஷங்களுக்குள்.

குண்டூரில் 1932ல் பிறந்த இவர் தெலுங்கில் எம். ஏ. பட்டம் பெற்றுள்ளார். அறுபதுக்கு மேற்பட்ட நாடகங்களில் நடித்து அனுபவம் பெற்ற பிறகு இந்தப் புதிய ரக நடிப்புத் துறையில் இறங்கினர். 1954ஆம் ஆண்டில் முதன் முதலாக இந்தப் பாணியைக் கையாண்டு மேடை ஏறியவர் உடனுக்குடன் பிரபலமாகி விட்டார்.

சபையில் உள்ள ரசிகர்களில் ஒருவர், ''தங்கப் பதுமையாக சீதையை நிறுத்திவிட்டு அசுவமேதயாகம் செய்யும் ராமனுடைய மனநிலையை விளக்குகிற விதத்தில் நடித்துக் காட்டு'' என்று ஒரு சீட்டு அனுப்புவார். ஒப்பனைக்கு எடுத்துக் கொள்ளும் பத்து நிமிஷங்களில் சாஸ்திரி அந்தக் கட்டத்துக்கான வசனத்தைத் தயாரித்துக் கொண்டு மேடைக்கு வந்து நடிப்பார்.

இப்படிப் பிரபலமான அல்லது புராணக் கதைகளில் வரும் காட்சிகளைத்தான் நடிப்பார் என்பதில்லை. அவர் இதற்குமுன் படித்தே இராத ஒரு நாவலில் வரக்கூடிய ஒரு கட்டத்தை விளக்கி, அந்தக் காட்சியை நடித்துக் காட்டுமாறு சொன்னால் அதையும் திறம்பட உடனுக்குடன் நிறைவேற்றுவார். ஒருசில நிமிஷங்களில் வசனத்தைத் தயாரித்து, ஒப்பனை செய்து கொண்டு மேடையில் தோன்றிச் சபையோரைக் கவர்ந்து விடுவார்.

கவி சம்ராட் விச்வநாத சத்யநாராயணா, திரைப்பட நடிகர்கள் ஜெயராஜ், நாகேசுவர ராவ், பிருதிவிராஜ்கபூர், ஆந்திர நாட்டு நாடக உலகில் பிரசித்தமான ஸ்தானம் நரசிம்மராவ் முதலியோர் இவரைக் குறிப்பிட்ட ஒரு கட்டத்தை நடிக்குமாறு முன் அறிவிப்பின்றிக் கேட்டு, உடனுக்குடன் அவர் அபாரத் திறமையுடன் தங்கள் கோரிக்கையை நிறைவேற்றுவதைக் கண்டு திகைத்திருக்கிறார்கள் !

வசனகர்த்தாவாகவும், நடிகராகவும், ஒப்பனையாளராகவும் ஒருங்கே ஒரே சமயத்தில் விளங்கி மின்னல் வேகத்தில் செயலாற்றும் ராமநாத சாஸ்திரி, தமது புது முறை நாடகக் கலைக்குச் சூட்டி இருக்கும் பெயர் நாட்டியாவதானம் !

— ஜகந்நாத்

## உழவர் பெருமக்களுக்கு
## எங்கள் சேவை...

தண்ணீர் இறைக்க பம்பு செட்டு, நல்ல உரம்
பூச்சி கொல்லி மருந்து, டிராக்டர்
முதலியவைகள் வாங்க விவசாயிகளுக்கு
குறைந்த வட்டியில் கடன் வழங்குகின்றோம்.
நாடு தன்னிறைவு பெற விவசாயிகளுக்கு
உவகையுடன் உதவி செய்கின்றோம்.

செழுமையான அறுவடை-மிகுந்த லாபம்...
உங்கள் பணத்தை கீழ்க்கண்ட கணக்குகளில் போட்டு
அதிக லாபம் பெறுங்கள்.

சேவிங்ஸ் டிபாசிட்டுகளுக்கு 5%
பிக்சட் டிபாசிட் 8% வரை
ரெக்கரிங் டிபாசிட் 8½% வரை
வட்டி அளிக்கப்படுகிறது





**தஞ்சாவூர் பர்மனேனன்ட் பாங்க் லிமிடெட்**

புதிய அலுவலகம்: 1087, மிஷன் தெரு, தஞ்சாவூர்
K. V. சச்சிதானந்த மூப்பனார்-சேர்மன்
B. K. மாதவன்-செக்ரட்டரி

VSK/TPB/AG 1

---



உங்களுக்கும்
உங்கள் நண்பர்களுக்கும்

மகிழ்ச்சி அளிப்பது......
நீடித்த நறுமணம் வீசுவது



**Priya**
**PERFUME**

பிரியா
வாசனை

புத்தம் புதிய மலர்களின்
வாசனைக்கு ஒப்பானது

**பெங்கால் கெமிகல்**

கல்கத்தா ■ பம்பாய் ■ கான்பூர் ■ டெல்லி

# பொன்னிவனத்துப் பூங்குயில்

கொத்தமங்கலம் சுப்பு

## முன்கதைச் சுருக்கம்

தஞ்சையை மகாராஷ்டிர மன்னர்கள் ஆண்டு வந்த காலம். மன்னர் துக்கோஜியின் புதல்வன் பாவாஜி பெருங் கோழை. அவனுக்கு வரும் ஆபத்தைப் பிரதாபசிம்மர் களைய முன் வருகிறார். பாவாஜியின் மனைவிக்குப் பிரதாபசிம்மரின் செல்வாக்கு அச்சத்தைத் தருகிறது. துக்கோஜி மன்னர் பிரதாபசிம்மருக்குக் காட்டும் மரியாதையோ அவள் உள்ளத்தில் மேலும் கிலியை வளர்க்கிறது.

மராட்டிய மன்னர்களுக்கு எதிராக முல்லை வேந்தன் என்பவன் சூழ்ச்சிகள் பல செய்கிறான். அவனைப் பிடிக்கும் முயற்சியில் பிரதாபசிம்மர் மாறுவேடம் தாங்கி ஈடுபடுகிறார்.

குயிலி ஒரு தனிப்பிறவி; குழந்தை மனம் படைத்தவள். எல்லோரும் இன்புற்றிருக்க வேண்டும் என்று ஆசைப்படுபவள். யாருக்கும் உதவுபவள். ஒருநாள் துக்கோஜி மன்னரின் பட்டணப் பிரவேசம் நடைபெறுகிறது. அதைக் காண வந்தவளின் கண்களில் குதிரை மீது ஆரோகணித்து வந்த பிரதாபசிம்மர் படுகிறார்; அவள் உள்ளத்திலும் இடம்பெறுகிறார்.

ஆனால் அவள் மாமன் வெள்ளைவாரணமோ, அவளுக்கு மாறான குணம் படைத்தவன். அவளைத் தன்னலத்துக்குப் பயன்படுத்திக் கொள்ள விரும்புகிறான். அவளைக் கொண்டு பணம் சட்டலாம் என்று கனவு காண்கிறான். ஆனால் குயிலி அவன் சொற்படி நடக்க விரும்பவில்லை.

இந்த நிலையில்தான் ஓவியர் ரங்கமன்னாரின் கண்களில் படுகிறாள் குயிலி. அவர் அவளைத் தம் வீட்டுக்கு அழைத்துச் சென்று நல்லாடைகள் அளிக்கிறார். குயிலியின் அழகு பன்மடங்கு பரிமளிக்கிறது.

ஆங்கிலேயர்களும் பிரெஞ்சுக்காரர்களும் தமிழ் நாட்டில் அடி எடுத்து வைத்த காலம் அது. மதுரையை நாயக பரம்பரையைச் சேர்ந்த மீனாட்சி தேவி ஆண்ட காலமும் அதுவே. அவள் ஸ்ரீரங்கநாதரைத் தரிசிக்கச் சென்ற பொழுது பங்காரு திருமலையின் மகன் விஜயகுமாரனுக்குப் பட்டம் கட்டச் சதி நடக்கிறது. இந்தச் சதியைத் தவிர்க்க ராணி மீனாட்சி தேவி மராட்டிய மன்னர்களின் உதவியை நாடுகிறாள்.

இந்தச் சதித் திட்டத்துக்குத் தனது இரு அமைச்சர்களுமே உடந்தையாயிருந்ததை அறிந்த மீனாட்சி தேவி அதிர்ச்சியால் மயக்கமுறுகிறாள். மூர்ச்சையைத் தெளிவிக்க அவள் வளர்ப்பு மகள் நீலவேணி, தன் பிடில்மாஸ்டர் பீட்டர் துரையின் உதவியை நாடுகிறாள். பலன், நீலவேணிக்கு மேனாட்டு மோகம் அதிகரித்து விடுகிறது!

ஓவியர் ரங்கமன்னார் குயிலியை முன் மாதிரியாக வைத்துச் சாவித்திரி படம் ஒன்று தயாரிக்கிறார். தம் சித்திரங்களை நாயக அரசியிடமும் காட்டிப் பரிசு பெறும் எண்ணத்தோடு திருச்சிக்குக் கொண்டு செல்லவும் நினைக்கிறார்.

### அத்தியாயம் 33

## குயிலிக்கு ஆபத்து!

சிந்தனை வேகமாக ஓடியது: 'இறைவன் படைத்த படைப்பைப் பள்ளிக்கூடமாக வைத்துக் கொண்டுதான் சித்திரக்காரர்களாகிய நாம் சித்திரத்தைத் தீட்டுகிறோம். பச்சைக் கிளி, தங்க அரளி, தாமரை இலை, தாமரைப் பூ, பொன் வண்டு, மயில் கழுத்து, விண், நிலம், செவ்வானம் ஆகியவற்றைப் பார்த்துத்தான் வண்ணங்களைக் கலக்கிறோம். ஆயினும் இறைவன் படைப்பைக் காட்டிலும் மனிதனின் படைப்பை மனிதர்கள் அதிகமாகப் பாராட்டுகிறார்கள். இதற்கென்ன காரணம்? நாம் ஒரே இனம் என்ற உணர்ச்சிதானே? நாம் எழுதிய சித்திரத்தில் நம்மையறியாமல் சிறு தவறுகளைச் செய்கிறோம். அதைக்கூட அவர்கள் நம் மீது வைத்த நம்பிக்கையால் ஆலோசித்து அதற்கும் ஓர் அரிய பொருளைக் கண்டு பிடித்து, ''ஆஹா! உங்கள் எழுத்து அற்புதம்!'' என்று அன்பு கனியப் பாராட்டுகிறார்கள். இந்த உலகமே அன்பில்தான் வேரூன்றி நிற்கிறது. அத்தனை கலைப் படைப்புகளிலும் அன்புதான் அடித்தளமாக இருக்கிறது. திருச்சி மகாராணியார் கலைஞர்களிடத்து மிக்க அன்புடையவரென்று கேள்விப்பட்டிருக்கிறோம். நம் ஓவியத்தை நிச்சயம் அவர்கள் பாராட்டுவார்கள். நாம் வரைந்தோம், அவர்கள் வரையாது பரிசளிப்பார்கள்' என்று எண்ணினார் ஓவியர் ரங்கமன்னார்.

'திருச்சிராப்பள்ளியில் நாம் ஒரு சித்திரசாலை வைத்துவிடலாம். அங்கே மாணிக்கம் சாணை தீட்டுபவர்கள் நிரம்ப இருக்கிறார்கள். சித்திரத்துக்கு வேண்டிய ரத்தினங்கள் அங்கு மலிவாகக் கிடைக்கும்' என்று நினைத்த போது அவரைச் சுற்றிலும் ஒரு மோகரா மழையே பெய்வதாகக் கற்பனை செய்து கொண்டார். உடனே ஒரு பயம் வந்தது. ''அவர்கள் பேட்டி நமக்குக் கிடைப்பது எளிதல்லவே. அங்கே எத்தனையோ ஓவியர்கள் இருப்பார்கள். எவனாவது ஒருவன் ஒன்று கிடக்க ஒன்றைச் சொல்லி வைப்

பான். 'ரங்கமன்னார் பிள்ளைகுட்டி இல்லாதவன். அவன் எழுதிய படத்தை வீட்டில் வைத்தால் குழந்தை பிறக்காது' என்பான். இன்னொருவன் 'இந்தப் படத்தின் கண்கள் கொள்ளிக் கண்கள். அது பூசை அறையில் இருக்கக் கூடாது' என்பான். உடனே ராணி, 'கண்ணை மாத்திரம் மாற்று' என்பாள். சே! கலையில்தான் எத்தனை பேர்கள் குறுக்கீடு? ஒவ்வொருவருக்காகவும் ஒவ்வொன்றை மாற்றுவது என்று வந்தால் கலை கொலையாகிவிடும்! எனக்கென்ன மதுரை இல்லாவிட்டால் மைசூர் இருக்கிறது. மைசூர் இல்லாவிட்டால், திருவனந்தபுரம் இருக்கிறது! என் தூரிகை தில்லி வரை செல்லும்'' என்று கர்வமும் கொண்டார் அவர்.

''சுவாமி! குயிலி வீட்டுக்குப் போக வேண்டும் என்கிறாள்.''

ரங்கமன்னார் தம் ஆசனத்தை விட்டு எழுந்தார். அவள் பெயரைக் கேட்டதும், அவர் கண்களில் நன்றி கனிந்தது. ''கொண்டு வா, அந்தத் தாம்பாளத்தை'' என்றார் அவர். ஒரு வெள்ளித் தாம்பாளத்தில் திருச்செறையில் நெய்த ஜரிகை வேலைப்பாடுகள் அமைந்த பட்டுப் புடவையையும் வைத்து அதன் மேல் இரண்டு ஜோடி தங்கக் காப்பு, தங்கக் கொலுசு, அழகிய வங்கி ஆகியவற்றை வைத்துக் குயிலிக்குச் சன்மானமாக அளித்தார். சித்திரம் எழுதுவதற்காக அவள் கட்டிக்கொண்டிருந்த சேலை முதலிய அணிகளை அவளுக்கே அளித்தார்.

''குயிலி! உன் கையில் பணத்தைக் கொடுத்தால் உன் வீட்டில் உள்ள மாமனும், மற்றவர்களும் அதைப் பறித்துக்கொண்டு விடுவார்கள் என்பதற்காகவே சன்மானத்தை ஆபரணங்களாக அளிக்கின்றேன்'' என்றார் அவர்.

ஏழைக் குயிலியாகப் பாட்டைத் தலையோடு சித்திரக்காரர் வீட்டுக்கு இழுத்துச் செல்லப்பட்ட குயிலி இப்போது பட்டுப் புடவைக்காரியாகப் பொன் அணிகளோடு பையன்கள் புடைசூழ, வெளியே வந்தாள். உடைதான் மாறியது. அவள் உள்ளம் மாறவில்லை.

''இனி இரைந்து பேசங்கடா!'' என்றான் சின்னத் தம்பியிடம்.

பையன்கள் சிரித்தார்கள். ''ஆம், அந்த வீட்டில் அடக்கித்தான் வைச்சிருந்தாங்க, குயிலி. அந்த அம்மா புருசன் கிட்டே இரகசியமாப் பேசறாங்க. அவரு நம்மகிட்டே இரகசியமாய்ப் பேசறாரு. சத்தம் கேட்டா சித்திரம் கெட்டுப் போகுமாம்'' என்றான் சின்னத்தம்பி.

அவள் நடக்க ஆரம்பித்தாள். மனம் ஓட ஆரம்பித்தது. தெருவில் போவோர் வருவோரெல்லாம் தன்னையே வியப்பாகப் பார்ப்பதுபோல் அவளுக்குத் தோன்றியது. தன் பச்சைப் புடவையும் பட்டு மேலாக்கும் தங்க வளையலும் அவளுக்கு உறுத்தின. இத்தனை ஏழைகளுக்கு நடுவில், இடுப்புத் துணிக்கும் வக்கற்ற மக்களுக்கிடையில் தான் மட்டும் தளுக்கு நடை நடப்பதாக எண்ணித் தலை குனிந்தாள்.

''இது என்னடி புது யோகம்? ஏன் இந்த உடை மோகம்? எனக்கு மட்டும் தானே இது உபயோகம்? என் அழகு அதிகமாகி விட்டதா? இல்லை, என் தலைதான் கனத்து விட்டதா? திரும்பினால் கழுத்துச் சங்கிலி உறுத்துகிறதே!

''கையிலே வளையல் மின்னுகிறது. கழுத்திலே கம்மல் ஜொலிக்கிறது. நம் கண்ணையே அழகு மறைக்கிறது. கர்வத்தால் தலை கனக்கிறது. பாதையில் நடப்பவர்கள் எல்லாம் நம்மைப் பார்த்துத் தவறி விழுகிறார்கள். பக்கத்தில் வரும் பையன்கள் தலையைக் குனிகிறார்கள். பேச மறுக்கிறார்கள். கூசிக் கூசி நடக்கிறார்கள். நமக்குத்தான் இதில் என்ன மிச்சம்? முன்போல் ஓடியாட முடியுமா? இஷ்டம்போல் துள்ளி நடக்க இயலுமா? சரி, அழ



காகவே இருக்கட்டும். இருந்தாலும் என் அழகைப் பார்க்க யார் இருக்கிறார்கள்? இந்த அழகோடு இளவரசருக்குமுன் நிற்கப் போகிறேனா? நின்றாலும் ஏறெடுத்துப் பார்ப்பாரா?

"'அடி மகளே, நீ நல்லா இருக்கே!' என்று திருஷ்டி சுத்திப் போட அம்மா இருக்கிறாளா? அந்தக் கிழவி ஒன்றுதான் ஆசையோடு பார்க்கும். 'அடி ஆத்தா' என்று கட்டிக் கொள்ளும். ஒரு முத்தமிடும். அந்தச் சந்தோஷத்துக்காகத்தான் இந்தச் சுமையைச் சுமக்கிறேன். இப்ப நேரே வீட்டுக்குப் போக வேண்டியது. கிழவிக்கு முன்னாலே ஒரு தரம் நிற்க வேண்டியது. உடனே இந்த வளையலைக் கழற்றி — பாவம் சின்னம்மா. அது அப்பாவி. அன்றைக்கு வளைக் கடையிலே வேறே அதை ஏமாத்திட்டேன். "இந்தா, சின்னம்மா உனக்குத் தங்க வளையல்" என்று வளையலைக் கழற்றி அதன் கையில் போட்டுவிட்டு உடனே கம்பி நீட்ட வேண்டியதுதான். அதுக்கு மேலே ஒரு நாழி அந்த வீட்டிலே தங்கக் கூடாது. அந்தப் பாவி மாமன் வந்தால் அவன் கையிலே சிக்கிக் கொள்வோம். முன்பு அறையில் தள்ளிப் பூட்டினான். இப்ப காலிலேயேபூட்டைப்போட்டுவிடுவான்.

"இவர் யாரு, என்னை விலை கூற? நான் என்ன எருமை மாடா? கன்றுக்



குட்டியா, இவங்க இஷ்டம் போலே விலைக்கு விற்க? பெண்பிள்ளை அழகைப் பேசுறது: அவளைப் பற்றிப் பாடுறது: ஆம்பிளை ஆசையைக் கிளப்புறது: அதில் துட்டு சேர்க்கிறது என்று சில பேர்வழிகள் இருக்கிறார்கள். மாமனும் மாமன். இவன் கண்ணில் நான் ஏன் அகப்படறேன்?

"ஆனால் அவனே வீட்டிலே இருந்தால்?" அவளுக்கு உடம்பு நடுங்கியது.

ஆனால் அப்போதும் குறும்பாக ஒரு சிந்தனை வரவே திடும் என்று சிரித்தாள். 'இந்த வளையலும், பட்டுப் புடவையும், பார்த்தவுடன் அந்த மாமன் என்ன நினைக்கும்? என்ன கேட்கும்?'

"பத்தினிப் பெண்ணே, பத்தினிப் பெண்ணே,
பட்டுச் சேலை ஏதடி?

பத்தினிப் பெண்ணே, முத்துச் சரமே
பளபள வளை ஏதடி?

**உத்தமப் பெண்ணே, உத்தமப் பெண்ணே,**
**உதட்டில் சாயம் ஏதடி?**
**ஊரைச் சுத்தற ரோஜாப்பூவே**
**உத்தமி வேஷம் ஏனடி?''** என்பான்.

'அது புத்தி அப்படித்தான் போகும்! அந்த வீட்டில் பிறந்ததால்தானே எனக்குக்கூட இந்தச் சந்தேகம் வரு கிறது' என்று சிரித்தாள்.

''என்ன குயிலி? தானே சிரிக்கிறே?'' என்றான் சின்னத்தம்பி.

''இப்ப அது நம்மகிட்டே எல்லாம் பேசாதுடா?'' என்றான் முந்திரிக் கொட்டை.

அந்தப் பையன்கள்கூட அவளிடம் இப்போது ஒரு மாதிரியாகத்தான் நடந்து கொண்டார்கள்.

சமூகத்தில் ஏற்றத்தாழ்வு என்பது நண்பர்களிடையேகூடப் படுத்தும் என் பதைக் குயிலி இதற்குமுன் உணர்ந்த தில்லை. ஏழையாகவே இருந்துவிட் டாள். 'இந்தத் திமிர்ப் பணமும் வேண் டாம். திசை மாறிப் போகவும் வேண் டாம்' என்று அவளுக்குத் தோன்றியது.

''அடே, சின்னத் தம்பி, நம்ப பட்டாளமெல்லாம் என் கூடவே வாங்க. எங்க வீட்டுக்குப் போயி கிழவியை ஒரு பார்வை பார்த்துவிட்டு உடனே கிளம்பி விடுகிறேன். அங்கே என் மாமன் இருந்தாலும் இருக்கும். ஏதாவது முரண்டினா உடனே புரட்டி எடுத்துடுங்க!'' என்றாள்.

இந்த ஒரு வார்த்தையில்தான் அவள் கூட்டத்துக்கு எத்தனை சந் தோஷம்! 'குயிலி நம் குயிலிதான்' என்ற குதூகலத்தில் 'பிச்சுப்பிடமாட் டோம் அவனை' என்று கூச்சலிட் டார்கள். ''நீ பயப்படாதே, குயிலி!'' என்று ஆறுதல் கூறினர் எல்லோரும். குயிலி சிரித்தாள். இவ்வாறு தாங்க முடி யாத சந்தோஷத்தில் அவர்கள் நடந்து செல்கையில் முன்னும் பின்னும் திரை போட்ட ஒரு குதிரை வண்டி வெகு வேகமாக அவர்கள் அருகில் வந்து நின்றது. அதிலிருந்து ஓர் ஆள் கீழே குதித்தான்.

''அம்மா! குயிலிங்கிறது நீங்க தானே? உங்க பாட்டி சின்ன மேளம் பொன்னம்மா சாகக் கிடக்குது. உங்களைக் கையோட கூட்டி வரச் சொன்னாங்க. சித்திரக்காரர் வீட்டிலே போயி தேடினோம். இப்பத்தான் நீங்க போகிறீர்கள் என்றார்கள். உடனே வைத்தியரையும் கூட்டிக்கிட்டு உங் களைத் தேடி வந்தோம். இத்தனை நேரம் என்ன ஆச்சோ தெரியலே! ஏறுங்க, வண்டியிலே!'' என்று படபடப்பாகக் கவலையுடன் கூறினான்.

குயிலியின் கண்கள் குளமாகிவிட் டன. கண்ணீரைக் கொட்டினாள். ''பாட்டி!'' என்று அலறினாள். பையன் களைப் பார்த்தாள். ''ஏறிக் கொள், குயிலி! நீ போ. நாங்க வண்டி கூடவே ஓடி வரோம்!'' என்றான் சின்னத்தம்பி. குயிலி வண்டியில் ஏறினாள். குதிரை சிட்டாகப் பறந்தது. ஆனால் குயிலி வீட்டுப் பாதையில் போகாமல் கும்ப கோணம் சாலையில் திரும்பியது. கூடவே ஓடி வந்த பையன்கள் திகைத்துப் போய் நின்றார்கள்.

வண்டியில் இருந்த குயிலி, 'ஐயோ' என்றாள். அவள் தலையில் பலமாக அடி விழுந்தது. திரை மூடப்பட்டது. அவள் மூக்கில் ஏதோ நெடி அடித்தது. குயிலி மூர்ச்சையானாள்.

**ம**ழையில் நனைந்த குயில் போல் அவள் வண்டிக்குள் கிடந்தாள். வண்டி போகும் வேகத்தில் காற்றில் மறுபடி யும் மனம் துளிர்த்தது. இனி ஏதாவது பேசி அவன் கையால் மறுபடியும் ஓர் அடி வாங்கினால் உள்ள ஸ்மரணையும் போய்விடும். ஆதலால் சும்மா கிடப் போம் என்று கிடந்தாள். உடல் கிடந் தாலும் உள்ளம் கிடக்குமா? சிந்தையை அடக்க அவ்வளவு பெரியவளா அவள்!

''இந்தப் பாவிகள் நம்மை எங்கே கொண்டு போகிறார்கள்? இவர்கள் யாராக இருக்கக் கூடும்?''

''இவன் நமது மாமனின் ஆளாக இருக்குமோ? பஞ்சவர்ணத்திடம் கொண்டு போகிறானோ? அப்படி இருந் தால் தஞ்சையை விட்டு ஏன் வெளியே கொண்டு போகிறான்? ஒருவேளை சாமி மலையில் தாலி கட்டக் கொண்டு போகி றானோ? இருக்காது! நம் மாமனுக்கு இவ்வளவு யோசனை தோன்றாது. அவன் கள்ளுக் கடையில் தாலி கட்டினாலும் கட்டுவான். கந்தன் கோயில் வரை அவன் மூளை போகாது.

''தவிர அவனுடைய ஆளாக இருந் தால் வண்டியில் கொள்ளு நாற்றமும் புல்லுக் கட்டாகவுமா இருக்கும்? கள்ளும் புலாலும் அல்லவா கலந்து வீசும்? இது அவர்கள் வண்டி அல்ல!

'ஒரு சமயம் அரண்மனைச் சிப்பாயாக இருக்குமோ?' என்று கருதியவுடன் அவள் மனம் கதிகலங்கியது. அரண் மனைக்குக் கொண்டு போகவில்லை. வண்டியிலே பேசவுமில்லை. சிப்பாயாக இருந்தால் செய்வானே அதிகாரம்? உருட்டுவான், மிரட்டுவான். 'உட் காரு, சரியாய், கையைக் கட்டு' என்று உத்தரவிடுவான். 'வீதியிலேயே ஓரத் திலே நட' என்பவன் வண்டிக்குள்ளே உட்கார விடுவானா?



## சிமெண்ட் உபயோகிப்போர்க்கு ஓர் நற்செய்தி!

தென் ஆற்காடு, திருச்சிராப்பள்ளி, தஞ்சாவூர்,
புதுச்சேரி, பாலக்காடு, கண்ணனூர்,
கோழிக்கோடு, தெற்கு கனரா ஜில்லாக்களில்
நீங்கள் வெகுவாக விரும்பும்

# சங்கர் பிராண்ட் சிமெண்ட்




இப்பொழுது தாராளமாகக் கிடைக்கிறது.

எமது சங்கர்நகர், சங்கரி தொழிற்சாலைகளில்
உற்பத்தி பெருக்கியதன் மூலம் உங்களது தேவையை
எங்களால் பூர்த்தி செய்யமுடியும்.

ஸ்டாகிஸ்டுகளாக விரும்புவோர் விண்ணப்பிக்கவும்



இந்தியா சிமெண்ட்ஸ் லிமிடெட்
175/1, மவுண்ட் ரோட், சென்னை-2.
தொழிற்சாலைகள்:
சங்கர்நகர் (திருநெல்வேலி ஜில்லா) மற்றும்
சங்கரி (சேலம் ஜில்லா)

இது சிப்பாயுமல்ல. வேறு யார்? யாராவது திருடனாக இருக்குமோ?

திருடன் இந்த நாட்டில் குதிரை வண்டியில் வர மாட்டானே! தீவட்டிகளோடு அல்லவா வருவான்? தவிர திருட்டுப் பயம் நம்ம ராசாங்கத்திலே கிடையாதே! குடிகளிடம் சொத்தைச் சேர விட்டால் திருடன் தொந்தரவு செய்வான் என்பதற்காகவே அத்தனையையும் வரி போட்டு அதிகாரிகள் வாங்கிடுவாங்களே! திருடனாக இருந்தால் இந்த நேரம் கைவளையைக் கழற்றி இருப்பானே? இவன் திருடன் இல்லே. பின்னே ஏன் தூக்கிக்கிட்டுப் போறான்? யாரோ ஆணாகப் பொறந்தவர் பொண்ணைக் கடத்திக் கொண்டு போகிறார்!

''அடி சிங்கம்னேன்! அவன் யாருடா அப்படித் துணிஞ்சவன்? நகமும், பல்லும் அழகுக்காகவா இருக்கு? நறுக்கி எறிஞ்சுடமாட்டேன்? இந்தப் பயல்களுக்குப் புத்தி சொல்லணும்னு எனக்கு நெடு நாட்களா ஆசை.

''பொட்டைக் குட்டியைக் கண்டால் பின்னாலேயே வர்றது. தெந்தினம் பாடறது. சீட்டி அடிக்கிறது. அக்கா தங்கச்சிகளோட பொறக்காத பயலுவ! இழுத்துச் செவுள சிதற ஒண்ணு குடுத்துட்டாத் தெரியும். அப்புறம் நெருங்க மாட்டான். கரண்டி பிடிக்கிற கை கன்னத்திலே கொடுத்தா எப்படி இருக்கும்? அடி, மானம் போய் உயிர் காவலா? எங்கே கொண்டு போறாங்க பார்ப்போம்?'' என்று ஒரே உறுதியுடன் பெண் புலி புதரில் பதுங்குவதுபோல், புல்லில் படுத்துக் கிடந்தாள் குயிலி.

''வண்டி மணலில் போகிறது. சக்கரத்திலிருந்து சலசல வென்று சத்தம் கேட்கிறது. இது வடவாறு'' என்று நிச்சயம் செய்து கொண்டாள் குயிலி. சிறிது சென்றவுடன் குதிரை கனைக்கிறது. அட பாவி! ஏன் இப்படி அடிக்கிறான்? குதிரை தண்ணீரில் போகிறது. வண்டி மிதக்கிறது. இது வண்ணாறாக இருக்குமோ? இங்கே ஏது நான்கைந்து ஆறுகள்? குளுகுளுவென்று காற்றடிக்குதே? கரும்பு மணக்குதே! கண்டாங்கோரையிலே சம்பாதானே மணக்கும்? இது கண்டியூர்ப் பாதைதான். தூரத்தில் வயலுக்கு நடுவே நாதசுரம் கேட்குது. இஞ்சிவெட்டி இருக்காங்களோ? மூக்கில் மணக்குதே! நெஞ்சிலே உறைக்குதே! அதோ ரஸ்தாளிப் பழம் வாடைவருது. வாழைக் குலையிலே அணில் விளையாடி இருக்குது. திருவையாத்துப் பாதை தான் இது!'' என்று அவள் இரு



''நீ எந்த லேடீஸ் கிளப்பிலே மெம்பராகச் சேர்ந்தாலும் ஒரு வாரத்துக்கெல்லாம் நீயே பிரஸிடெண்டாகி விடுவது வழக்கம் என்கிறாளே! அதெப்படி?''

''என்னைத் தவிர மற்றவர்கள் சங்கத்திலிருந்து தானாகவே விலகும்படி செய்கிற தந்திரம் எனக்குத் தெரியும்!''

கண்களையும் மூடிக் கிடந்தாலும் இதயத்தால் பாதையை அறிந்தாள்.

கோயில் மணிகள் நின்று விட்டன. அடுப்புப் புகை நாற்றம் வரவில்லை. நாய்கள் ஊளையிடுகின்றன. நரியும் கத்துகிறது. தவளைகளின் குரல் 'ததிங்கிணத்தோம்' வைக்கிறது. அர்த்த சாமம் ஆகிவிட்டதுபோல் இருக்கிறது. ஊர் அடங்கிவிட்டது. முதல் கோழி கூவவில்லை. ஆதலால் இது நடுநிசி.

''ஐயோ! எங்கு கொண்டு போகிறார்கள்? நமது கூட்டம் நம்மைத் தொடர்ந்து வருமா? பாவம், இந்தக் குதிரையின் ஓட்டத்தை அவர்களால் எப்படிப் பிடிக்க முடியும்? நான் அகப்பட்டது போதாதா? அவர்கள் வேறு அகப்பட்டுக்கிட்டா பாவம்! அந்தப் பையன்களைக் கொன்று விடுவார்களே! என்னைக் கொல்ல மாட்டார்கள். என்னிடம் ஏதோ எதிர்பார்க்கிறார்கள். அந்தப் பையன்களால் யாருக்கு என்ன லாபம்? இது என்ன சோதனை? இந்தப் பட்டுப் புடவையும் பளபள நகையும் இல்லாவிட்டால் நம்மை அவன் தூக்குவானா? நேற்றுவரையிலே தெருவில்ல நின்றிருந்தேன். சாலை ஓரத்தில் படுத்துக் கிடந்தேன். என்னைப் பேய்கூட....''

குயிலி நடுங்கினாள். சமாதிக்கோயில் நினைவு வந்தது. அந்த ஆளின் ஏவலாக இருக்குமோ?

வண்டி பள்ளத்தில் இறங்கி 'தக்! தக்!' என்று நின்றது. குயிலியின் உடம்பில் குளிர்ந்த காற்று வீசியது. குளிரில் வெட வெடவென்று நடுங்கினாள். திடீ

றென்று இவ்வளவு குளிர் ஏது? என்று அவள் எண்ணும்போது, 'சோ' என்று ஓசை முழக்கிக் கொண்டே காவிரி ஓடுகிறுன் என்று அறிந்தாள். வண்டி ஓடத்தின் மீது ஏறியது. இரண்டு படகுகளுக்கு நடுவே மூங்கில் கழிகளைப் பரப்பிய அழகான தெப்பம் ஒன்றின் மீது குதிரை பயந்து நடப்பது தெரிந்தது. 'பாவிகள்! முதலிலேயே எல்லாவற்றுக்கும் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். வலுவான இடத்தில்தான் சிக்கிக் கொண்டிருக்கிறோம்' என்ற அச்சம் வந்தது.

திருவையாற்றில் காவேரிக் கரையில் ஒரு மாபெரும் மாளிகைக்கருகில் ஓடம் நின்றது. அந்தக் கட்டடத்தில் காவிரி நீர் வரை நூறு படிக்கட்டுகள் அழகாகக் கட்டப்பட்டிருந்தன.

''ஏய்! எழுந்திரு!'' என்றுன் ஒருவன். குயிலி மயங்கியவள் போல் கிடந்தாள். உடனே இரு பணிப் பெண்கள் குயிலியைக் கையால் தாங்கி மாடிக்கு அழைத்துக் கொண்டு போனார்கள். அவள் தலை தொங்கியது. உடல் துவண்டது. அவளை மாடியில் ஒரு படுக்கையில் கிடத்திஞர்கள். பஞ்சு மெத்தையில் போட்டவுடன் அவளுக்குச் சிரிப்பு வந்தது. ஆயினும் விழிக்காமல் கிடந்தாள் அவள்.

வண்டி வந்து கொண்டிருக்கையில் குயிலி தன் தலையில் முடிந்த பூவை ஒவ்வொன்முகப் பிய்த்துக் குதிரை வண்டியின் உட்புறச் சட்டத்தின் இடைவெளிகளின் வழியே கீழே போட்டுக் கொண்டு வந்தாள்.

'அது கீழே விழும். நமது பையன்கள் நம்மைத் தேடிக் கண்டுபிடித்து விடுவார்கள். அடையாளத்தை வைத்தே வண்டியைத் தொடர்ந்து வந்து விடுவார்கள்'' என்று அவள் எண்ணினாள். ஆனால் அவள் எண்ணியது போல நடக்கவில்லை. பூவில் பெரும் பகுதி வண்டிக்குக் கீழே தொங்கிய புல் வைக்கும் கோணியில் விழுந்து கொண்டேயிருந்தது.

**வ**ண்டிக்குப் பின்னே ஓடிவந்த பையன்கள் வண்டி போன திசை தெரியாமல் விழித்தார்கள். அப்போது 'அடே, அதோ பூவு!' என்றுன் சின்னத்தம்பி.

உடனே, ''அதைத் தொடாதே!'' என்று அலறினன் முந்திரிக் கொட்டை. இதைச் சொல்லும்பொழுதே அவன் உடல் நடுங்கியது.....

''யாரேனும் கட்டுக்கழுத்தி பரலோகம் போயிருப்பாள். பூவும் பொரியும் அவள் போகும் வழியில் விழுந்திருக்கும்! பாவம்!'' என்றுன் அவன்.

சின்னத்தம்பி தைரியசாலிதான்.... ஆனால் ஒருவன் இவ்வளவு பயமுறுத்தும் போது இருட்டில் அவன் தைரியம் வெளிவரவில்லை. மேலும் நடந்தார்கள்.

மறுபடியும் ஒரு பூ இருளில் வெள்ளையாகத் தெரிந்தது. குனிந்து எடுத்தே விட்டான் அவன். முந்திரிக் கொட்டையோ, ''காசு கிடைக்கும் தேடுடா!'' என்றுன்.

சின்னத் தம்பி எடுத்த பூவைப் பார்த்தான். அவன் வாங்கி வந்த சாதி அரும்புதான் அது. ''அடே, குயிலியை இந்தப் பக்கமாகத்தான் கொண்டு போயிருக்காங்க' என்று விருட்டென்று நடந்தான். பையன்கள் கூடவே தொடர்ந்தார்கள்.

சிறிது தூரம் சென்றவுடன் ஒரு பெருங்காற்று அடித்தது. சாலையில் கிடந்த சருகுகள் பறந்ததோடு இவர்களின் அடையாளமும் பறந்துவிட்டது. சிறுவர்கள் திகைத்தார்கள், பசி வேறு குடலை வறுத்தது. மற்ற நாட்களாக இருந்தால் பசியின் ஜம்பம் இவர்களிடம் பலிக்காது. ஆனால் ஒரு வாரமாக வேளைக்குச் சோறு போட்டு வயிற்றைப் பழக்கப்படுத்தி விட்டதால் இப்போது, 'கொண்டா, கொண்டா' என்றது வயிறு. ஓட்டமும் நடையும் கால்களை வலி எடுக்கச் செய்துவிட்டன.

சிறிது தூரம் நடப்பதற்குள், சின்னத்தம்பியின் காலில் ஏதோ வழவழவென்று தட்டுப்படவே ''ஐயோ, பாம்பு!'' என்று அலறிக் கொண்டு ஒரே துள்ளாய்த் துள்ளினான். முந்திரிக் கொட்டையும் மற்றவர்களும் ஓட்டமாய் ஓடினார்கள். அந்த இடத்தில் கிடந்த வாழை மட்டை இவர்களைப் பார்த்துச் சிரித்தது. சின்னத்தம்பி அழுதான். எல்லோரும் அதைப் பார்த்து அழுதார்கள். ஆனால் ஒருவராவது 'அம்மா' என்று அழவில்லை. எல்லோரும் 'குயிலி' என்றே அழுதார்கள்.

''அட, ஏண்டா அழறீங்க? அழுதா குயிலி அகப்படுமா? அனாதைப் பயலுக நாம். ஆத்தா அப்பன் யாரோ? அவங்க நம்பளைக் கவனிக்கல்ல. நமக்கு ஆத்தாவும் அப்பனுமா அதுதான் இருந்திச்சு. இப்ப அதையும் யாரோ கொண்டு போயிட்டான்.''

''நம் நிலைமை ஒண்ணும் குறைஞ்சு போகலே. அன்னிக்கும் அனாதைதான். இன்னிக்கும் அந்த நிலைக்கு வந்துட்டோம். இவ்வளவுதானே! வாங்கடா எல்லோரும் ஆத்திலே விழுந்திடுவோம்'' என்றுன் முந்திரிக் கொட்டை.

''நீ குதி. நான் தூக்கி விட்டுடறேன்'' என்றுன் சின்னத்தம்பி. (தொடரும்)



# டன்லபில்லோ வசதி மிக்கது

## அதன் விலை நீங்கள் நினைப்பதைவிடக் குறைவு!

### லட்சக்கணக்கான மக்கள் அதைப் பயன்படுத்துவதில் வியப்பொன்றுமில்லை

- டன்லபில்லோ இதர குஷன்களை விட நீடித்திருக்கிறது. அதன் அமைப்பும், இளக்கமும் மாறுவதில்லை.
- டன்லபில்லோ தனிநபர்களின் உபயோகத்திற்கேற்ப விதவிதமான சைஸ்களில் கிடைக்கிறது.
- டன்லபில்லோ ஆண்டு முழுவதும் குளிர்ச்சியாகவும் சௌகரியமாகவும் இருக்கிறது. உபயோகிக்கும்போது உள்ளூர ஊடுருவிச் செல்லும் லட்சக்கணக்கான 'செல்'கள் மூலம் அது சுவாசிக்கிறது.
- டன்லபில்லோ துண்டித்து எந்த சைஸிலும், அமைப்பிலும் உருவாக்கிக் கொள்ள முடியும்.
- டன்லபில்லோ சுகாதாரமானது. கிருமிகள் அண்டாதது. ஊறு விளைவிக்கும் பூச்சிப் பொட்டுக்களை வெளியேற்றி விடுகிறது.




ஒரிஜினல் லேடக்ஸ் ஃபோம்

# டன்லபில்லோ

குஷன்கள் • தலையணைகள் • மெத்தைகள்

டன்லப் இந்தியா லிமிடெட்

103A/5/TAM

குழந்தையை அணைத்தவாறு ஜன்னல் வழியே பார்த்தபடி உட்கார்ந்திருந்தாள் விஜயா. மாலைப் பொன் விழுந்து கொண்டிருந்தது. வானத்தில் தங்க இலைகளைத் தூவினாற்போலத் தென்னையின் பின்னிருந்து வெளிப்பட்டு, பறவைகளின் கூட்டம் உதிர்ந்து மறைந்தது.

கீழிருந்து மூச்சுக் காற்றுப் போல் மலர்களின் மணம் மலைப் பாதையைக் கடந்து வந்தது. கொல்லைப்புறம் இரகசிய ஒலியாய்ப் பேசும் அருவியின் சத்தம் எழுந்தது. கொஞ்ச நேரத்தில் பனி புகை வடிவமாய்த் தொங்கி விடும். பசுமையான இலைகளின் அடர்த்தியில் இரவின் கருநிழல் படிய ஆரம்பித்துவிடும்.

ரவி திரும்பி வர மணி ஏழு ஆகும். கொண்டை ஊசி மூலைகளில் முனகியபடி, கொஞ்சம் கொஞ்சமாய் மேலெழுந்து வரும் 'ஜீப்'பின் சத்தம் கேட்கும். அப்புறம் வாசற் கேட்டைத் திறக்கும் ஒலி எழும். நாயின் குரைப்பைத் தொடர்ந்து, ரவி செல்லமாய் அதை அதட்டும் குரல் தொடரும். அவள் எழுந்து வாசல் விளக்கைப் போடுவாள்.

குழந்தை மணி மடியிலிருந்து பிய்த்துக் கொண்டு நழுவினான். அவளுக்கு அசைய மனமில்லை. முழங்கால்களைக் கட்டியபடி உட்கார்ந்திருந்தாள்; பல வர்ணங்கள் தோய்ந்த படுதாப்போல, மஞ்சளும் சிவப்பும் கறுப்புமாய், அந்தி மாலை இரவின் மசியில் குழையும் ஜாலத்தைப் பார்த்தபடி. நலுங்கும் திரையின் மடிகள் போல் காற்றில் அந்தி மிளிரும் நயம்.

அந்த இயற்கை அழகில்தான் அவளுக்கு என்ன லயிப்பு? வெள்ளி முளைக்கும் வேளையில் காலைக் கதிர் பட்டுப் பட்டாய் விரிந்த புல் வெளியில் உதிரும் நேரத்தில், மாலையில் கருமலையின் முடிகள் இருளில் பொட்டலமாய் மடியும் தருணத்தில், அவள் அப்படித்தான் தன்னை மறந்து நின்று விடுவாள்.

கீழே வளைந்து வளைந்து இறங்கும் மலைச் சாலையைப் போல, மனத்திலும் படிப்படியாகப் பின்னோக்கித் தெரிந்த நினைவுகள்.

அவள் முதல் முதலில் அங்கே குடித்தனம் நடத்த வந்த சமயம் அது. வண்டியிலிருந்து சாமான்கள் இன்னும் இறங்கி வந்தபாடில்லை. காலடி எடுத்து மண்ணில் பதியக் குதித்து நின்றவளின் கைவிரல்களை ரவி ஆசையாய்ப் பின்னிக் கொண்டான்.

''எப்படி இருக்கிறது நம் அரண்மனை?''

அவளால் கொஞ்ச நேரம் பதில் சொல்லவும்கூட முடியவில்லை. படிப்படியாக, மேடேறிய குன்றில், மரப் பலகைகளும் கண்ணாடியும் சேர்த்து அமைத்த, சித்திரம் போன்ற வீடு. கூரைக்குப் பின் சாமரமாய் அலையும் ஊசி முனை மரங்கள். வாசல் தெரியாமல் படர்ந்து நின்ற கொடிகள். கொள்ளையாகச் சொரிந்து கிடந்த வெண்ணிறப் பூக்கள்.

அவன் விரல்கள் அவள் முழங்கையைத் தொட்டன. அவள் பற்கள் பளீரென்றன. மகிழ்ச்சி குழம்பும் முகம். அவளுக்கு மிகவும் பிடித்த இடம்தான்.

சாமான்களை இருவருமாகப் பார்த்துப் பார்த்து, இடம் தேடி அடுக்கினார்கள்; குழந்தைகள் விளையாடுவதைப் போல. படுத்துக் கொள்ளும் அறை, ஜன்னல் வழியே வெளிப்புறக் காட்சி தெரியும்படி கட்டில், கொல்லைப் புறம் குதித்து வரும் அருவி நீரிலிருந்து எட்டினாற்போல் சமையலறை ஜன்னல், ஒவ்வொன்றையும் அவள் விதம் விதமாக அடுக்கி அழகு பார்த்தாள் ஒரு வாரத்துக்கு. நாளுக்கு ஓர் அமைப்பாகத்தான் இருந்தது. வேலையிலிருந்து திரும்பும்போது அவனுக்கு வியப்புக் காத்திருக்கும்.

புதிதாக மணமாகி அங்கே வந்த அநுபவம் மட்டும் அல்ல அது. அந்தச் சூழலே அவளுக்குப் புதுமையாக இருந்தது. சென்னையில் அவள் மாமாவின் வீட்டில், குழந்தைகளுக்கும் பெரியவர்களுக்கும் நடுவே கொம்மாளம் அடித்து வளர்ந்த பழக்கம் அவளுக்கு. தினமும் யாரேனும் விருந்தாளிகள் வந்தவண்ணமாக இருப்பார்கள். வசதியான 'போர்ஷனா'க இருந்தாலும், அது கொள்ளாமல் நிரம்பி வழியும்.

# உணர்ச்சிகள் மாறும்

எஸ். லட்சுமி சுப்பிரமணியம்





தெருவில் இரவு பத்து மணி வரை அடங்காத சத்தம் இருக்கும். பஸ் இரும்பும் முனே அது. சைக்கிள் ரிக்ஷாவின் மணி தலையில் அடிப்பது போலக் கேட்டுக் கொண்டே இருக்கும். இரவு இரண்டு மணிக்கும் ஸினிமாவின் கடைசிக் காட்சி முடிந்து திரும்புவோர் பேச்சொலி காதில் விழும். பகல் நேரம் முழுவதும் கறிகாய் வண்டியும், பழக் கூடைக் காரனும், பிச்சை கேட்டு வருபவர்களுமாக, பதில் சொல்லி வாய் அலுத்துப் போகும்.

''அங்கே இருந்துவிட்டு இங்கே உனக்கு 'வெறி'ச் சென்று இல்லே ?'' அவன் கேள்விக்குப் பதிலாய் அவள் கண்கள் புன்னகை புரிந்



தன. ஆசையாய் தழுதழுக்கும் குரல்தான்! அந்தத் தனிமை அவளாகத் தேடிக் கொண்டது. அவர்களுக்குள்ளே, பிறர் குறுக்கிடு இன்றிப் பகிர்ந்து கொள்ள நிதானமாய் விரிந்து கிடக்கும் பொழுதுகள், சந்தர்ப்பங்கள், இனிய நினைவுகள் —

இங்கே அந்தச் சந்தடி இல்லை. நேரத்தின் நெருக்கடியும் இல்லை. அவளுக்குத் தெரியும்; காலை நேரத்தில் பள்ளிக்கூடக் குழந்தைகளுக்கும், வேலைக்குப் போகும் மாமாவுக்கும், அவளுடைய கல்லூரி அவசரத்துக்கும், ஒருங்கே ஈடு கொடுக்க அம்மாவும் மாமியும் ஓடி ஓடிக் காரியங்கள் செய்யும் மும்முரம். அதற்கு நேர்மாறாய் இங்கே தெரிந்த நிதானம்? அதன் அமைதியில் தெரிந்த அழகு?

'ஜீப்' வர அரை மணி இருக்கும் போது ரவி ஈரத் தலைமயிரைக் கோதியபடி மேஜை முன்வந்து உட்காருவான். ரொட்டி, வெண்ணெய், பழம், சூடாக ஆவி பறக்கும் சிற்றுண்டி. இவைகளோடு அவளும் வெளியே எதிரே வந்து உட்கார்ந்து கொள்வாள். ஒருவருக்கொருவர் பரிமாறியபடி, பேச்சையும் பரிமாறிக் கொண்டு சாப்பிடுவார்கள். தனியாக உட்காருவது அவனுக்குக் கொஞ்சமும் பிடிக்காது.

அவன் போன பிறகு சில நாட்களில் வீட்டின் பின்புறம் பாறைகளின் நடுவே பாய்ந்து வரும் ஆற்றில், அவள் குளிக்கப் போவதுண்டு. கல்லூரியில் நீச்சல் குளத்தில் பழகிய ஞாபகமாய், நேரம் போவது தெரியாமல் நீந்துவாள்; மல்லாந்து படுத்து, வாயைத் திறந்து கட்டையாய் மிதந்தபடி. உடல் சில்லென்று குளிரும் வரையில் அப்படி ஆசை தீர அலைவதில் ஒரு மகிழ்ச்சி வெறி.

இரவு வேளையில் கண்ணாடி ஜன்னலில் இருள் தேங்கும். கழுத்து வரை இழுத்த போர்வையுடன் படுத்துக் கொள்வாள். நள்ளிரவுக்கு மேல், விடிவிளக்கின் மௌன வெளிச்சமாய், நிலவொளி கண்ணாடி வழியே உள்ளே படியும். போர்வையை உதறிவிட்டு, முழங்காலை மடித்துக் கொண்டு உட்கார்ந்து விடுவாள். தூரத்தில் மலையின் கரிய வடிவக் கோடுகளின் நடுவில் ஊர்ந்து செல்லும் நெருப்பின் சிவப்பு.

கல்லூரியில் பாடங்களுக்கு நடுவே சித்திரம் வரையவும் பழகி யிருந்தாள் அவள். ஓவியக் கண் காட்சியில் அவள் சித்திரங்கள் இரண்டொன்று இடம் பெற்றதாகக்கூட ஞாபகம். படிப்பை முடித்து மணமாகும் வரை இருந்த ஆறு மாதப் பொழுதில், அந்தத் தூரிகையையும் வண்ணக் கலவைகளையும் தொடுவதற்குக்கூட வாய்ப்பு இல்லை.

இங்கே நிறையப் பொழுது இருந்தது. ஓவியம் வரைய வண்ணமும் அழகும் சூழ்ந்த காட்சிகள் கொட்டினாற்போல் இறைந்து கிடந்தன. பிற்பகல் வேளைகளில் சில நாட்கள் ஜன்னல் ஓரமாக உட்கார்ந்து எழுதுவாள். கண் முன்னே தெரியும் தோற்றங்கள், கற்பனையில் விரிந்த காட்சிகள், வெளியில் ரவியுடன் உலாவப் போன போது பார்த்தவை, எல்லாவற்றையுமே.

''என்னையும் ஒரு சித்திரம் எழுதேன், விஜி'' என்பான் ரவி, அங்கே உட்கார்ந்து கொண்டு.

சட்டென்று ஒரு நாணம் அந்த நேரத்தில் சூழ, தலையை அசைத்துவிட்டு அவள் எழுந்து போய் விடுவாள்.

அன்று அவள் எழுதி வைத்திருந்த சித்திரத்தைப் பார்த்தபடி ரவி ஒரு லயிப்பில் உட்கார்ந்திருந்தான். கன்னங்கள் உப்பி, இதழ்கள் பிரிய, விரலை வாயில் இட்டுக் கொண்ட குழந்தை. மினுமினுக்கும், திராட்சைக் கண்கள். நெற்றியில் சரிந்து விழுந்த அடைமயிர். எங்கோ ஒரு குழந்தை உணவு விளம்பரத்தில் பார்த்த ஞாபகம். அப்போது விஜியின் கையில் சித்திரமாய் அது உருப்பெற்ற விதம்? உருவாகிக் கொண்டிருந்த ஓர் உயிரின் மன நிழலா?

''ஈஸ் இட்?''

அவன் கேள்விக்கு அவள் தலை நிமிர்ந்து பதில் சொல்லவில்லை. அவன் மடியில் முகம் அழுந்தப் புதைத்துக் கொண்டாள். கூந்தலின் வருடலில் பின்முதுகின் பரிவுத் துடிப்பில், தாளமிட்ட விரல்கள், இடையைச் சுற்றிப் பின்னிக் கொண்டன. அந்த அணைப்பில் அவன் மனத்தில் அத்தனை நாளாய் அடக்கி இருந்த ஆசை தெரிந்தது. அவளைத் தன் பக்கமாய் இழுத்து முகத்தைத் திருப்பினான். மடியில் கிடக்கும் குழந்தையென, அவள் முகத்தின் எதிரே கையை விளையாட்டுக் காண்பித்து விரலைச் சொடுக்கினான்.

''நம்ம பையனுக்கு என்ன பெயர் வைப்போம்? சொல்லு.''

மகிழ்ச்சியில், வரப் போகும் பிரிவின் வேதனையில், இரட்டிப்பாய், கன்னங்களில் தாரை ஓடிற்று. விக்கி விக்கி வந்த சிரிப்பு. பேச்சில் வடிக்க முடியாத உணர்ச்சிகள்.

ரவியின் நம்பிக்கை பொய்க்கவில்லை. பையன்தான் பிறந்தான்; மணி என்ற பெயரையும் வைத்துக் கொண்டு. அதுவரை தனித்திருந்த போது? மைல்களுக்கப்பால் கடற்கரையில் உட்கார்ந்து இந்த மலைக்காட்டை நினைத்துக் கொண்டிருந்த போது? நிறைமேட்டாய், வயிற்றுள் உயிர்த் துடிப்பு. நெஞ்சில் நிறைந்த சொல்ல முடியாத ஏக்கம். பிரிவுத் துயர் எழுப்பிய சகிக்கொணாத வேதனை.

கடிதங்கள்: கடிதங்களில் வந்த கதைகள்: எத்தனையோ ஆறுதல்கள். கடைசி மாதம்: கடைசிச் சில மணி நேரங்கள். வலியின் முகடேறி ஓய்ந்த நேரம்: குழந்தையின் பெருங்குரல் பாய்ச்சிய அழுகை.

அவள் திரும்பி வந்துவிட்டாள். அவர்கள் வாழ்க்கையில்புதிதாக ஒருபடியில் காலெடுத்து வைத்த உணர்ச்சி ஏற்பட்டது. தோட்டத்தில் திறந்தவெளித் தொட்டில். ஊஞ்சலாய் அது ஆடும்போது, குழந்தையின் விரல்கள் காற்றில் பிரிந்து அலையும். மரத்தில் உட்காரும் பறவைகளின் அசைவில் பூக்கள் உதிரும். குழந்தையின் வாய் திறந்து பூச்சிரிப்பு கொட்டும். பூக்களுக்கும் பழங்களுக்கும் குறைவில்லை. குழம்பாய் இறுகிய பாலின் செழுமைக்கும் குறைவில்லை.

கையில் பிடிபடாத வளர்த்தி. கொழுகொழுவென விரல்களில் அழுந்தும் பால் சதை. அவர்களிடையே கூடத்தில் கம்பளி

மேல் படுக்க வைத்து விடுவாள். அந்தப் பார்வையை வாசற்படியிலிருந்து வேலை செய்யும் இடம் வரையில் தாங்கிக் கொண்டு செல்லுவான் ரவி. சமையலறையிலிருந்து எட்டிப் பார்த்தால் அந்தச் சிரிப்பு அவளுக்காகக் காத்திருக்கும். நடுக்கூடத்துக்கு இப்போது ஓர் அழகு வந்துவிட்டது. ஏற்றி வைத்த விளக்கு மாதிரி, குழந்தை தன்னைச் சுற்றிலும் தண்ணொளியை வீசிக் கொண்டே இருப்பான்.

அவள் தங்கை, குழந்தையின் கன்னத்தைக் கிள்ளியபடி அவளையும் சீண்டுவாள். "அவருடைய கன்னம், உன்னுடைய கண்கள், இந்தப் பயலுக்கு!" பெருமையும் நாணமும் அவள் முகத்தில் ஒருங்கே ஒளிவிடும்.

குழந்தை கொஞ்சம் வளருமுன், அவளுடைய தாயார் துணைக்கு வந்து விட்டாள். குழந்தை வளர்ப்பில் சிறு சிக்கல்கள் அவளுக்கு எடுக்கக் கூடியனவாக இல்லை. கவலைகளும் பெரிதாகித் தெரிந்தன. அவைகளை லாகவமாய் நூலெடுக்கும் அநுபவம் அவளுக்கு இல்லை.

அம்மாவிடம் குழந்தையை விட்டு விட்டு, அவர்கள் வெளியே கிளம்பி விடுவார்கள். மலைச் சரிவின் கற்படிகளில் இறங்கி நடப்பார்கள்.

சில சமயம் திரும்பும்போது, இருள் கவிந்து விடும். முழு நிலாக் கிளம்பும் தோற்றத்தைப் பார்க்கவே சில நாட்கள் மலைப் பாதையின் கைப்பிடிச் சுவர்மேல் உட்கார்ந்திருப்பார்கள். அவள் கன்னத்தைப் பீங்கான் போன்ற இன்னொரு கன்னம் அழுத்தும் உணர்வில், அவன் அவள் கழுத்தை மாலையாகப் பின்னிக்கொள்வான். பஞ்சினும் மிருதுவான மார்பு மேல் அழுத்தும். அதே போன்ற ஓர் ஊசி முனை வளைவில் அவன் நிற்க, அவள் பின்புறமாய் நின்று, கூந்தலில் வளைத்து வைத்த மல்லிகைச் சரம்? இப்போது அந்த நினைவில் அதன் மணத்தில் கிளுகிளுப்பு இல்லை. மயக்கம் தரும் மணம் இல்லை. அணைக்கட்டு எழுந்த பிறகு, அமைதியாக அடங்கிவிட்ட ஆற்று நீரைப் போல் அவர்கள் வாழ்க்கையிலும் ஒரு நிதானம் வந்து விட்டது.

ரவி வேலையிலிருந்து திரும்பியாயிற்று.

அவன் குளித்துவிட்டுத்தான் சாப்பிடுவான். குளியலறைக் கதவு மூடியானதும் அவள் மேஜை மேல் தட்டை எடுத்து வைத்தாள். சுற்றிலும் மற்றவைகளைச் சிறு தட்டுகளில் பரிமாறினாள். மணி மேஜை மேல் ஏறி உட்கார்ந்து கொண்டான். அவனுக்கு மேஜை எட்டாது; அதனால் மேஜையே அவனுக்கு நாற்காலியும் கூட.

குழந்தை அவனுடைய தட்டின் சோற்றை அளைந்து கொண்டிருந்தான். விஜயா சற்றுத் தள்ளி நாற்காலியில் உட்கார்ந்து கொண்டாள். "ஊரிலிருந்து அம்மாவின் கடிதம் வந்தது."

"என்ன எழுதியிருக்கிறாள்?" அவன் யோசனையாக நிமிர்ந்தான்.

"அங்கே வைத்தியம் செய்து கொண்ட பிறகு கொஞ்சம் தேவலையாம். ஆனால் இன்னும் அசதியும் பலவீனமும் தீரவில்லை. ஒரு மாதமாவது 'ரெஸ்ட்' வேண்டுமென்று டாக்டர் சொன்னாராம்."




"எதற்கு எடுத்தாலும் தத்துவம் பேச இதிர்களே, நீங்கள் என்ன சாக்ரடீஸ் என்ற நினைப்போ?"

"உன் காப்பியைக் குடிக்கும்போதெல்லாம் அப்படித்தான் நினைத்துக் கொள்ள வேண்டியிருக்கு!"

---

இருவரும் பார்த்துக் கொண்டார்கள். இரு மனங்களிலும் ஒரே லயமாக ஓடும் எண்ணங்கள். நடந்த நிகழ்ச்சிகள் மீண்டும் மனத்தில் படம் விரிக்கும் உணர்ச்சி.

"ஆமாம். அன்று எவ்வளவு பயமாகப் போய்விட்டது! வைத்திய வசதியும் சரியாக இல்லை. கீழே மலை இறங்கி டவுனுக்குப் போகவும் வழியில்லை. இரவு நேரம் தாண்ட வேண்டுமே என்று கவலையாகப் போய் விட்டது..."

"அம்மாவை ஊரில் கொண்டு சேர்த்த பிறகுதான் எனக்குச் சற்று நிம்மதி ஏற்பட்டது. அவர்களைப் போல வயதானவர்கள் இருப்பதற்கு ஏற்ற இடம் இல்லை இது."

"ப்ஸ!"

அவன் கொஞ்சம் குறையோடு சொல்லிக் கொண்டான் அதை. அவன் மனத்திலும் அவளுடைய உணர்ச்சிகளின் குடை நிழல் தான் விரிந்ததா?

சாப்பிட்டானதும் வெற்றிலைத் தட்டோடு கட்டிலில் வந்து உட்கார்ந்து கொண்டாள். தலையணையில் சாய்ந்திருந்த ரவி, சுவாதீனமாய்க் கால்களை அவள் மடிமேல் போட்டுக் கொண்டான். அந்தச் செய்கையில் மனம் நெகிழ்ந்தபோது சொல்ல வந்ததைக் கூற ஒரு தயக்கம் ஏற்பட்டது அவளுக்கு.

"என்ன விஜி?"

"அம்மா எழுதியிருக்கிறாள், யோசித்துப் பார்க்கச் சொல்லி. மணியை அடுத்த வருஷம் பள்ளிக்கூடத்தில் சேர்த்து விடவேண்டும். குழந்தை அங்கே அவர்களுடன் இருப்பதுதான் நல்லது. ஆனால் பிரிந்திருக்க முடியுமா நம்மால்? உங்களிடம் கேட்கச் சொல்லி யிருக்கிறார்கள்."

பக்கத்தில் படுத்துத் தூங்கிவிட்ட குழந்தையைத் திரும்பிப் பார்த்தான் ரவி. அவன் தூங்கியான பிறகு அவர்களிடையே தடையின்றி நின்ற அந்தரங்க உணர்ச்சிகள். அவற்றின் பிரதியாக நெருங்கிய துடிப்பு. ஆனால் அந்த ஒதுக்கத்துக்கு அவர்களுக்குள்ளே தவிரே பங்கிட்டுக் கொள்ளும் தனிமைக்கு, அவனிடம் ஏக்கம் இல்லை அப்போது. அந்த வேட்கை வடிந்து விட்டது போன்ற நிலை.

அவன் மார்பில் பதிந்தது விஜியின் முகம். காதருகே அவன் பேச்சுக் கேட்டது.

''குழந்தை நம்மை விட்டு இருப்பானா? நாம் அவனைப் பிரிந்து இருக்க முடியுமா?'' மணிக்குத் துணையாக இன்னொரு குழந்தை அவர்களிடையே தோன்றுவதற்கு நாளாயிற்று. அம்மா சொல்வது உண்மைதான். ஆனால் அந்த எதிர்பார்ப்பில் இந்த ஏக்கம் பின்னிழலாய் ஒதுங்கிவிடுவது சாத்தியமா?

மாலை நேரம்.

விஜயா கண்ணயர்ந்து எழுந்திருந்தாள். பிற்பகலில் சற்றுத் தலைவலி ஏற்பட்டது. எழுந்த பின்னும் இலேசாக மண்டையிடி இருந்தது. பூமியில் கால் பதியாததொரு மிதப்பு இருந்தது.

படுக்கை அறையில் மணி தூங்கி எழுந்த அடையாளம் அப்படியே இருந்தது. தலையணையில் தலை அழுந்திய வடு. வாசற்புறம் மர நிழலில் ஊஞ்சலில் ஆடிக் கொண்டிருப்பது வழக்கம். அங்கே அவன் இல்லை. பூந்தோட்டத்தில் பாறைகள் அருகே மண்ணில் கூழாங் கல்லைப் பதிய வைத்துக் கொண்டு விளையாடுவான். அங்கேயும் அவன் இல்லை.

சட்டென்று ஒரு பரபரப்பும் பீதியும் அவளைப் பிடித்துக் கொண்டன. வீட்டுக்குள்ளேயும், சுற்றிலும் தேடியாகி விட்டது. குழந்தை எங்கேயும் இல்லை. பக்கத்தில் வீடுகளில்லை. சரிவாக இறங்கும் ஒற்றையடி மலைப் பாதை. அதற்கு அப்பால் பாதாளமாக மடிந்து திடீரென இறங்கும் பள்ளம். ''ஹோ'' என்ற இரைச்சலுடன் அதன் காலடியில் புரண்டு செல்லும் கருநீல நீர் வெள்ளம்.

நேரம் ஆகிக் கொண்டிருந்தது. இருட்டத் தொடங்கி விட்டது. விஜியின் கண்கள் இருண்டன. உட்காரத் தோன்றாமல் வீட்டுக்குள்ளேயும், வெளியேயும், சுற்றிலும் பித்துப் பிடித்தாற்போல அலைந்து கொண்டிருந்தாள். விபரீதமான சந்தேகங்கள், இருள் வளையங்களாய், ஒன்றிலிருந்து மற்றொன்றாய்ப் புறப்பட்டு அவளை வளைத்துப் பின்னிக் கொண்டன.

அழகும், பசுமையும் தெரியும் செடிகள், அடர்ந்த புதர்கள், வானில் நிமிர்ந்து அலையும் மரங்கள் ஒவ்வொன்றும் சதி செய்வதுபோலத் தோன்றியது. புல் வெளியின் பச்சையிலும் பாறைகளின் கரையிலும் ஒரு பயங்கரம் தெரிந்தது. அருவியாகப் பொழிந்து செல்லும் நீரின் பேரொலியில் தனிக் குரூரம் புலனாயிற்று. சுற்றிலும் அதுவரையில் மனோகரமாகத் தெரிந்த இயற்கை, சகிக்க முடியாத கொடுமையுடன் இருள் பந்தாய்க் கக்கிக் கொண்டு அவள் மேல் கவிந்தது.

விநாடிக்கு விநாடி ஏறும் திகில் ஜுரம்...

''அம்மா! அம்மா!''

காட்டிலாகா ஆளின் குரல்தான் அது. அவன் கையில் மணி இருந்தான். அழுது அழுது தூங்கிப் போயிருந்தான். பாய்ந்து குழந்தையைப் பிடுங்கிக் கொண்டாள். முகத்தை விரல்களில் தாங்கி நெற்றியில் முத்தமிட்டாள். தலை 'கிர்'ரிட்டது. அவளைச் சுற்றி இருந்தவை யாவும் சுழன்று அடங்கின.

''குழந்தை விவரம் தெரியாமல் மலைப் பாதையில் இறங்கிப் போய்க்கிட்டு இருந்தாம். என் வீட்டுக்காரி கொண்டு வீட்டிலே வெச்சிருந்தா. அவளுக்கு நம்ம குழந்தையை அடையாளம் தெரியாது. எப்படியம்மா இந்த மாதிரி புள்ளையை வுட்டுட்டீங்க?''

மணியை முகத்தோடு முகம் அழுந்த வைத்துக் கொண்டு அழுது கொண்டே இருந்தாள் விஜயா. வேறெதுவுமே அவளுக்கு ஞாபகம் இல்லை.

காலைப் பொழுது.

ரவி சிற்றுண்டி சாப்பிட்டுக் கொண்டிருந்தான். அவன் எதிரே உட்கார்ந்திருந்தாள்.

''உன்னைக் கேட்க வேணும் என்று இருந்தேன். நேற்று சீப் இஞ்சினீயர் வந்திருந்தார். இன்ஸ்பெக்ஷனுக்கு. என்னைச் சென்னைக் காரியாலயத்துக்கு வந்து வேலை ஒப்புக் கொள்ள முடியுமா என்று கேட்டார். நான் பிடிகொடுத்துப் பதில் சொல்லவில்லை.''

''ஏன்?'' என்று கேட்டாள் விஜயா.

''உனக்கு இந்த இடமும் சூழ்நிலையும் எவ்வளவு பிடித்திருக்கின்றன என்று எனக்குத் தெரியாதா விஜி?''

''பரவாயில்லை. அதை ஒப்புக் கொண்டு விடுங்கள்.''

''என்னது?''

''ஆமாம். இங்கே இருந்தாயிற்று; அனுபவித்தாயிற்று. இது போதும். இங்கு பெரியவர்கள் வந்து இருக்க முடியவில்லை. குழந்தை நம்மோடு இருந்து படிக்க முடியாது. தனியாக இருக்க எனக்குத் தைரியம் இல்லை—''

ரவி மௌனமானான். அவன் பார்வை தூரக் காட்சியில் ஆழ்ந்து பதிந்து நின்றது. உண்மைதான்; இனி அந்தப் பின்னணிக்குப் பொருத்தம் இல்லைதான். அதை அனுபவிக்கும் உணர்ச்சிகளுக்கும் இடம் இல்லைதான். வயதும் பருவமும் மாறும்போது, உணர்ச்சிகளும் கூட மாறி வருவதுதான் உண்மை. சூழ்நிலையை, வாழ்க்கையை, அதன் பின்னணியைப் பார்க்கும் கண்ணோட்டமும் மாறிவிடத்தான் செய்கிறது.

அந்த அழகில் இப்போது அமைதி இல்லை அவளுக்கு. அந்தத் தனிமையில் நிம்மதியைக் காண முடியவில்லை அவளால். அவர்களுக்குள்ளே இச்சையாய், கட்டற்றுத் திரிந்த சுதந்திரத்துக்கும் அதன் இனிமைக்கும் கூட எல்லைகள் வந்து விட்டன இப்போது.

அது வாழ்க்கையின் ஓட்டம். மனிதர்கள் மட்டும் மாறுவதில்லை. இடம் மாறுகிறது. பகைப் புலம் மாறுகிறது. அந்தப் பின்னணியின் பொருளும் மாறுகிறது. அந்த மாற்றம் தான் இயற்கை. அந்த உயிர்த் துடிப்பையும் சலனத்தையும் ஏற்காமல் எப்படி இருப்பது?

பெருமூச்சுடன் விஜயா ஜன்னலிலிருந்து திரும்பினாள். அவளை அறியாமல் அவள் இமைகள் நனைந்திருந்தன.

''ஆகட்டும் விஜி!'' என்றான் ரவி.




### இதுவரை....

பிரபல வழக்கறிஞர் ராகவனின் மகள் சீலியா. அவள் அன்னையின் பெயர் லிஸ்லி. கல்விக்காக மேல்நாடு சென்றிருந்த பொழுது, சந்தர்ப்பச் சூழ்நிலை ராகவனையும் லிஸ்லியையும் கணவன் மனைவியர்களாக்கி வைக்கிறது. அவருக்கு முதல் மனைவி உண்டு. பெயர் துளசி.

துளசி சரஸ்வதியம்மாளின் தங்கை. சரஸ்வதியம்மாள் 'காப்பியம்' என்னும் இலக்கிய ஏட்டின் அதிபர், மீனாட்சி சுந்தரத்தின் மனைவி. அவர் ராகவனின் தமயன். அவருக்கு ஒரு மகள்: குழலி.

மருத்துவக் கல்லூரியில் படிக்கும் சீலியாவுக்கு வசந்தன் என்னும் மாணவனின் அறிமுகம் கிட்டுகிறது. நாளடைவில் அந்த அறிமுகம் அன்பாக வளர்ந்து காதலாக முற்றுகிறது. ஒருவருக்கொருவர் மனத்தில் முடி போட்டுக்கொண்டிருக்கிறார்களே தவிர, வெளிப்படையாகத் தெரிவித்துக் கொள்ளவில்லை. ஆயினும் 'காரியம் யாவினும் கை கொடுத்து' வாழ்கிறார்கள்.

வசந்தன் அன்னையிடம் அபார பக்தி பூண்டவன். உடல்நலம் குன்றிய அன்னையைத் தாம்பரம் சானடோரியத்தில் சேர்த்த அவனுக்குப் பணத்தட்டுப்பாடு ஏற்படுகிறது. அதைப் போக்கச் சீலியா ஒரு வழி சொல்லுகிறாள். 'காப்பியம்' பத்திரிகை நடத்தும் சிறுகதைப் போட்டியில் கலந்துகொள்ளுமாறு ஊக்குவிக்கிறாள். அவளே 'தமிழரசி' என்னும் பெயரில் நல்ல சிறுகதைகள் எழுதிப் புகழ்பெற்றவள்.

வசந்தன் அவள் அளித்த துணிவில் காப்பியத்துக்கு ஒரு கதை எழுதுகிறான். அதுமட்டுமல்ல; ஒரு நாள் துணிச்சலோடு காப்பியம் காரியாலயத்துக்குச் சென்று அதன் அதிபர் மீனாட்சிசுந்தரத்தைச் சந்தித்துப் பண உதவி கோருகிறான். அப்பொழுது அவனுக்குத் தன் கதைக்கு முதற் பரிசு கிடைத்திருக்கிறது எனத் தெரியவருகிறது. அதோடு அவன் கோரிய உதவியும் கிடைக்கிறது.

அவனுடைய குண நலன்களில் ஈடுபாடு கொண்ட மீனாட்சிசுந்தரம், அடிக்கடி அவன் அன்னையையும் கண்டு பேசி வருகிறார்.

இடையில் 'காப்பியம்' பரிசளிப்பு விழா கோலாகலமாக நடக்கிறது. அப்பொழுதுதான் மீனாட்சிசுந்தரத்துக்கே 'தமிழரசி' என்பது தம் சகோதரனின் மகள் சீலியா என்னும் உண்மை தெரியவருகிறது.

இவ்விழாவை ஒட்டிய விருந்தில், தமது மகள் குழலிக்குத் தேடியிருக்கும் பிள்ளையை அவர் அறிமுகப்படுத்தப் போவதாகத் தெரியவரவே, மகிழ்ச்சி இரட்டிப்பாகிறது. அந்த அறிமுகப்படலம் கதையில் ஒரு சுவாரசியமான திருப்பு முனையாக அமைகிறது. இனி:

## 18. திசை மாறுகிறது

லிஸ்லியின் கேள்விக்குச் சீலியாவால் எவ்வித விடையும் கூற முடியவில்லை. அவள் இமை ஓரங்களில் தீட்டிய மையின் கரிய பளபளப்பு உருகிக் கரைந்துவிடும் போலிருந்தது. மரமாகி, வாய் பேச முடியாமல் ஆகிவிட்ட மௌனம்! அந்தப் பிரமையிலிருந்து மீண்டு, அவளால் தாயாரின் கடுமையைச் சந்திக்க முடியவில்லை. லிஸ்லி அருகில் உட்கார்ந்து அவளுடைய தோள்களை மெல்ல வருடினாள்.

''ஹூ ஈஸ் திஸ், மை சைல்ட்?'' மறுபடியும் பிறந்த கேள்வியில் நயம் தோன்றினாலும் குரலின் கடுமை பாவத்தைக் குறைத்து விடவில்லை.

சீலியா கொஞ்சம் தைரியத்தோடு, ''என் கூடப் படிக்கும் மாணவர்....'' என்றாள்.

''இந்தப் படம் உன்னிடம் ஏன் வந்தது?''

''பாரதி கொடுத்தாள் மம்மி. எங்க காலேஜ் 'மாகசினி'ல் 'பிரிண்ட்' பண்ண வந்திருக்கிறது.''

லிஸ்லி இதற்கு உடனே பதில் அளிக்கவில்லை.

''இந்தப் புத்தகமோ நம் வீட்டில் இருப்பது. இதில் அது எப்படி வந்தது? இதை எடுத்து நீ ஏன் பார்த்துக்கொண்டிருக்கிறாய்?''

கையும் மெய்யுமாகப் பிடிபட்ட திருடனைப் போல் தவித்தாள் சீலியா. கண்களில் கட்டுப்படுத்த முடியாத நீர் உருண்டு விட்டது. லிஸ்லி அவளை அணைத்துக் கொண்டாள்.

''இத்தனை தூரத்துக்கு வந்துவிட்டதே. நீ முதலில் செய்யும் காரியம் அப்பாவிடம் இவரை அறிமுகப்படுத்துவதாக இருக்க வேண்டாமா?''

இது என்ன? இத்தனை நேரமும் தாயின் குரலிலிருந்த கடுமை பொய்யா? அது

கள்ளக் குரலா? பிழியப் பிழிய அழுத கண்ணீரே துளி துளியான நயம்கோத்து மாலையாகி மலர்ந்தது போல் சிலியா சந்தோஷக் கூச்சலிட்டாள். ''மம்மி!''

தாயாரை அழைத்த அந்தச் சொல்லிலே நிலவிய இனிமை மணம் முழுதும் விகசித்து மணத்தது.

''மம்மி! நிச்சயம் இன்று அப்பாவுக்கு அவரை அறிமுகம் செய்து வைக்கிறேன். அவர் இன்று இரவு பெரியப்பா வீட்டுக்கு விருந்துக்கு வந்தாலும் வருவார்....'' சிலியாவின் குரலில் அன்பு குழைந்தது; மனமும், உதடுகளும் இனித்தன.

ஒட்டுதலான, ஒட்டுறவான கண்காணிப்பில் மகளை அளந்தாள் லிஸ்ஸி. அன்றொரு நாள் துளசி இந்த வீட்டில் வந்து வாழாவிடில் சிலியாவுக்கும் வாழ்வில்லை என்று லிஸ்ஸி கூறியபோது செல்வ மகள் எப்படிக் கதறி விட்டாள்? இப்போது சிலியா உரிமையோடு மணம் புரிய நிற்பது துளசி இட்ட பிச்சையல்லவா? துளசியின் வைராக்கியம் உடைந்து, அந்த வீட்டில் அவள் வாழ வந்த தியாகத்தை லிஸ்ஸி பெரும் பேறாகக் கருதினாள். அதற்காகத் தன் கடைசிமூச்சுவரையில் துளசிக்கு அடிமையாகிவிட்ட இனியவுணர்வில் மிதந்தாள்.



தன் அன்பை, மனப்பூர்வமான ஆசையைத் தாயின் கனிவு ஒப்புக்கொண்டு விட்டதாகத் தோன்றியது சீலியாவுக்கு. இனி அப்பாவுக்குச் செய்தி எட்டும், தன் விருப்பம் பூர்த்தியுறும் என்ற நம்பிக்கையும் ஏற்பட்டது. இத்தனை சீக்கிரமாகத் தன்னைக் காட்டிக் கொண்டு அன்பு தன்னை உய்வித்துவிடும் என்று சீலியா எதிர்பார்க்கவில்லை. இரு கரையும் புரண்டோடும் இன்ப வெள்ளத்தில் அவள் திக்குமுக்காடிக் கொண்டிருந்தாள்.

**மா**லை மஞ்சள் வெய்யில் கரைந்து கொண்டிருந்தது. தன்மை சிலிரிடும் காற்று ஊடாடியது. வானத்தின் துல்லியமான நீல நிறத்தில் செந்நிற வாய்க்கால்கள் போல் படர்ந்து கிடந்த கொள்ளைக் காட்சி மனத்தை ஈர்த்தது. இருள் நிறம் அதை மறைத்துக்கொண்டே வந்தது. ஆனால் மனிதர்கள் அதை ஒளி மயமான இருளாக்கி விடுகிறார்களே! நட்சத்திரக் குவியலை வாரி இறைத்தாற் போன்ற பங்களா விளக்குகள் அவற்றின் 'டிஸ்டம்பர்' அழகைப் பிரதிபலித்துக் காட்டின. அலட்சியமான கம்பீரத்தோடும், எளிமையான மிடுக்கோடும் காட்சியளிக்கும் செல்வந்தரின் மாளிகைகள் எல்லாம் ஆரவாரமற்ற சந்தோஷத்தில் மிதந்து கிடந்தன.

மீனாட்சிசுந்தரத்தின் வீட்டு முகப்புத் தோட்டத்தில் நாற்காலிகளும், மேசைகளும் போடப்பட்டிருந்தன. பிரமுகர்கள் பலர் வந்திருந்தனர். நாகரிகமான மெல்லிய சிரிப்பொலிகளும் ஆடம்பரமற்ற ஹாஸ்யக் குலுங்கல்களுமாய் அங்கு ஒரு பெரிய செல்வந்தர்களின் உலகம் அழகுறத் தெரிந்தது. மீனாட்சிசுந்தரம் அமர்வதும், வருபவர்களை வரவேற்பதுமாக இருந்தார். வசந்தனுக்காகச் சென்ற கார் திரும்பி வருவதைக் கண்டதும் அவர் எழுந்து போய்க் காரின் கதவைத் தாமே திறந்து வரவேற்றார். பிறகு அங்கு வந்திருந்தோரிடமெல்லாம் வசந்தனையும், அவன் முதற் பரிசு பெற்றதையும் அறிமுகப்படுத்தி வைத்தார். கடைசியாக வீட்டு முகப்போரத்தில் போடப்பட்டிருந்த மேடையில் அவனை உட்கார வைத்து விட்டுத் தம் உதவியாசிரியர் நிர்மலனைப் பேச்சுத் துணைக்கு அனுப்பி வைத்தார். அந்த நாகரிகமான சூழ்நிலையில் வெட்கத்தால் நெளிந்த வசந்தன் மீனாட்சிசுந்தரத்தின் பெருந்தன்மையை எண்ணி வியந்தான்.

சிறிது நேரத்திலேயே மீனாட்சிசுந்தரத்தின் கை அவன் தோளைத் தொட்டது. ''வசந்தன்! உள்ளே ஒரு நிமிடம் வாருங்கள். என் மனைவியையும், மகளையும் உங்களுக்கு அறிமுகப்படுத்த விரும்புகிறேன்.....'' என்றார்.

வசந்தன் அவரைப் பின்தொடர்ந்தான். பிரும்மாண்டமான அந்த



மாளிகையின் கட்டட அமைப்பும், விளக்குகளின் அமைப்பும் அவனுக்குத் திகைப்பூட்டின. சுவர் வண்ணங்களின் அழகும், தரையில் பதித்திருந்த 'மொசைக்' கற்களின் எழிலும் நவீன முறையின் அம்சங்கள் கொண்ட சோபாக்கள், கண்ணாடிகள், பளிச்சிடும் முகம் கழுவும் தொட்டிகள் முதலியனவும் அவனைப் பேச விடாது பிரமையூட்டின. சாளரங்களின் எழினிகளும், வாசற்படியின் திரைச் சீலைகளும் படபடத்து அவனை வரவேற்றன. வீட்டின் நடுப்பகுதி ஹாலில் மேசை மீது மேனாட்டுப் பாணியில் விருந்து பரிமாறப்பட்டுக் கொண்டிருந்தது. சரஸ்வதியும், துளசியும் அதை மேற்பார்வை செய்துகொண்டிருந்தார்கள். மீனாட்சிசுந்தரம் அவர்களைச் சைகையால் அழைத்தார். அருகே வந்ததும் அவர்களை வசந்தனுக்குச் சம்பிரதாயமாக அறிமுகப்படுத்தி வைத்தார். வணக்கங்களும், பதில் வணக்கங்களும் பரிமாறிக் கொள்ளப்பட்டன.

''குழலி எங்கே ?''

''மாடியில் இருக்கிறாள். அழைத்து வருகிறேன்'' என்று கூறி சரஸ்வதி அம்மாள் சென்றாள்.

சிறிது நேரத்துக்கெல்லாம் நாணம் குமுறப் படியிறங்கி வந்தாள் குழலி. அருகில் வந்ததும் மீனாட்சிசுந்தரம் வசந்தனை அவளுக்கு அறிமுகம் செய்து வைத்தார்.

''இவர் தானம்மா வசந்தன். முதற் பரிசு பெற்றவர். ஹவுஸ் ஸர்ஜனாக இருக்கிறார். வசந்தன் — இவள் தான் என் ஒரே மகள் குழலி. பி. ஏ. இறுதி யாண்டு படிக்கிறாள்.''

''வணக்கம்.''

''வணக்கம்.''

மீனாட்சிசுந்தரம் நிறைவோடு சரஸ்வதியைப் பார்த்து, ''சரியாக எட்டுக்குச் சாப்பிடும்படி இருக்கட்டும்'' என்று சொல்லி விட்டுத் திரும்பி நடந்தார். வசந்தன் அவரைப் பின்தொடர்ந்து தனது பழைய இடத்துக்கே வந்து நிர்மலனோடு அமர்ந்து கொண்டான். அதே வேளை மோகன முறுவல் தொடரச் சீலியா ராகவனோடும், லில்லியோடும் உள்ளே வந்தாள். எடுத்ததுமே வசந்தனைக் கண்டுவிட்ட கள்ளப் பரவசத்துடன் அவள் மெதுவாக அன்ன நடை நடந்தாள். அந்த இருளின் பின்னணியில், மின்னி அசைந்து வரும் அவள் பேரெழிலை யாரும் உணராமல் அவனும் ரசித்துக் கொண்டான். ராகவன் முன் பக்கமே நின்று கொண்டார். லில்லி முன்னேறி உள்ளே சென்றாள். நடையின் தயக்கத்தில் உலவி வந்த சீலியா அவன் அருகே வந்ததும் நின்று தாமதித்தாள்.

அவள் பார்வையின் நேசம் அவன் மனத்தை ஊடுருவி உள்ளே நிறைவித்தது. அடி உணரா ஆழங்காணு ஆசைகள் அனைத்தும் கண்களில் முனைந்து நின்றன. ''நீங்கள் வந்திருக்கிறீர்களா ?''

வசந்தன் திணறினான். 'ஆம்' என்ற பாவனையில் தலை மட்டும் அசைந்தது.

''அப்புறம்.... கடைசியில் நான் உங்களை அப்பாவுக்கு அறிமுகப்படுத்துகிறேன்.'' நிர்மலன் கூடவே உட்கார்ந்திருப்பதைக் கூடப் பொருட்படுத்தாமல் பகிரங்கமாகப் போகிற விஷயம் தானே என்ற ரீதியில் அவள் அங்கிருந்து நகர்ந்தாள்.

உள்ளே சரஸ்வதிக்கும், துளசிக்கும் உதவும் வேலையில் லில்லி பங்கெடுத்துக் கொண்டாள். சீலியா குழலிக்காக மாடிப்படி ஏற முயன்ற போது மீனாட்சிசுந்தரம் அவளை அழைத்தவாறே உள்ளே வந்தார். சீலியா அவருக்காக நின்றாள். அருகில் வந்ததும் சன்னமான குரலில், ''குழலியைக் கொஞ்சம் கேட்டுப் பாரம்மா, அந்தப் பையனை அவளுக்குப் பிடித்திருக்கிறதா என்று!'' என்று காதோடு காதாகக் கூறினார்.

''கேட்டுச் சொல்கிறேன், பெரியப்பா!'' என்றவாறே சீலியா குதூகலத்தோடு மாடிப்படி ஏறி ஓடினாள். குழலி முகம் சிவக்கச் சீலியாவை எதிர்கொண்டு அழைத்தாள். அவள் முகத்தை இரு கைகளாலும் ஏந்திக் கொண்ட சீலியா, கனிவும் கேலியும் கலந்த குரலில், ''இந்த ஏற்பாட்டை எதிர்ப்பின்றி ஏற்றுக் கொள்ளச் சம்மதமா, குழலி?'' என்று கேட்டாள்.

குழலி ஓரக் கண்ணால் அவளைப் பார்த்தவாறே சிரிப்பை மறைக்கப் பார்த்தாள். பூரிப்பின் பிரதிபலிப்பு மங்கி விடவில்லை.

''குழலி, நான் கேட்கும் கேள்விகளுக்கு ஒழுங்கான பதில் தேவை. புரிகிறதா? இது காதல் கல்யாணமா? அல்லது.....? உன்னைப் பார்த்து ரொம்ப நாளாகிறதே, சொல்லும்மா....!''

''ஐயே, போதும்! எல்லாம் அப்பா ஏற்பாடுதான்!'' அவள் முகம் குங்குமமாகச் சிவந்தது.

''நீ அவரோடு பேசினாயா, குழலி?''

''ஊஹூம்....!''

''எதற்குக் குறைப்பட்டுக் கொள்கிறாய்? ஆயுள்முழுதும் பேசப் போகிறாயே, பின் என்ன ?''

தங்குதடையின்றி சுகமாக எழுத




உபயோகிக்கத் தவறாதீர்கள்

# பகோடா ரிஜி.

பவுண்டன் பேனு & பால் பேனு.

இந்தியாவுக்கான ஏகபோக விநியோகஸ்தர்கள்

பென்கிராப்டு ஏஜென்ஸி (இந்தியா)

ஓல்டு பாட்ரா ரோடு, அகோடா, பரோடா-5

சென்னை, கேரள
மாநிலங்களுக்கு ஏஜெண்டுகள் :

நடராஜ் ஸ்டோர்ஸ்

திருநெல்வேலி-1, திருவனந்தபுரம், மதுரை
திருச்சிராப்பள்ளி-8, கோயமுத்தூர்-1
நாகர்கோவில்-1, தூத்துக்குடி-1



பவுன் சூரியன்

மார்க் புகையிலை

காரைக்குடி

''என்ன சீலியா இது?'' என்று சிணுங்கிக் கொண்டாள் அவள்.

'' போகட்டும். எப்பொழுது திருமணம் நடக்கும்?''

''எனக்குத் தெரியாது, போ ! பரீட்சைக்கு அப்புறம்தான் இருக்கும்.''

''ஓ! அப்போது தீர்மானமாக முடிவாகி விட்டதென்று சொல்.''

'' அது போகட்டும், சீலியா, நீ அவரைப் பார்த்தாயா?''

''யாரை....? ஓ.... அவரையா...? ஏன்.....?''

''உனக்குப் பிடித்திருக்கிறதா?''

''நான் பார்க்கவே இல்லையே! நீ கண் குளிரக் கண்டவர் எங்கே மறைந்து கொண்டிருக்கிறார்?....''

''வெளியில்தான் இருக்கிறார்.''

''ஆமாம், எனக்குப் பிடிக்கிறதா என்று கேட்டாயே, எனக்குப் பிடிக்கவில்லை என்றால் நீ, மறுத்துவிடுவாயா ?''

'' ம்....ம்....!''

''ஏன், அதற்கு மனம் வரவில்லையே!''

'' நீ எழுந்திரேன், காட்டுகிறேன் அவரை....''

''காட்டம்மா காட்டு... அதற்குள் உன்னை இப்படி மயக்கி விட்டாரே. பெரியப்பாகூட உன் சம்மதத்தைக் கேட்டுச் சொல்லுமாறு சொன்னார்.''

''நீ என்ன சொல்லப் போகிறாய்?''

''நான் என்ன சொல்ல ?''

''அது உன் இஷ்டம்!''

''அப்போ குழலிக்கு இதில் அவ்வளவாக விருப்பமில்லை. கலகலப்பாகவே இல்லை என்று கூறிவிடுகிறேன்.''

''அப்படி நீ பொய் சொல்வதை நான் தடுக்க வரவில்லை.''

''அப்படி வா வழிக்கு. அது பொய் என்றால், நிஜம் எது என்று சொல்கிறவரையில் உன்னை விடப் போவதில்லை.....''

''ஏன் உன்னிடம் சொல்வதற்கு என்னவாம் ?''

''சொல்லேன்.''

''எனக்கு அப்பாவின் ஏற்பாடு மிகவும் பிடித்திருக்கிறது.''

''சுற்றி வளைக்காதே! நேரடியாகவே பேசு.''

''இது என்ன வம்பு இது?''

''திருமணம் என்றால் சும்மாவா ?''

''என்ன சீலியா இது? நீ அவரைப் பார்த்து உனக்கு அவரைப் பிடிக்கிறதா என்று உன் அபிப்பிராயத்தைக் கூறேன். எழுந்து வாயேன்....'' குழலி அவளை உரிமையாகக் கையைப் பற்றி இழுத்துக் கொண்டு பால்கனியோரம் வந்தாள்.

''எங்கே குழலி ?''

''அதோ... ஓ... அந்த இடத்தில் காணோம்.... அதோ.... அதோ அப்பா யாருக்கோ அவரை அறிமுகப்படுத்திக் கொண்டிருக்கிறார்..... நீலப் பூக்கலசம் வைக்கப்பட்டிருக்கும் மேசையருகே, உயரமாக, சிவப்பாக, முழு நீளக் கைகளுள்ள இளநீல ஷர்ட் அணிந்து நிற்கவில்லை ?.... அவரே தான்..... !'' குழலியின் குரலில் குலுங்கும் மகிழ்ச்சி, குழையும் குரலில் கூடி நிற்கும் உற்சாகம், ஆவல் எல்லாம் சீலியாவின் உள்ளத்தைப் புண்படுத்தி எதையும் பேச முடியாமல் ஆக்கிவிட்டது.

ஆனாலும் அதை நம்பும் திறனற்ற குரலில் அவள், ''.....ஒயிட் பேண்டும், ப்ளூ ஷர்ட்டுமாக நிற்கிறாரே, அவரா? வலது கையில்கூடக் கடிகாரம் கட்டிக் கொண்டிருக்கிறாரே, அவரா?'' என்று நடுங்கியவாறே கேட்டாள்.

''எக்ஸாட்லி சீலியா!'' அவள் தலையசைப்பில் அழகின் முழுமை விகசித்தது. அவள் தோள்களைப் பற்றியிருந்த சீலியாவின் விரல்கள் நடுங்கின. இதுவரையில் ஆனந்தத்தில் துடித்து வந்த அவளது அதரங்கள் நடுங்கின. எரிமலைக் குழம்புக்குள் அமிழ்ந்து போவது போன்ற சித்திரவதை ஏற்பட்டது.

இதயத்தை இரத்தம் சொட்டச் சொட்ட ஒரு பயங்கரமான கை பிடுங்கி எடுத்துத் தூரப் போட்டது போன்ற அவஸ்தை. விதியின் கரங்களோ அவை ?

''சீலியா! உனக்குப் பிடித்திருக்கிறதா ?''

தான் என்றே இல்லாமல் கரைந்து விட்டு வல்லமையற்று விட்டவளாய் அவள் நின்றாள். திடுக்கிடும் இழப்பும், திகைப்பான திகிலுமாய் உலகில் தனக்காகப் படைக்கப்பட்டிருந்த ஒன்றே ஒன்றை இழந்த அவலத்தில் நின்றாள் அவள். நெஞ்சடைக்கும் திணறலில் சூழ்நிலையே வெறிச்சிட்டிருந்தது. பெருமூச்சையும் கண்ணீரையும் அடக்க வெகு பாடுபட்டாள் அவள்.

**ராமர்கள் பலவிதம்!**

தசரத ராமன், சீதாராமன், கல்யாணராமன், கோதண்டராமன், காசிராமன், பட்டாபிராமன், சேதுராமன், கௌசல்யா ராமன்.....

இவை ராமன் அண்டு ராமன் பஸ் நிர்வாகத்தினர் தங்கள் பஸ்களுக்கு இட்டுள்ள சில பெயர்கள். ஒவ்வொரு பஸ்ஸிலும் அந்தப் பெயரும் படமும் காணப்படுகின்றன. -எம். எஸ். வி.

''என்ன சீலியா இது?''

''ஒன்றுமில்லை, குழலி! மாடியோரம் நின்றதால் மயக்கம் வரும் போல் இருந்தது. அவரை எனக்கு மிகவும் பிடித்து விட்டது.....'' உள்ளத்தின் ஓலத்தை உள்ளடக்கியபடி கூறினாள் சீலியா.

வானத்துச் சந்திரனை எண்ணிக் கடல் கண்ட கனவாக ஆகிவிட்டதா? கொஞ்ச நேரம் முன்பு சுயதிருப்தியோடு வசந்தனைக் கண்டுவிட்டு வந்த மகிழ்வை அழித்துவிட்டு ஆயிரம் மடங்காகப் பெருகிய துயரம் பீறிட்டது. பனித்து, சடைத்து ஈரமாகிவிட்ட நினைவுச் சுமை இதயத்தைக் கனக்க வைத்தது. அவள் ஆசையில் விழுந்துவிட்ட கரும்புள்ளி கணத்துக்குக் கணம் பெருகி மன உருவையே அழித்து மறைத்துவிடும் போல் வியாபித்தது.

தள்ளாடியவாறே சோபாவில் வந்து அமர்ந்தவள் அதில் கிடந்த திண்டை எடுத்து மடிமீது வைத்துக் கொண்டு முழங்கைகளை அதில் அழுந்தப் புதைத்துக் கொண்டு முகத்தை இரு கைகளாலும் பக்கவாட்டில் அணைத்துக் கொண்டாள். குழலி கீழே போய்ச் சூடாகக் காப்பி கொணர்ந்து கொடுத்தாள். அதை மறுக்காமல் பருகிய சீலியா, நெற்றியில் வியர்த்த வியர்வை முத்துக்களைத் துடைத்துக் கொண்டாள். ''இப்போது பரவாயில்லையா, சீலியா?'' என்று ஆதுரத்துடன் கேட்டாள் குழலி.

''இப்போது தேவலை, குழலி! ஆனால் இலேசாகத் தலையை வலிக்கிறது. கொஞ்ச நேரம் படுத்துக்கொண்டால் சரியாகிவிடும். நான் வீட்டுக்குப் போகட்டுமா?''

''அதற்கு வீட்டுக்குப் போவானேன்? இங்கேயே படுத்துக்கொள். சாப்பிட்டு விட்டுத்தான் போகவேண்டும். விருந்தில்லையா இன்றைக்கு?'' என்றாள் குழலி.

'விருந்து... விருந்து... யார் எனக்கு உரிமையாக வேண்டுமோ, அவர் வேறு ஒருத்திக்காக நிச்சயமாகிப் பிரிந்து விடப்போகும் இந்த விருந்தை நான் சாப்பிட வேண்டுமா? இப்படி என் உள்ளமெல்லாம் நொந்து புண்ணாக நான் என்ன பாவம் செய்தேன்...?' இந்த வெறுமையான ஓலத்தில் 'சட்'டென ஒரு நம்பிக்கைப் புள்ளி விழுந்தது. இதற்கு வசந்தன் ஒப்பி விட்டாரா? அல்லது அவனைக் கலக்காமலே இது நடக்கிறதா? பிறர் உணருமளவு பிரஸ்தாபிக்கப்படப் போவதில்லை என்று காலையில் அப்பா சொன்னாரே. ஒருவேளை பெரியப்பா அப்படி எண்ணியிருக்கலாம். அவரது விருப்பத்தை இன்னும் கேட்டிருக்க மாட்டார்களோ, என்னவோ? இப்படித் தோன்றிய கணமே அதள பாதாளத்தில் விழுந்து விட்டவளுக்கு மேலேறி வர ஒரு மரக்கொப்பு நீண்டது போல் நம்பிக்கையின் ஆசை வடிவெடுத்தது. இதைத் தடுக்க மாட்டாள் வசந்தன் என்ற ஜீவிய ஆசையும் அடித்துக் கொண்டது.

பேச்சை மிகவும் சகஜமான நிலையில் ஆரம்பிக்கவெனச் சீலியா மெல்லிய குரலில், ''ஏன் குழலி? உனக்கு முன்பே அவரைத் தெரியுமா?'' என்றாள்.

''தெரியும் சீலியா. இப்போது உன்னிடம் ஒரு ரகசியம் கூறப் போகிறேன். யாருக்கும் தெரியாது. அவருக்கே அது நினைவிருக்குமோ என்னமோ?''

''யாருக்கு, வசந்தனுக்கா?''

''ஆம். ஒரு முறை டவுனுக்கு என் தோழி ஒருத்தி வீட்டுக்குச் சென்றிருந்தேன். திரும்பும்போது நேரமாகிவிட்டது. எனவே பூங்கா ரயில் நிலையத்தில் மின் வண்டிக்காக வந்தேன். நான் ஸ்டேஷனை அடைந்தபோதுதான் ஒரு ரயில் கிளம்பிக் கொண்டிருந்தது. இன்னும் காத்திருந்தால் அதிக நேரமாகிவிடும் என்று ஓடும் ரயிலிலேயே ஏற முயன்றேன். அப்போது இதோ இவரேதான் என்னை ஏறவேண்டாம் என வேண்டிக் கொண்டார்.. நான் அதை மதிக்காமலேயே ஏற ஆரம்பித்தேன். 'சட்'டென்று என் இரு கைகளையும் பற்றி அவர் உள்ளே இழுத்துக்கொண்டார். இல்லையென்றால் அன்று 'ஆக்ஸிடெண்ட்'டாகி யிருக்கும்...''

''சபாஷ்! உன் கைகளைப் பற்றி இழுத்து விட்டாரா?'' என்று ஒப்புக்குக் கேட்ட சீலியாவின் குரல் தழுதழுத்தது. 'அந்த ஒரு சாதாரண நிகழ்ச்சியைத் தொடர்ந்து இப்படி ஒரு பெரிய ஆசையை விரும்புகிறாளே, இந்தக் குழலி!' என்ற சின்னஞ் சிறு பொறாமையும் தோன்றியது. ''ஆமாம்! பெரியப்பாவுக்கு இவரை முன்பே தெரியுமா, குழலி?'' என்று கேட்டாள்.

''தெரியுமாம் சீலியா. அப்பா மனத்தில் நெடுநாட்களாக இந்த எண்ணம் இருக்கிறதென்று நேற்றுக் காலைதான் என்னையும், அம்மாவையும் வைத்துக் கொண்டு விவரங்களைக் கூறினார். அவரது அம்மா சானடோரியத்தில் இருக்கிறார்களாம். அவர் அப்பாவிடம் உதவி கோர வேண்டிய நிலை வந்ததாம்...'' குழலி கூறியதிலிருந்து வசந்தன் எத்தனை தூரம் மீனாட்சிசுந்தரத்துக்குக் கடமைப் பட்டுள்ளான் என்பதைச் சீலியா புரிந்து கொண்டாள். அந்தக் கணமே துளி நம்பிக்கை ஏற்றிருந்த மனம் துடைக்கப்பட்டு விட்டது. சொற்களின் அடியால் அது மீண்டும் ரத்த விளாறாக மாறிவிட்டது. **(தொடரும்)**

# சாலைச் சின்னங்கள்

எந்த மொழி எழுத்துமே இல்லாமல் சாலைச் சின்னங்கள் தயாரிக்க முடியுமா? சாலை அமைப்பு நிபுணர்கள் யோசித்து வருகிறார்கள். பரிசீலனையில் உள்ள இந்தச் சின்னங்கள் குறிப்பது என்ன?

முதலில் தோன்றிய எண்ணம் இந்தப் பக்கத்தில்...

சரியான விளக்கம் 95-ம் பக்கத்தில்.




(1) நெருங்குகிறது தீபாவளி. இன்னும் மூன்று நாள்தான்.




(5) தேதி நாற்பதா! இது என்ன மாசம்?



(8) அரை விலைக்குச் சைக்கிள், வேணுமா?



(2) பிடியுங்கள், பிடியுங்கள்! பையன் என் ரேஷன் கார்டைத் தூக்கிண்டு ஓடறான்!



(6) ஒன்றுமில்லை, தோணி ஓட்டி சற்றே காலாற வாக்கிங் போயிருக்கிறார்.



(9) புதையல் எங்கள் வீட்டு வாசலில்தான் இருக்காம். வாரா வாரம் தோண்டிப் பார்க்கிறார்கள்.



(3) மதிலுக்குப் பின்னால் எட்டிப் பார்ப்பது மூன்று சீனர்களா?




(7) கார் விலை இன்னும் ஏறப் போகிறதே, தெரியுமா?



(10) 'சிப்ஸ்' கரகரன்னு இருக்கே தவிர காரமா இல்லே.




(4) இருபது பேர் ஏறினாலும் தாங்கும் மோட்டார் சைக்கிள். ஓட்டிப் பார்த்துத் திருப்தியானால் வாங்குங்கள்!





(11) எப்படி வைத்தால் பார்டர் நன்றாக இருக்கும்? — சிரீவாசன்

**கா**லை மணி பத்திருக்கும்: சுமதி வீட்டுக்குள் ஏதோ வேலையாக இருந்தாள். அந்த நேரத்தில் 'போன்' மணி ஒலித்தது. லீலா பேசினாள்.

''டாக்டர் இருக்கிறாரா?''

''இல்லையே... ஏதோ ஆபரேஷன் 'என்று நேரத்திலேயே போய் விட்டார்.... ஏன் லீலா?'' சுமதி கேட்டாள்.

''ஒன்றுமில்லை.... நான் உங்களைத்தான் பார்க்க வேண்டும்.''

''என்னையா?'' சுமதி ஒரு விநாடி தயங்கினாள்.

''ஆமாம்!''

''வாயேன், நான் வீட்டில்தான் இருக்கிறேன். வெளியில் எங்கும் வேலை இல்லை.''

லீலா ஒரு கணம் தயங்கிய பின், ''அவர் இருக்கிறாரா?'' என்று கேட்டாள்.

''யார்? அண்ணாவைக் கேட்கிறாயா?''

''ஆமாம்!''

''அவரும் இல்லை... எங்கோ வெளியில் போயிருக்கிறார்.''

''அப்படியென்றால் நான் இப்போதே அங்கு வருகிறேன்.''

''சரி... வா, லீலா!''

பேச்சு முடிந்தது. சுமதி யோசித்தாள். லீலா இங்கு வரவேண்டிய காரணம் என்ன? நிச்சயம் அவள் காரணமின்றி இங்கு வர மாட்டாள்....அப்படியென்றால் அது என்ன காரணம்?

சுமதியின் அண்ணன் சங்கர் லீலாவுடன் பேசிக் கொண்டிருந்தான். எங்கெங்கோ அவளுடன் சுற்றுகிறான் என்று இரண்டு தினங்களுக்கு முன்புதான் டாக்டர் ரவி — சுமதியின் கணவன் அவளிடம் சொன்னான். இப்போது லீலா இங்கு வருவது அந்த விஷயத்தைக் குறித்ததாக இருக்குமோ? அதுவாக இருந்தால் இவளிடம் பேச என்ன இருக்கிறது? அவள் தன் பெற்றோர்களிடமல்லவா பேச வேண்டும்? சுமதிக்கு அதற்கு மேல் வேலை ஓடவில்லை. நிச்சயமாக லீலா வந்து விட்டுப் போகும்வரையில் ஒன்றும் ஓடாது. அதனால் அவள் பேசாமல் ஒரு பக்கமாக அமர்ந்து விட்டாள்.

நல்ல வேளையாக லீலா அவளை அதிக நேரம் காக்க வைக்கவில்லை. வந்து விட்டாள். அவளுடைய காரின் சத்தத்தைக் கேட்டவுடன் சுமதி வாயிலுக்கே போய் விட்டாள், அவளை வரவேற்க. பெரிய இடத்துப்பெண்ணல்லவா?

ஒப்புக்குச் சிரித்தாலும், அவள் உள்ளத்தை ஏதோ அரித்துக் கொண்டிருக்கிறது என்பதை லீலாவின் முகம் தெளிவாகக் காட்டியது. சுமதிக்கும் அது தெரியாமல் இல்லை. இருவரும் முன் ஹாலில் அமர்ந்தனர்.

''ஒரு முக்கியமான விஷயத்தில் உங்கள் யோசனையைக் கேட்க வந்தேன்....'' என்றாள் லீலா. அவள்தான் முதலில் பேசியவள்.

''என் யோசனையா? யோசனை சொல்லக் கூடிய அளவுக்கு நான் தகுதி பெற்றிருக்கிறேனா ?''

'' உங்கள் விஷயத்தில் நீங்கள்தானே எனக்கு யோசனை சொல்ல வேண்டும்?''

சுமதி யோசித்தாள்.

'' இப்போதே யோசிக்க ஆரம்பித்து விட்டீர்களா ? நான் இன்னும் விஷயத்தையே சொல்லவில்லையே.?'' லீலா சிரித்தாள். சிரிப்பில் நிறைவில்லை. என்ன குறை இந்தப் பெண்ணுக்கு?

''சொல், லீலா.... என்ன விஷயம் ?'' சுமதி கேட்க வேண்டியிருந்தது.

''சொல்லுகிறேன்... சொல்லத்தானே வந்திருக்கிறேன்.... நான் எப்போதாவது நர்ஸிங்ஹோமுக்குப் போவதுண்டு அப்பாவைப் பார்க்க....''

''ஆமாம்... கேள்விப்பட்டிருக்கிறேன்.''

''கடந்த மாதத்தில் அப்படி ஒரு சமயம் அங்கே போயிருந்த போது, உங்கள் கணவரோடு உங்கள் அண்ணனையும் அங்கே நான் சந்தித்தேன்....''

''ஊரிலிருந்து வந்த அன்றே அவர், அண்ணனையும் அங்கே அழைத்துப் போனார்.... எனக்குத் தெரியும். ஞாபகம் இருக்கிறது.''



''டாக்டர் ரவிதான் எங்களை அறிமுகம் செய்து வைத்தார்.''

''இருக்கலாம்.''

''அந்த அறிமுகத்துக்குப் பின்னர்....''

''என்ன நடந்தது....என் அண்ணன் ஏதாவது வித்தியாசமாக நடந்து கொண்டாரா?'' என்று சுமதி மிகவும் அவசரமாகக் கேட்டாள்.

'' இல்லை.... இல்லை.... அவசரப்படாதீர்கள்....!'' லீலா அப்போதும் விஷயத்தைச் சட்டென்று சொல்லி விடவில்லை. சொல்லலாமா வேண்டாமா என்று யோசிப்பவளைப்போல் மௌனமாக இருந்தாள். சிலவினாடிகள்.

சுமதிக்குப் பொறுக்கவில்லை.

''என்ன லீலா....அதற்குப்பின் நடந்ததைச் சொன்னால்தானே நான் யோசனை சொல்ல முடியும்?'' என்று நாசூக்காக அவசரப்படுத்தினாள்.




''நாங்கள் ஒருவரை ஒருவர் காதலிக்க ஆரம்பித்தோம்.....'' என்று லீலா சட்டென்று சொல்லி முடித்தாள்.

சுமதி பெருமூச்சு விட்டாள். பயப்படும்படியாக ஒன்றுமில்லை.

''இதில் நான் யோசனை சொல்ல என்ன இருக்கிறது லீலா? உங்கள் மனம் ஒன்றுபட்டிருந்தால் திருமணம் செய்து கொள்ள வேண்டியதுதானே? பெற்றவர்கள் சம்மதந்தானே இதற்குத் தேவை?''

பேசிவிட்டு நாக்கைக் கடித்துக் கொண்டாள், சொல்லத் தகாததைச் சொல்லிவிட்டது போல! லீலா அதைக் கவனிக்கவில்லை. மேலே பேசிக்கொண்டே போனாள்.

''நான் சம்மதம் கொடுத்து விட்டால் என்பெற்றோர்கள் தடை சொல்லப் போவதில்லை. ஆனால் என்னை மணதார விரும்பும் ஒருவரை நான் ஏமாற்ற விரும்பவில்லை. உள்ளதை உள்ளபடியே சொல்லிவிட்ட பிறகு, அவர் என்னை ஏற்றுக் கொள்ள முன் வந்தால்....திருமணத்துக்கு நான் தயார். ஆனால், நான் சொல்வதைக் கேட்ட பிறகு நிச்சயம் உங்கள் அண்ணன் என்னை மணக்கச்சம்மதிக்கமாட்டார். வாழ்க்கை உப்புச்சப்பில்லாததாக இருக்கும் என்பதை முன்கூட்டியே தெரிந்த பிறகு அதை எந்த உருவத்திலும் யாரும் வரவேற்கமாட்டார்கள். இல்லையா?''

சுமதிக்கு அவள் என்ன சொல்லுகிறாள் என்றே இன்னமும் புரியவில்லை. ஆனால் புரிந்தது போலும் இருந்தது.

''நீ என்ன சொல்லுகிறாய், லீலா?''

கண்களில் வழிந்த நீரைச் சுண்டிவிட்டு லீலா கேட்டாள். ''இரண்டு வருடங்களுக்கு முன் நானும், என் தாயாரும் உங்கள் கணவரிடத்தில் என் உடல் நிலை விஷயமாக ஆலோசனை கேட்க வந்தோமே, அது உங்களுக்கு நினைவிருக்கிறதா?''

ஒருகணம் யோசித்துவிட்டு, ''நினைவிருக்கிறது!'' என்றாள் சுமதி.

''விஷயமென்ன, உங்களுக்குத் தெரியுமா?''

''தெரியும்....''

''உங்களுக்குத் தெரியுமா?.... எப்படி...உங்கள் கணவர் உங்களிடம் சொன்னாரா?'' லீலா படபடப்போடு கேட்டாள்.

சுமதி பதில் சொல்லவில்லை.... எப்படிச் சொல்லுவாள்?

''சரி....உங்களுக்குத் தெரியும். அதை இப்போது உங்கள் அண்ணனிடம் சொல்ல வேண்டுமா....

இல்லையா? என்ன செய்ய வேண்டுமென்று எனக்கு யோசனை சொல்லுங்கள்!'' என்று லீலா கேட்டாள்.

''உன் முடிவென்ன?'' சுமதி அவளையே திருப்பிக் கேட்டாள்.

''சொல்லிவிட வேண்டும் என்பதுதான்.''

''சொல்லிவிடேன்.''

''சொல்லி விடலாம்.... ஆனால் எனக்கு வாய் வரவில்லை. அதே சமயத்தில் சொல்லாமல் இருப்பது தவறு என்பதையும் நான் உணருகிறேன்.....''

''அதற்காக....!''

''நீங்களே இந்த விஷயத்தை அவரிடம் விளக்கமாகச் சொல்லி விடுங்கள்.... விவரத்தைக் கேட்ட பிறகு அவர் என்ன சொல்லுகிறார் என்பதையும் நீங்களே எனக்குச் சொல்லுங்கள். அவர் மன நிலை எனக்குத் தெரிய வேண்டுமல்லவா? அதைப் பொறுத்துத் தான் என் முடிவும் அமைய வேண்டும். இன்றுதான் எங்கள் திருமணத்துக்கு அவர் சம்மதம் கேட்டார். விவரத்தைக் கூறாமல் சம்மதத்தைக் கொடுத்து விட்டால் என்னைப் போல் ஒரு கிராதகி எங்கும் இருக்கவே முடியாது என்பது என் அபிப்பிராயம்! அதே சமயத்தில் என் விஷயத்தை நானே விளக்கவும் தயாராக இல்லை. எப்படி முடியும் சொல்லுங்கள்? அதற்காகத்தான் உங்கள் யோசனைக்காகவும், உதவிக்காகவும் உங்களை நான் நாடி வந்தேன். என்ன? எனக்கு உதவி செய்வீர்களா?'' என்றாள் லீலா. மறுபடியும் அவள் கண்களில் நீர் பெருக்கெடுக்க ஆரம்பித்து விட்டது. அவளால் அதை அடக்க முடியவில்லை.

சுமதியின் அண்ணனிடம் 'அந்த' விஷயத்தைப் பற்றிப் பக்குவமாகச் சொல்லி, அவனைத் திருமணத்துக்குத் தயார் செய்யச் சொல்லுகிறாள் இந்தப் பெண்! சங்கர் அவ்வளவு கேவலமாகவா போய் விட்டான், இப்படி ஒரு பெண்ணை மணக்க? இருப்பினும், அதை வெளிப்படையாக லீலாவிடம் சொல்லிவிட முடியுமா? இதைப் பற்றியே சங்கரிடம் பேசாமல், அவனுக்கு விருப்பமில்லை என்று மட்டும் சொல்லி விட்டால், அவன் விட்டு விடுவான். அதையே இவளுக்கும் பதிலாகச் சொல்லி விட்டால், காரியம் முடிந்து விடுகிறது. சுமதி அப்படிப்பட்ட முடிவுக்குத்தான் அப்போது வந்தாள். அவள் மௌனத்தை லீலா கலைத்தாள்.

''என்ன யோசனை? தயவுசெய்து நீங்கள் எனக்காக உங்கள் அண்ணனிடம் பேசித்தான் ஆக வேண்டும். முடிவு எப்படி இருந்தாலும் நான் அதைப் பற்றிக் கவலைப்படவில்லை.... எதையாவது ஒன்றை ஒப்புக் கொள்ளத்தானே வேண்டும் என்னைப்போல் உள்ள பெண்கள்?'' என்றாள் லீலா விம்மலுக்கிடையே.

'நான் இதைக் குறித்து அண்ணனிடம் பேசமாட்டேன்' என்று சுமதி சொன்னால், லீலா அங்கேயே உட்கார்ந்து சத்தியாக்கிரகம் செய்து விடுவாள் போலிருந்தது.

ஏற்கனவே முடிவுக்கு வந்தது போல், ''சரி சொல்லுகிறேன்'' என்று சுமதி சொன்னாள், மிகவும் சிரமத்துடன். அதற்குப் பிறகு லீலா அதிகம் பேசாமல் அவளிடம் விடை பெற்றுக் கொண்டாள்.

லீலாவை அழகியல்ல என்று சொல்ல முடியாது — அழகிதான். பணக்காரக் குடும்பத்தின் ஒரே வாரிசு அவள். அவள் தந்தை டாக்டர் சுந்தரேசன், நகரில் உள்ள பெரிய நர்ஸிங்ஹோமின் பிரதம டாக்டர். அதில் தான் சுமதியின் கணவன் டாக்டர் ரவியும் வேலை பார்க்கிறான். இப்படிப்பட்ட ஓர் இடத்தில் சம்பந்தம் செய்து கொள்ளச் சங்கர் கொடுத்து வைத்திருக்க வேண்டும். ஒரு சர்க்கார் உத்தியோகஸ்தனுக்கு இவ்வளவு வசதி மிக்க இடத்தில் சம்பந்தம் கிடைக்குமா? கிடைக்கிறது என்றால் அதை முழுமனத்துடன் வரவேற்க வேண்டியது தான்.... ஆனால்....?

சுமதிக்கு மன நிம்மதி போய்விட்டது. அண்ணனிடம் விஷயத்தைச் சொன்ன பிறகு, தான் கொண்ட காதலின் விளைவால், லீலாவைத்தான் திருமணம் செய்து கொள்வேன் என்று முடிவு செய்துவிட்டால்? சுமதி என்ன, அவளைப் போல் ஆயிரம் பேர் வந்தாலும், அவனது முடிவை மாற்ற முடியாது. அவன் பிடிவாதக்காரன். இதுவரை கல்யாணம் செய்து கொள்ள முடியாது என்று கண்டிப்பாகச் சொல்லிக் கொண்டு வந்தவன். இப்போது ஒரு பெண்ணை மணந்துகொள்ள முன் வந்திருக்கிறான் என்றால், அதுவே பெரிய விஷயந்தான்! ஆனால் அவள் எப்படிப்பட்ட பெண்?

சுமதியால் அதை நினைத்துப் பார்க்கவே முடியவில்லை. ஆனால் அதே பெண்ணைக் காரணமாகக் காட்டித்தான் தன் கணவனுக்கு அந்தப் பிரபலமான நர்ஸிங்ஹோமில் வேலை வாங்கிக் கொடுத்தாள். ஆம்! இப்போது ரவி இருக்கும் உயர்ந்த நிலைக்கு லீலா தான் காரணம்.

படிப்பு முடிந்து, ஆஸ்பத்திரிப் பயிற்சியை ஒப்பேற்றியபின் நர்ஸிங்ஹோம் வைக்க வேண்டுமென்று ரவி விருப்பப்பட்டான். வசதி வேண்டாமா? உபகாரச் சம்பளத்தில் படித்து முடித்த அவன் பெரிய இடத்தில் திருமணம் செய்து கொண்டிருந்தாலாவது, மாமனார் நர்ஸிங்ஹோம் வைத்துக் கொடுத்திருப்பார். நடந்ததோ காதல் திருமணம். வசதியில்லாத குடும்பம். வீடு மட்டும் கிடைத்தது. அவனது இலட்சியக் கனவு என்னவென்பது சுமதிக்குத் தெரியும். ஆனால் அவள் என்ன செய்வாள்? கடனைப் பணத்தை வாங்கி ஆஸ்பத்திரி கட்ட அவன் தயாராக இல்லை. வீட்டில் இருந்த டிஸ்பென்சரிக்குக் கூட்டம் வந்தால் போதும் என்று அவன் இருந்துவிட்டான். கூட்டமும் வந்தது. கைராசி டாக்டர் என்ற நல்ல பெயர் அவனுக்கு. இருப்பினும் அதில் சம்பாதித்து நர்ஸிங்ஹோம் கட்டக் குறைந்தது பத்து வருடங்களாவது ஆகும். சுமதிக்குத் திருப்தி இல்லை. தினமும் ஒரு தடவை யாவது அதைப் பற்றிப் பேசும் தன் கணவனின் மனநிலை எப்படி இருக்கிறது என்பது அவளுக்கு அத்துபடி. ஆனால் அவளால் என்ன செய்ய முடியும்?

அந்தச் சமயத்தில்தான் நகரில் இருக்கும் பிரபல தர்ம ஸ்தாபனம் ஒன்று நடத்தும் பெரிய நர்ஸிங்ஹோமுக்கு இளம் டாக்டர் ஒருவர் தேவை என்கிற விஷயம் சுமதியின்

உங்கள் சேமிப்பு இவளது எதிர்கால வாழ்க்கையைப் பாது காக்கும். இவளது பள்ளிப் படிப்பு, உயர் கல்வி, திருமணம் — இவை அனைத்திற்கும் பணச் செலவு ஏராளமாகும். எனவே, பணத்தை வளரச் செய்கின்ற யூகோ பாங்கில் இவளுக்காகப் பணம் சேமித்துவாருங்கள்.

உங்கள் மகளை எல்லாக் காலத்திலும் மகிழ்ச்சியுடனிருக்கச் செய்யுங்கள்

# உங்கள் மகள் வளர்ந்து வருகையில் மகிழ்ச்சி யுடனிருக்கச் செய்யுங்கள்!




தலைமை ஆபீஸ்: கல்கத்தா

நீங்கள் பணம்
சேமிக்க முடியும்
யூகோ பாங்க்
உங்களுக்கு
உதவி புரியும்!

ASP/UCO-5/68

# It's the cloth that matters!

## Buying an umbrella? Make sure it works!

(and is colour-fast, strong, keeps its shape)

## It's easy—make sure the cloth is Century's!

Century's umbrella cloth is used for all the best umbrellas made in India because umbrella manufacturers *know* that it is the cloth that matters.

Century's umbrella cloth starts right with superior cotton and a special construction which makes the fabric strong and not only water-proof but *shower-proof*. The fabric is dyed with a special process which makes it guaranteed colour-fast. It is finally mercerized and schreiner calenderized to give that smart silky finish. At every stage of manufacture, the fabric goes through rigid quality control tests.

The result is a cloth that really protects you from rain or sun.

***Umbrella shops everywhere stock umbrellas made with Century's cloth: buy one of these—they are the best.***

**Century's**
**UMBRELLA CLOTH**
**your guarantee for quality**

காதில் விழுந்தது: ரவியே அதைப் பற்றி அவளிடம் பேசினான்.

''பணம் சம்பாதிக்க வேண்டும் என்று எல்லா டாக்டர்களும் நினைத்து நர்சிங் ஹோம் கட்டிவிட்டால், நகரில் ஆஸ்பத்திரிகள்தான் அதிகமாக இருக்கும். வரும்படி இருக்காது. பணம் சம்பாதிக்கும் எண்ணம் இருப்பதைப் போலவே,' டாக்டர்களுக்குச் சேவை மனப்பான்மையும் இருக்க வேண்டும். சுமதி, எனக்குக்கூட இப்போதெல்லாம் இந்த எண்ணந்தான் மனத்தில் அடிக்கடி தோன்றுகிறது..... பார்.... அந்த நர்ஸிங்ஹோமில் டாக்டர் தேவை என்று கேள்விப்படுகிறேன். எனக்கு மட்டும் அதில் இடம் கிடைத்துவிட்டால் போதும்! அதில் சேர்ந்து என்னால் முடிந்த அளவுக்குச் சேவை செய்து கொண்டு, இந்த என் டிஸ்பென்சரியில் வரும் வரும்படியில் நன்றாகப் பிழைத்துக் கொள்ள முடியும்.''

'' ஏன் அதில் கிடைப்பது அவ்வளவு கடினமா ?''

''பிறகு... எளிதென்று நினைத்துவிட்டாயா ? பணத்தைப் போல் புகழுக்கு ஆசைப்படும் டாக்டர்களும் இருக்கிறார்கள் அல்லவா ? இளம் டாக்டர்கள் நான், நீ என்று போட்டி போட்டுக் கொண்டு அங்கே போவார்கள். நான் முயன்றால்கூட அங்கு எனக்கு இடம் கிடைப்பது மிகவும் கடினம்'' என்றான் ரவி.

''உங்களுக்கும் நல்ல பெயர் இருக்கிறதே.. ஒரு விண்ணப்பம் போட்டு வையுங்களேன்.''

சுமதியை ரவி ஏறிட்டுப் பார்த்தான். மனைவி கணவனுக்குத் தைரியம் சொல்லுகிறாளா ?'

''என்ன சுமதி, விண்ணப்பம் மட்டும் போட்டு விட்டால் போதுமா? அதற்காகச் சிலரைப் பார்த்து முயற்சி செய்ய வேண்டாமா? எனக்கோ பெரிய மனிதர்கள் யாரையுமே தெரியாதே!''

''தெரியவே வேண்டாம். அதிர்ஷ்டம் ஒன்று இருந்தால் கிடைத்து விட்டுப் போகிறது...''

''சரி. அந்தக் குறை மட்டும் ஏன் இருக்க வேண்டும்? போட்டுத்தான் வைக்கிறேன்.'' இப்படித்தான் அந்த நர்ஸிங் ஹோமுக்கு டாக்டர் ரவி முதலில் விண்ணப்பம் போட்டான். ஆனால் சுமதிக்கு நிச்சயம் தனது கணவனுக்கு அந்த வேலை கிடைத்துவிடும் என்கிற நம்பிக்கை இருந்தது. எப்படி?

ஒரு வாரத்துக்கு முன் தாயும் மகளுமாக இருவர் டாக்டர் ரவியைப் பார்க்க அவன் டிஸ்பென்சரிக்கு வந்திருந்தார்கள். அந்த அம்மாள்தான் நர்ஸிங் ஹோமை நிர்வகித்து வருகிற டாக்டர் சுந்தரேசனின் மனைவி காமாட்சி என்பதும், அவளுடன் வந்திருப்பது அவள் மகள் லீலா என்பதும் பிறகுதான் சுமதிக்குத் தெரிய வந்தது.. அவர்கள் டாக்டர் ரவியிடம் வந்த வேலையோ?

அதற்குப் பிறகு சுமதி நேராகப் போய்க் காமாட்சியைப் பார்த்தாள். பேசினாள். பத்தே நாட்களில் ரவிக்கு ஆர்டர் வந்து விட்டது. அவன் அதைக் கொண்டு வந்து அவளிடம் காட்டியபோது அவளும் மகிழ்ந்தாள். ஆனால் தன்னால்தான் அவனுக்கு அந்த உத்தியோகம் கிடைத்திருக்கிறது என்பதை மட்டும் அவள் அவனிடம் சொல்லவில்லை. எப்படிச் சொல்ல முடியும்?

இரண்டு வருடங்கள் ஓடி விட்டன. அந்த உத்தியோகத்துக்குக் காரணமாக இருந்த லீலா இப்போது மீண்டும் வந்திருக்கிறாள். சுமதியின் அண்ணன் சங்கரின் காதலியாக.. வருங்கால மனைவியாக வருவதற்காக! சங்கர் வடக்கே வேலையாக இருக்கிறான். தங்கையைப் பார்க்க விடுமுறையில் வந்திருக்கிறான். வந்த இடத்தில் காதல் வயப்பட்டு விட்டான். வரவேற்க வேண்டிய விஷயம். ஆனால் அவன் தேர்ந்தெடுத்திருக்கும் பெண்?...இவ்வளவு நாட்களுக்குப் பிறகு இப்படி ஒரு பெண்ணா? அவளுக்கு அண்ணியாக வரவேண்டும்? அவளால் தன் கணவனுக்கு வேலை கிடைத்து, அவன் நிம்மதியாக இருக்கிறான் என்றாலும் அதற்காகச் சுமதி இதைச் செய்யத் தயாராக இல்லை. அதற்காக வேறு ஏதாவது கேட்கட்டுமே... சங்கர் கேட்டாலும், கேட்கா விட்டாலும் அவன் தடுத்தே தீர வேண்டும்... இல்லை என்றால் ரவியிடம் சொல்லியாவது இதை நிறுத்தி விட வேண்டும் என்று முடிவு செய்து கொண்டாள். ஒரு விதத்தில் அதுதான் சிறந்த வழியாகவும் அவளுக்குத் தெரிந்தது. லீலாவைப் பற்றி அவளுக்கு என்ன கவலை?

பிற்பகல் ரவி வீட்டுக்கு வந்தபோது, சுமதி முதலில் பேச்சை ஆரம்பித்தாள்.

''அப்படியா? நான் சந்தேகப்பட்டது சரிதான்... தொந்தரவே இல்லை.. இருவருக்கும் திருமணம் செய்து விட வேண்டியதுதான்'' என்றான் ரவி மகிழ்ச்சி பொங்க.

சுமதிக்குப் புரியவில்லை. 'லீலாவைப்பற்றித் தெரிந்தவர்! அவரே இப்படிச் சொன்னால்? எல்லாவற்றையும் பெரும் போக்காகப் பார்க்கிறாரா?'

''அந்தப் பெண் லீலா...'' என்று அவள் மெதுவாக ஆரம்பித்தாள். ஆனால் முடிக்கவில்லை. அதற்குள் ரவி பேச ஆரம்பித்து விட்டான்.

''மிகவும் நல்ல பெண். படித்த பெண். இவ்வளவு அடக்கமாகவும் பண்புடனும் நடந்து கொண்டதை நான் பார்த்ததில்லை.

### புதிய சாலைச் சின்னங்கள்

**அனர்த்தங்களுக்குச் 'சரியான அர்த்தங்கள் :**

**1. அகலத்திற்கு எல்லை 2. பள்ளிக் கூடம் 3. கரடுமுரடான சாலை 4. 20 வண்டி நிறுத்த இடம் 5. இவ்வளவு வேகம் போகலாம் 6. ஓடம் விடப்படும் 7. ஆபத்தான சாலை ஏற்றம் 8. சைக்கிள் போகக் கூடாது 9. ஆட்கள் வேலை செய்கிறார்கள் 10. ரயில்வே கிராசிங் 11. நுட்பமான சாலைத் திருப்பம்: வலப்புறம், இடப்புறம்.**

அவளுக்கு இருக்கும் வசதிக்கு அவள் என்ன வேண்டுமென்றாலும் செய்யலாமே? ஆனால்...அவள் ஒரு தனிப் பிறவிதான் சுமதி... சும்மா சொல்லக் கூடாது... நமது சங்கர் கொடுத்து வைத்தவன்'' என்று ரவி அடுக்கிக் கொண்டே போனான்.

சுமதி தயங்கினாள். கணவன் இப்படிப் பேசிக் கொண்டிருக்கும்போது அவள் குறுக்கே எதைச் சொன்னாலும் எடுபடாதே. கொஞ்சம் பொறுப்போம் என்று பேசாமல் இருந்தாள். ரவி தொடர்ந்தான்.

''ஆண்டவன் நல்லவர்களைச் சோதிக்காமல் விடுவதில்லை, சுமதி... லீலாவிடமும் குறையை வைத்து விட்டான்...'' அவன் அதை முடிக்கவில்லை.

இப்போதுதான் அவர் விஷயத்துக்கு வருகிறார் என்று அவள் நினைத்தாள். வரட்டும் அதில் அவரை மடக்கி இதில் ஒரு முடிவைக் கண்டுவிடுவோம் என்று அவள் மனத்துக்குள் முடிவு செய்து கொண்டாள். ஆனால் ரவி சொன்னது என்ன?

''அவளுக்குக் குழந்தை பாக்கியமே கிடையாது சுமதி... உனக்குக்கூட ஞாபகம் இருக்கலாம். இரண்டு வருடங்களுக்கு முன்பு டாக்டர் சுந்தரேசன், எங்கோ வெளியூர் சென்றிருந்த சமயம் அவரது மனைவியும், மகள் லீலாவும் என்னிடம் வந்திருந்தார்கள். எனக்கு அன்று அவர்களை யாரென்று கூடத் தெரியாது. ஆனால் அவர்களோ என்னைப் பற்றிக் கேள்விப்பட்டு என்னிடம் வந்து ஆலோசனை கேட்டார்கள். என் யோசனைப் பிரகாரம் ஆபரேஷன் செய்ததால்தான் இன்று லீலா உயிரோடு இருக்கிறாள். இல்லையென்றால் அவள் வயிற்றில் அப்போதிருந்த கட்டி அவள் உயிரையே குடித்திருக்கும். அவளுக்குக் குழந்தை இல்லாமல் போனால்தான் என்ன? உன் அண்ணன்தான் அனாதை விடுதியில் வேலை பார்க்கிறானே! சர்க்கார் செலவிலேயே ஒரு குழந்தையைத் தத்து எடுத்துக் கொள்ளலாமே?'' என்றான் ரவி சிரித்துக் கொண்டே.

சுமதியோ திகைத்துப் போய் விட்டாள். உண்மை வேறு மாதிரியாக அல்லவா இருக்கிறது....

''வயிற்றில் கட்டி இருந்ததாகவா சொல்கிறீர்கள்?''

''பிறகு குழந்தையா இருக்கும் கன்னியின் வயிற்றில்? அந்தக் கட்டி கர்ப்பம் போலவும் தெரியும். டாக்டர் சுந்தரேசன் இருந்திருந்தால், அதைக் கண்டுபிடிக்கும் பெருமை எனக்குக் கிடைத்திருக்காது. மேலும் சிலருக்கு வெளி டாக்டர்களிடம் காட்டினால்தான் நோய் குணமாகும் என்ற நம்பிக்கை. வீட்டில் இருக்கும் டாக்டர்களை அவர்கள் நம்ப மாட்டார்கள். டாக்டர் சுந்தரேசனின் மனைவி காமாட்சி அந்த வகையைச் சேர்ந்தவள். சரி... உனக்கு லீலாவுக்குக் குழந்தை இல்லாத குறை பெரிதாகத் தெரிகிறதா?... ஏன் சுமதி? வாழ்க்கையில் குழந்தை மட்டும்தான் முக்கியமா? குழந்தை இல்லாதவர்கள் வாழவில்லையா?'' டாக்டர் ரவி கேட்டான்.

''இல்லை....இல்லை... இந்த உலகத்தில்... குழந்தை இல்லாதவர்கள் எவ்வளவோ பேர் இல்லையா? அவர்களும் வாழுகிறார்கள்... சங்கரும் வாழ்வான். கல்யாணத்தை நடத்தி விட வேண்டியதுதான்...'' என்றாள் சுமதி திருப்தியடைந்த குரலில்.

''சரி! இன்று மாலையே நாம் போய் டாக்டர் சுந்தரேசன் வீட்டில் நம் சங்கருக்காகப் பெண் கேட்போம்... என்ன, செய்வோமா?''

''போவோம்... கேட்போம்...''

அவர்கள் பேச்சு முடிந்தது. ஆனால் சுமதி மாலைவரையில் பொறுத்துக் கொள்வாளா? ரவி இந்தப் பக்கம் வெளியில் போனவுடன் அவள் நேராகக் காமாட்சியைத் தேடிக் கொண்டு ஓடினாள்.

காமாட்சி அவளை இனிய முகத்தோடு வரவேற்றாள்.

''வா, சுமதி... லீலா என்னிடம் சற்று முன்புதான் சொன்னாள். அதனால் நானே உன் வீட்டுக்கு வரலாம் என்று இருந்தேன். சங்கர் என்ன சொல்லுகிறான்? அவன் சம்மதித்தால் எங்களுக்குப் பூரண சம்மதம்'' என்றாள் காமாட்சியம்மாள் எடுத்த எடுப்பில்.

சுமதிக்கு அழுகை வந்து விட்டது. அவளுக்கு என்ன பெருந்தன்மை!

''சங்கர் சொல்வது இருக்கட்டும், இரண்டு வருடங்களுக்கு முன்பு நீங்கள் லீலாவுடன் வந்து என் கணவரின் அறையில் பேசிக் கொண்டிருந்ததை நான் அரை குறையாகத்தான் கேட்டேன். அதிலிருந்து லீலா கர்ப்பமென்று நான் தவறாக முடிவு கட்டி விட்டேன். அதை வெளியே சொல்வதாகப் பயமுறுத்தியே உங்களை என் கணவருக்கு வேலை வாங்கித் தரச் சொன்னேன். அது எவ்வளவு பெரிய தவறு என்று எனக்கு இப்போதுதான் தெரிகிறது. முதலில் நீங்கள் என்னை அதற்காக மன்னிக்க வேண்டும்'' என்று அழுது கொண்டே சுமதி அன்று அது வரையில் நடந்ததை அவளிடம் சொன்னாள். அதைக் கேட்ட காமாட்சியம்மாள் சிரித்தாள்.

''அடி அசடே! அன்றே நீ தவறு செய்து விட்டாய் என்று எனக்குத் தெரியும். இருந்தாலும் உன் கணவன் மீது நீ கொண்டிருக்கும் அக்கறையின் காரணத்தினாலும், நான், உன் கணவரின் திறமையைக் கண்டு வியந்ததாலும்தான் என் கணவரிடம் ரவியைப் பற்றிச் சொன்னேன். ஆனால் நான் சொல்வதற்குள் அவரே ரவியைப் பற்றிக் கேள்விப்பட்டு ஆர்டர் போட்டு விட்டார். அதனால் நான் திருப்தியடைந்தேன். நீயும் திருப்திப்பட்டிருப்பாய். ஆனால் சுமதி, நான் உனக்கு ஒன்று சொல்கிறேன். கேள். டாக்டரின் மனைவியாக இருக்கிறவர்கள் தங்கள் கணவர்கள் நோயாளிகளிடம் என்ன பேசுகிறார்கள் என்று ஒட்டுக் கேட்கக் கூடாது. கேட்டாலும் அதை மறந்துவிட வேண்டும். உன்னுடைய சமாசாரம் என் மகளின் வாழ்க்கைக்கே உலை வைக்க இருந்ததைப் பார்த்தாயல்லவா?''

சுமதி பேசாமல் தலையை ஆட்டினாள்.

''சங்கர் குழந்தையே வேண்டாம் என்கிறான்'' என்று கூறிக் கொண்டே ரவி, சங்கருடன் அப்போதுதான் அங்கே நுழைந்தான். சுமதி சிரித்தாள்.



□ □ □ □ □

துணி துவைத்துக் கொண்டிருந்த சாவித்திரி திடீரென்று அங்கே கேட்ட விசும்பல் ஒலியால் ஈர்க்கப்பட்டபோது தங்கை சந்திரா அங்குள்ள கிணற்றுக் கட்டை யருகில் நின்று கொண்டு அழுத வண்ணம் இருந்ததைக் கண்டாள்.

சாவித்திரி தன் தங்கையின் அழுகையைக் கண்டு அதிரவில்லை. சர்வ சாதாரணமான நிகழ்ச்சிதான் அது.

அவள் அழாத நாள் எது?

சாதாரணமாக அமர்ந்திருக்கும்போதே எதையாவது நினைத்துக் கொண்டு பிழியப் பிழிய அழுவது என்பது அவளைப் பொறுத்த வரையில் யாராலும் கட்டுப்படுத்த முடியாத ஒன்று. இளமைக் கனவுகளை ஏராளமாக மன விரிவிலே படர விட்டுக் கொண்டு தவிக்கிற தவிப்பு, எதிர்காலம் பற்றியதொரு பிரமை வெளியிலே அவள் ஸ்தம்பித்து நிற்பதுபோல உணர்கிறபோது, அந்தச் சின்ன மனம் அனுபவிக்கிற பயம் அழுகையாக உருமாறி விசும்பலாகத் தெறிப்பதுண்டு. அந்நேரங்களில் ஆத்திரம் கொண்டு தங்கையை மிரட்டி, "ஏண்டி அழறே, உனக்கென்ன கேடு வந்துவிட்டது இப்போ?" என்று சாவித்திரி சீறும்போது, "நாம இப்படியே இந்தச் சித்தப்பாவுக்குப் பயந்து பயந்து வாழ்நாளெல்லாம் இந்த வீட்டிலேயே அடைஞ்சு கிடந்துட்டா நம்முடைய பிற்காலம் என்ன ஆறது? நீதான் பார்க்கிறியே, வீட்டோட சூழ்நிலை எப்படியெல்லாம் மாறிண்டு வருகிறது? அநாதையா யாருமே நம்மேல் அக்கறை காட்ட நாதியில்லாமே சித்தப்பாவின் மிரட்டலுக்கும் சித்தியின் கெடுபிடிக்கும் நடுவிலே எதிர்நீச்சல் போட்டுண்டு எத்தனை நாளைக்கு இந்த அவலப் பிழைப்பு பிழைக்கிறது சொல்லு? இதை நினைக்கிறபோதெல்லாம் என்னால் என் துயரத்தைத் தாங்க முடியவில்லை" என்பாள்.

அவளது துயரம் ஓரளவு நியாயமானது தான் என்பது சாவித்திரிக்குத் தெரியாததல்ல! தெரிந்து என்ன செய்யமுடியும்? இன்று அவர்களுடைய நிலை சித்தப்பாவையும், சித்தியையும் எதிர்த்துக் கொண்டோ அல்லது அவர்களுடைய ஆதரவை உதறிவிட்டு வெளியேறுவது என்பதோ சற்றும் இயலாத காரியம். நடக்கக் கூடியதுமல்ல. இந்தப் பிரும்மாண்டமான உலக விரிவிலே அவர்களுக்கு அவர்களின் சித்தப்பாவான கணேசலிங்கத்தை விட்டால் வேறு யாருமே கிட்டின உறவில்லை. அழுதாலும் அரற்றிக் கொண்டாலும் அந்தக் கூட்டை விட்டுப் பறந்து செல்ல முடியாது. வெறுப்பிலும் வேதனையிலும் அங்கேயேதான் சிறகொடிந்து கிடக்க வேண்டும்.

'இப்படி எதையாவது எண்ணி அவள் அழக் கூடும்' என்று தனக்குள் எண்ணமிட்டுக் கொண்டவள் அவளை நிமிர்ந்து பார்த்துவிட்டு, மீண்டும் தன் வேலைகளில் ஈடுபடப் போனவளைச் சற்றே திடுக்கிட வைத்தது சந்திரா நின்ற நிலை.

சந்திரா வயிற்றைப் பிடித்துக் கொண்டு தேம்பினாள். வயிற்றுக் குமட்டலோடு இரண்டு முறை வயிற்றை எக்கிக்கொண்டு அவஸ்தைப் பட்டாள். துணி துவைப்பதை நிறுத்திவிட்டுத் தங்கையருகில் வந்தாள்.

"ஏன், என்ன செய்கிறது உடம்பை?"

வயிற்றைப் பிசைந்து கொண்டு அழுதாள் சந்திரா.

"வயிற்றை வலிக்கிறதா?"

"ஆமாம்!"

"ஏன்?"

"தெரியலே. இப்போ கொஞ்ச நாட்களாகவே இப்படி அடிக்கடி வருகிறது. வயிற்றைக் குமட்டிக்கொண்டு... உடம்பெல்லாம் என்னமோ செய்கிறது."

அவர்கள் பேசிக் கொண்டிருக்கும்போதே சித்தப்பா கணேசலிங்கம் பின்கட்டுக்கு வந்தார்.

கண்களைக் கசக்கிக் கொண்டு நிற்கும் சந்திராவை வெறுப்புடன் பார்த்தவர் சாவித்திரியின் பக்கம் பார்த்து 'என்னவாம்' என்கிற மாதிரி விழியை மட்டும் உயர்த்தியபோது சாவித்திரி உதட்டைப் பிதுக்கி மௌனமாகப் பதிலளித்தாள். அசிரத்தை என்று சொல்ல முடியாத அல்லது அதைப் பிறர் உணர்ந்து கொள்ளும்படி காட்டிக் கொள்ளாத ஒருவிதமான போக்கு கணேசலிங்கத்தினுடையது. அந்தப் பெண்களின் மேல் முன்பு அவருக்கு இருந்த சிரத்தை யெல்லாம் இன்று கொஞ்சம்கூட இல்லை.

''இந்தாடா கணேசா! சிறுகச் சிறுக நான் சேர்த்த இந்த ஐந்தாயிரத்தை நீயே வச்சுக்கோ. மனுஷாளை மனுஷா நம்பாத ஜன்மங்களுக்குத்தான் கொடுக்கல் வாங்கல் பரிவர்த்தனையிலே ஒரு பத்திரப் பதிவு வேணும். நம்ம ரெண்டு பேருக்கும் அதெல்லாம் வேண்டாம். நான் உன்னைப் பூரணமாக நம்பறேன். இந்தத் தொகையை வச்சுக்கோ. இந்தா இவா ரெண்டுபேரையும் உன் பராமரிப்பிலே விடறேன். இந்தத் தொகையை வச்சுண்டு உன்னாலே இவாளுக்குச் சீரும்பேருமா கல்யாணம் நடத்திவைக்க முடியாதுங்கறது தெரியும். அதைப் பண்ணச்சொல்லியும் நான் உன்னிடம் கேட்கல்லே. இவாளுடைய கண்களைத் திறந்துவிடு போதும். இது நல்லது இது கெட்டது என்ற அளவுக்குத் தெரிஞ்சுக்க நாலு எழுத்துத் தெரியப்பண்ணிவிடு. பிறகு அவர்கள் தலையெழுத்தை அவர்களே நிர்ணயம் செய்துக்கட்டும்'' என்று தமது இரு பெண்களையும் கணேசலிங்கத்தின் கையில் நவகோடி ஒப்படைத்த போது கணேசலிங்கம் தம் ஆத்மாவைப் பரிபக்குவமாகத்தான் பாதுகாத்து வைத்துக் கொண்டிருந்தார். அதனால்தான் தம் தமையன் வயோதிகத்தில் கெஞ்சியபோது நல்ல மனத்துடனே அப்பொறுப்பை ஏற்றார். அவர்களின் பராமரிப்புக்கென்று அண்ணை கொடுத்த தொகையையும் மறுப்பேதுவும் கூறாமல் ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டியிருந்தது. காரணம் அவர் நிலையும் அப்படி.

அண்ணனுக்குக் கொடுத்த வாக்கை அவர் உயிரோடு இரண்டு வருடங்கள் இருந்த வரைதான் காப்பாற்ற முடிந்தது. அதன் பின் எல்லா சராசரி மனிதர்களைப் போலவே அவரும் அந்தச் சராசரிச் சறுக்கலில் இடறி விழுந்து கலந்து போய்விட்டார். மூத்தவள் சாவித்திரியை மட்டும் எஸ். எஸ். எல். ஸி. வரை வெறுப்புடனும் அசூயையுடனும் ஆயிரம் முணுமுணுப்புக்களிடையே ஏதோ தானத்துக்குச் செய்கிற ஓர் அசுவாரஸ்யத்துடன் படிக்க வைத்தார். அவளுடைய தங்கை சந்திராவின் படிப்பு நான்காவது பாரத்துக்கு மேல் தாண்டவில்லை.

சித்தப்பாவின் இந்த அடாத செய்கையை எண்ணிச் சாவித்திரி தனக்குள் புழுங்கும் அதே நேரத்தில் சந்திரா அதை அப்படியே வெளியே கொட்டி அவருடைய வெறுப்புக்கு ஆளாகி வந்தாள்.

''அப்பாகிட்டே நீதானே கைநீட்டி வாங்கிண்டே ஐந்தாயிரத்தை. எங்களுக்கு என்ன செஞ்சே? ஆயிரம் ஏச்சுப் பேச்சோட என்னமோ தர்மத்துக்குச் செய்யற மாதிரி பேசறயே'' என்று சந்திரா கேட்டாள். ''உன் அப்பன் மகா பணத்தைக் கொடுத்தான். அதிலே உன்னை, உன் அக்காவைப் படிக்க வச்சு, உங்களுக்குக் கல்யாணம் பண்ணி வைக்கப் பேரன் பேத்தி எடுத்து அதுகளைப் படிக்க வச்சு, காலமெல்லாம் பாடுபட்டுண்டே இருந்தா சித்தப்பா நல்லவர்னு சொல்லுவே!'' என்று நெருப்பை உமிழ்வார்.

சந்திராவின் பள்ளிப் படிப்பை நிறுத்தியவுடன் ஒரு வாரம் பிழியப் பிழிய அழுதவள் ''சித்தப்பா நீ எனக்குப் பெரிய துரோகம் செஞ்சுட்டே. உன் குணம் தெரிஞ்சுதான் நாங்களும் எவ்வளவோ சகிச்சுட்டிண்டு வரோம். பார்த்தியா, என் சித்தாடையை, எங்கே கிழிஞ்சு இருக்குன்னு? தொடைக் கிட்டே. நாலு மாசமா இதைத் தச்சுப் போட்டுக்கறேன். இப்படியெல்லாம் எவ்வளவோ உன் போக்கை அனுசரிச்சுப் போனாலும் எங்கள் மேல் அக்கறை கொண்டு கேட்க யாரும் இல்லேங்கறதுனாலே நீ என் வாழ்க்கையிலே ஒரு குறையை உண்டு பண்ணிட்டே....'' என்று அழுதாள். கணேசலிங்கம் எதற்கும் அசைந்து கொடுக்கவில்லை. நான்கைந்து நாட்கள் ரகளையுடன் சந்திரா தன் போராட்ட வேகத்தைத் தணித்துக் கொண்டு விட்டாள். பிடிவாத குணம் கொண்ட அந்த ஆணின் நிர்த்தாட்சிண்யமான மனப் போக்குடன் பலவீனமான சூழ்நிலையில் தன் பதற்றம் செயலிழந்ததை அக்காவிடம் சொல்லி அழுவாள்.

''நீ பேசாமல் இருடி. நான் சம்பாதித்து உன்னைப் படிக்க வைக்கிறேன். இன்னும் கொஞ்ச நாட்கள் பொறுத்துக் கொண்டிரு. எனக்கொரு வேலை கிடைக்கட்டும். அதன் பின் சில விஷயங்கள் குறித்து மறு சிந்தனை செய்யலாம். அதுவரையில் பொறுமையுடன் இரு'' என்பாள் சாவித்திரி. அந்த ஆறுதலில் அவள் மனம் அப்பொழுதைக்கு அடங்கும்.

கண்களைக் கசக்கிக் கொண்டு நின்றவளை ஆத்திரத்துடன் இரண்டு அதட்டல் அடக்கமான முறையில் போட்டுத் தன்னுடன் புறப்படும்படி பணித்தாள் சாவித்திரி.

''சித்தி, சந்திராவுக்கு உடம்பு சரியில்லையாம்... வயிற்றைக் குமட்டிக் கொண்டு வருகிறதாம். நான் ஆபீஸ் போகும்போது லேடி டாக்டர் ரத்தினத்திடம் அழைத்துப் போய்க் காண்பிக்கலாம்னு நினைக்கிறேன்'' என்றாள் சாவித்திரி அடக்கத்துடன்.

கணேசலிங்கத்தின் மனைவியும், குணத்தில் அவருக்கு அடுத்த சமமான வாரிசுமான பொன்னம்மாள், ''நன்றாக இருந்த உடம்புக்கு இப்ப என்ன கேடு வந்துட்டுது? நீ தினம் ஆபீசுக்குக் கூட்டிக் கொண்டு போய் அப்படியே டுடோரியல் காலேஜிலே விடறே. நீ சம்பாதிக்கிறே. கண்டதை யெல்லாம் வாங்கிக் கொடுப்பே போலிருக்கு'' என்றாள்.

இந்த அவதூற்றை எதிர்த்துப் பதில் கூற அவள் விரும்பவில்லை. இந்த வீட்டில் எந்த ஒரு சின்ன விஷயமும் மிகப் பெரிய உருவமாக உருவகப்படுத்தப்பட்டு வீடு இரண்டுபடுமளவுக்கு விரிவடையும் என்பது அவளுக்குத் தெரியாததல்ல.



"நாளைக்கு நாம் நைட் ஷோ போகணும் என்றீயே, சீக்கிரம் டிரஸ் பண்ணிக்க ஆரம்பி !"

"ஆகட்டும் நீங்களும் இப்பவே ஸ்கூட்டரை ஸ்டார்ட் பண்ண ஆரம்பியுங்கள் !"

---

சந்திராவைப் பரிசோதித்த லேடி டாக்டர் ரத்தினம் அங்கே மௌனமாக உட்கார்ந்திருக்கும் சாவித்திரியைப் பார்த்தாள்.

சாவித்திரியையும், சந்திராவையும் டாக்டர் ரத்தினத்துக்குப் பழக்கமுண்டு. அதிகப் பழக்கமொன்றும் இல்லாவிட்டாலும் பார்த்தவுடன் பெயரை நினைவுபடுத்திக் கொள்ளக் கூடிய பழக்கம்.

"நீ எங்கேயாவது 'ஜாப்'லே இருக்கியா?"

கேள்வி சாவித்திரியைப் பார்த்து வந்தபோது "ஆமாம்" என்றாள் அவள்.

"இவள்?" முகத்தை மட்டும் இலேசாகத் திருப்பிச் சந்திராவைச் சுட்டிக் காட்டிவிட்டு மீண்டும் சாவித்திரியைப் பார்த்தாள்.

"இல்லை. டியூடோரியல் காலேஜில் சேர்ந்து படிக்கிறாள்."

இரண்டு கைகளையும் இணைத்துத் தன் கழுத்தைச் சுற்றி வளையமாக்கிக் கொண்டு போய் ஏதோ சமிக்ஞையின் மூலம் கேள்வியொன்றை மிக மிக ரகசியமாகக் கேட்க முயன்றாள் லேடி டாக்டர். சாவித்திரிக்கு அது புரியவில்லை.

"நீங்கள் என்ன கேட்கிறீர்கள்?" என்றாள் குழப்பத்துடன்.

"இவளுக்கு விவாகமாகி விட்டதா?" என்றாள் டாக்டர். சாவித்திரி சிரித்துக் கொண்டே "இல்லை" என்றாள். அதற்குள் டாக்டர் ரத்தினம் சாவித்திரியின் அருகில் வந்து அவளைத் தன் தனி அறைக்கு அழைத்துக் கொண்டு சென்றாள்.

"உன் தங்கைதானே அவள்?"

"ஆமாம்."

"ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள். மூன்று மாதக் கர்ப்பவதி அவள்..." என்று சுருக்கமாகக் கூறிய டாக்டர் ரத்தினம் சாவித்திரியை அந்த அறையில் தனியாக விட்டு வேறு ஒரு நோயாளியைக் கவனிக்கப் போய்விட்டாள்.

தன் நிலையை நிதானப்படுத்திக் கொள்ள அவள் எடுத்துக் கொண்ட பிரயத்தனங்கள் ஒன்றும் பயனளிக்கவில்லை. டாக்டர் கூறிய அந்த விஷயத்தை அங்கீகரிக்கவே அவள் மனம் தடுமாறியது. ஒரு யுகப் போராட்டத்தைச் சில நிமிஷங்களில் போராடி அலுத்துக்கொண்டிருக்கும்போது சந்திரா அவளை அழைத்துக் கொண்டே உள்ளே வந்தாள்.

"போகலாமா?"

"போக வேண்டியதுதான்."

"டாக்டர் என்ன சொன்னார்?"

இந்தக் கேள்விக்குச் சாவித்திரி பதில் ஒன்றும் சொல்லாமல் சந்திராவுடன் வெளியே வந்தாள். தாள முடியாத பாரத்தைத் தலையில் சுமந்து கொண்டு நடப்பவள்போல் மௌனமாகவே நடந்தாள். சில சின்னச் சின்ன நிகழ்ச்சிகளின் தெறிப்புக்கள் மனமெங்கிலும் சிதறிக் கொண்டு பதறின. ஒரு நாளைக்குச் சந்திரா கோடிக் கடையில் கண்ணாடி ஜாடிக்குள் வைத்திருந்த இலந்தை வடாம் வேண்டும் என்று விரும்பி வாங்கித் தின்றது. புளிக்கும் மாங்காயை வாங்கித் தின்றது. ஒரு நாள் வீட்டிலிருந்து வரும்போது புளி உருண்டையைத் திருட்டுத்தனமாகக் காகிதத்தில் சுருட்டிக்கொண்டு வந்ததைக் கண்டும் காணாதது மாதிரி இருந்துவிட்டது. காலையில் எழுந்திருக்கும்போதே ஒரு வித மயக்கத்துடன் சுருண்டு சுருண்டு படுப்பது — கர்ப்பிணிப் பெண்களுக்குத்தான் இந்த மாதிரி மசக்கையெல்லாம் உண்டாகும் என்பது அரை குறையாக அவள் அறிந்ததுதான். ஆனால் தங்கையைப் பற்றி இந்த எண்ணம் எழ முகாந்திரமே இல்லையே.

"அக்கா!"

சந்திரா அழைத்தது அவள் செவிகளில் விழவில்லை. வெளி இரைச்சல், தெருவில் போகும் ஊர்திகளின் நாராசம் இவைகளோடு டாக்டர் ரத்தினம் தன் தங்கையைப் பற்றிக் கூறிய அதிர்ச்சி தரும் உண்மையின் ஒலி இவை அனைத்தும் ஒரே இடத்தில் முட்டி மோதும்போது அங்கே இன்னொரு ஊடுருவல் நிகழ வழி எங்கே இருக்கப் போகிறது?

"என் டியூட்டோரியல் காலேஜ் வந்தாச்சு. நான் போகட்டுமா?"

சந்திரா சாவித்திரியின் கரத்தைப் பிடித்து நிறுத்தினாள்.

அலை மோதும் வெளி ஆரவாரத்தினின்று தன் கண்கள், கவனம் இரண்டையும் திருப்பியவள், சோர்ந்த முகத்துடன் தங்கையைத் திரும்பிப் பார்த்தாள்.

"நான் போகட்டுமா?"

சாவித்திரி சற்று நேரம் மௌனமாக இருந்து விட்டு, "நீ காலேஜுக்குப் போக வேண்டாம். என்னுடன் வா" என்றாள்.

"அக்கா!"

"வா என்னுடன்" — தமக்கையின் தொனி மிகக் கடுமையுடன் வந்தது.

காலை மணி ஒன்பதுக்கு மேல் இருக்கும். இன்னும் ஒன்பதரை ஆகவில்லை. சாவித்திரிக்கு மவுண்ட் ரோட்டில் உள்ள ஒரு மோட்டார்த் தொழிற்சாலையின் தலைமைக் கணக்குப் பிரிவில் தாற்காலிக குமாஸ்தா வேலை. அவள் அங்கே சேர்ந்து ஆறு மாதங்கள் இருக்கும். சம்பளம் சரியாக நூற்று அறுபது ரூபாய். வேலை நிரந்தரமாக்கப்பட்டால் இன்னும் சேர்ந்து வரும். அந்த வேலை நிரந்தரமாவதற்குள் அவள் இன்னும் எத்தனையோ கண்டங்களைத் தாண்டியாக வேண்டும். எந்த விதமான அவசரமானாலும் அவள் லீவு எடுக்கக் கூடாது.

# தூரத் தேயிலைத் தூள்களிலே தனிப்பெருமை வாய்ந்தது

## லிப்டன்ஸ் ஹிமாலயன்

## கோல்டன் டஸ்ட் டீ

குணமும், சுவையும் நிறைந்த பொன்னிறமுள்ள டீ யை வெகு சீக்கிரத்தில் இந்தத் தேயிலையைக் கொண்டு அதிகமான கப்புகளைப் பெறுவீர்கள். இந்த ஒப்புயர்வற்ற டீ யை நீங்களே பருகிப் பாருங்கள்—உங்கள் விருந்தினர்களுக்கும் கொடுங்கள். நிச்சயமாக இதை ரசித்து நீங்கள் மகிழுவீர்கள் — ஆம்! — அப்படியே உங்கள் விருந்தினர்களும்கூட! தூரத் தேயிலைத் தூள்களில் லிப்டனின் ஹிமாலயன் கோல்டன் டஸ்ட் தனிப் பெருமை வாய்ந்தது தன்னிகரற்றது என்பது உண்மை.




லிப்டன் என்றாலே நல்ல டீ








# இப்போது! அதிக லாபமடைய
# கால்கேட் டென்டல் க்ரீம்
# ஸூப்பர் ஸைஸ்

COLGATE DENTAL CREAM SUPER SIZE

COLGATE DENTAL CREAM SUPER SIZE



**கால்கேட் மூலம், வாய் - நாற்றத்தைத் தடுத்து நாள்முழுதும் பற்சிதைவை எதிர்த்திடுங்கள்!**

ஏனெனில்:
ஒரே தேய்ப்பில் கால்கேட் டென்டல் க்ரீம் வாய் நாற்றத்தையும், பற்சிதைவை-விளைவிக்கும் கிருமிகளையும் 80 சத விகிதம் வரை அகற்றுகிறது.

கால்கேட் 10க்கு 7 பேர்களில் வாய் நாற்றத்தை உடனடியாக அகற்றுகிறதென்றும், உணவு உட்கொண்ட உடனேயே கால்கேட் முறையில் பற்களைத் துலக்குவதால் இதுவரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பேரளவில் ஏராளமானவர்களுக்கு பற்சிதைவு தடுக்கப்படுகிறது என்றும் விஞ்ஞான சோதனைகள் நிரூபித்துள்ளன!

அதன் விசேஷமிக்க பெப்பர்மின்ட் சுவையே தனி. கால்கேட் டென்டல் க்ரீம் கொண்டு குழந்தைகள் தவறாது பல் துலக்க விரும்புவதிலும் வியப்பென்ன!

தூய்மையான இன் மூச்சோடு வெண்மையான பற்களும் பெறவே...மற்றெந்தப் பற்பசையையும் விட உலகிலே அதிக மக்கள் கால்கேட் பற்பசையையே வாங்குகிறார்கள்.




நீங்கள் பற்பொடியை விரும்பினால், இப்பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத்பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பா பல மாதங்களுக்கு வரும்.

CC-Φ 33 TM

"இப்போ நான் உன்னுடன் எதுக்கு வரேன்?" என்று குழப்பத்துடன் சந்திரா கேட்டாள்.

சாவித்திரி இதற்கும் பதில் சொல்லவில்லை. அவள் வழக்கமாக பஸ்ஸுக்கு வந்து நிற்குமிடத்தில் நின்றாள். பஸ் வந்தது. சந்திராவை முன்னே ஏறவிட்டு விட்டுத் தானும் ஏறிக் கொண்டாள்.

மவுண்ட் ரோட் 'ஸ்டாப்' ஒன்றில் பஸ் நின்றவுடன் சந்திராவை முன்னே இறங்கச் செய்துவிட்டு அவள் பின்னே இறங்கினாள். குறுக்கும் நெடுக்குமாகக் காலை அவசரத்தில் செல்லும் ஊர்திகளைக் கடந்து எதிர்ப்புறம் வந்தாள்.

சந்திராவுக்குச் சாவித்திரியின் செய்கை புதிராக இருந்தது.

தன் அலுவலகத்தினுள் தங்கையுடன் நுழைந்த சாவித்திரி கண்ணாடிக் கதவு வழியாக வெளியே நிற்கும் தங்கையைச் சுட்டிக் காட்டித் தன் பிரிவுத் தலைவரிடம் லீவு கேட்டு வாங்கிக் கொண்டு வெளியே வந்தாள். பிறகு ஒன்றும் பேசவில்லை.

திருவல்லிக்கேணிக் கடற்கரைக்குச் சென்று புதர் ஓரமாக உள்ள நிழலில் தங்கையுடன் வந்து அமர்ந்தாள். முதுகுப்புறம் கொஞ்சம் தள்ளினாற்போல நடைபாதை. அதற்கு அப்பால் நெடுஞ்சாலை.

காலை நேரத்தில் இந்த விதக் குழப்பமான மனநிலையோடு இந்தக் கடற்கரைக்கு வந்தது இதுவே முதல் தடவை!

கண்களை எதிரே மின்னும் கடல் மேல் லயிக்க விட்டிருந்த சாவித்திரி தங்கையைப் பார்த்தாள். அவள் சந்திராவைப் பார்த்த போது அவள் முழங்கால் முட்டில் தாடையைப் பதித்து விரலால் மணலில் எதையோ எழுதி எழுதிக் கலைத்துக் கொண்டிருந்தாள்.

"நீ கருவுற்றிருப்பதாக டாக்டர் சொன்னார். இன்று நாம் இருக்கிற நிலைமை உனக்குத் தெரிந்ததுதான். புரிந்ததுதான். இன்னொருவர் வந்து புரியவைக்க வேண்டுமென்பதில்லை. சித்தப்பா, சித்தி இவர்களுடைய மறை பாவங்கள், சித்தப்பாவின் அலாதியான அசட்டை இவைகளுக்கு நடுவே நாம் படுகிற அவதி, அவமதிப்பு எல்லாம் உனக்கும்தான் தெரியும்....," துயரை அடக்கிக் கொண்டு சாவித்திரி பேசிக்கொண்டு போனாள். பிறகு சற்று நேரம் அமைதியுடன் பேச்சின் வேகத்தை நிதானப்படுத்திக் கொண்டவள், "...உன்னுடைய இந்த நிலைக்குக் காரணமானவன் யார், சொல்ல முடியுமா?" என்று நேரிடையான கேள்விக்கு வந்தாள்.

தனது கேள்வியை ஒரு பதற்றமானதாக ஏற்காத சந்திராவின் போக்கு அவளை அதிர்வின் பிடிக்குள் தள்ளி விட்டது.

"தெரியும்" என்றாள் சந்திரா கொஞ்சம் வெட்கம், பயம் கலந்த குரலில்.

"யார் அந்தப் புண்ணியவான்? அப்படி அவனிடம் மையல் கொண்டு உன்னையே இழக்கக்கூடிய அளவுக்கு அவனிடம் என்ன கண்டாய்?" துயரத்தினிடையே சாவித்திரி சிரித்துக் கொண்டாள்.

இந்தக் கேள்விக்குச் சந்திரா பதில் ஏதும் சொல்லவில்லை. இதைப் பார்த்த சாவித்திரி நேரிடையான கேள்வி மூலம் பதில் வரவழைப்பதை விடப் பதில் ரூபமான கேள்விகளில் தேவையான விஷயங்களை மெதுவாகப் பெறலாம் என்ற எண்ணத்துடன், "உன்னுடன் டியூட்டோரியல் காலேஜில் படிப்பவனா?" என்றாள்.

"இல்லை" என்று தலையசைத்தாள்.

"ஞாயிற்றுக்கிழமைகளிலும் மற்ற சில நாட்களிலும் நான் ஆபீஸ் விட்டு வீட்டுக்கு வருமுன் கடற்கரைக்குப் போய்விடுவாயே, அப்படிப் போனபோது ஏற்பட்ட சிநேகமா?"

"ஆமாம்."

"எங்காவது வேலை செய்கிறானா? அல்லது ஊர் சுற்றும் ஊதாரியா? அவனைப் பற்றிய விவரம் ஏதேனும் முழுசாகத் தெரியுமா? இல்லை அரை குறையாகத் தெரிந்ததுதானா? பெயர் என்ன?"

"முழு விவரம் தெரியாது. சொல்வதாகச் சொல்லியிருக்கிறார். 'மாதவன்' என்று பெயர்."

"வேலை?"

"ஆட்டோ ரிக்ஷா ஓட்டுகிறார்."

சாவித்திரி திடுக்கிட்டாள்.

"நீ சொன்ன இந்த விவரத்தைக் கொண்டு அவன் இருப்பிடத்தை இந்தச் சென்னை ஜன சமுத்திரத்தில் கண்டுபிடித்து விட முடியுமா? அறிவு கெட்டவளே! அவன் எங்கே குடியிருக்கிறான் என்றாவது தெரியுமா?"

"தெரியும்."

"எங்கே?"

"மயிலாப்பூர் ஆடம் தெரு சந்திலே.."

## மீன்களுக்குப் பாட்டில்!



இரண்டு விஞ்ஞானிகள் 'மனிதக் குழந்தைகளுக்குக் கொடுப்பது போல் திரவ உணவுகளை ஃபீடிங் பாட்டில்களில் மீன்களுக்குக் கொடுக்க முடியுமா?' என்று ஆராய்ந்தார்கள். திரவ உணவைப் பாட்டில்களில் ஊற்றி மீன்கள் உறிஞ்சுவதற்கு வசதியாக ரப்பர் முனையுள்ள மூடி போட்டார்கள். இரண்டு மணிக்கொரு தடவை அந்தப் பாட்டில் உணவை மீன்களுக்குக் கொடுத்தார்கள். அவர்களுடைய நம்பிக்கை வீண் போகவில்லை. பாட்டில் உணவைச் சாப்பிட்ட மீன்கள் மற்ற மீன்களை விட விரைவாக வளர்ச்சி பெற்றுக் கொழு கொழுவென்று ஆகிவிட்டன.

ஆதாரம்: 'ஸயன்ஸ் டுடே'

தகவல்: சரோஜா ராமச்சந்திரன்

''வீடு தெரியுமா?''

''தெரியாது. அவர் சொன்ன விவரம் இதுதான். அவன் வீட்டுக்கு முன்னால் ஒரு குப்பைத் தொட்டி உண்டாம். மறு பக்கம் ஸ்டார் லாண்டிரியாம். அந்தச் சந்தில் வந்தால் வீடு உள் அடக்கமாக இருக்குமாம்.''

''அவனை எப்படிப் பழக்கம்?''

''டியூடோரியல் காலேஜுக்கு வழக்கமாகப் பெண் ஒருத்தியைத் தன் வண்டியில் நான் போகிற நேரத்துக்குக் கொண்டு வந்து விடுவார்.''

காதல் எப்படி வளர்ந்திருக்கிறது என்பதை இதைக் கொண்டு யூகிப்பது சாவித்திரிக்குக் கடினமாக இல்லை.

''அவனுக்கு உன்னுடைய இந்த நிலை தெரியுமா?''

சந்திரா முதன் முறையாக மௌனமாக அழுதாள்.

''தெரியாது.''

உயரமாக எம்பிக் குதித்த அலையொன்றைத் தூரத்தில் தற்செயலாகப் பார்த்தாள் சாவித்திரி.

''தெரியாதா?''

''தெரியாது.''

''ஏன், நீ சொல்லவில்லையா?''

''சொல்ல வேண்டும் என்றுதான் பார்க்கிறேன். அவரைக் கொஞ்ச நாட்களாகக் காணோம். தினம் அந்த ஆட்டோவில் வரும் பெண் இப்பொழுதெல்லாம் வேறு ஆட்டோவில் வருகிறாள். அவளைக் கேட்டதற்கு, 'தெரியாது, திடீரென்று நின்றுவிட்டதால் வேறு ஆட்டோவை நிரந்தரமாக அமர்த்திக் கொண்டு விட்டேன்' என்று சொல்லி விட்டாள்.''

''அதன் பின் அவனைப் பார்க்க நீ முயற்சி செய்யவேயில்லையா?''

''இல்லை.''

''ஏன்?''

''எனக்குச் சொல்லத் தெரியவில்லை.''

''இப்பொழுது உன் நிலை உனக்குப் புரிகிறதல்லவா? இனி என்ன செய்ய வேண்டும் என்று தெரிகிறதா? இப்பொழுது நீ எந்த அளவு ஓர் உச்ச கட்டத்துக்கு வந்திருக்கிறாய் என்பதை உணரவாவது திராணி இருக்கிறதா? கொஞ்சம் நினைத்துப் பார், இன்று நம்முடைய நிலைமையை. ஏதோ கடவுள் புண்ணியத்தில் எனக்கு உத்தியோகம் கிடைத்ததோ பிழைத்தோம். இல்லையென்றால்?''

சகோதரிகள் இப்போது நடைபாதையில் நடந்து வந்து கொண்டிருந்தனர். பேசிக் கொண்டே வந்த சாவித்திரி திடீரென்று மௌனமாக நடந்தாள். அவளுடைய பார்வை குறுக்கும் நெடுக்குமாக ஓடும் வாகனங்களின் மேல் அலைந்து கொண்டிருந்தது.

''அவர் என்மீது அளவுக்கு மீறியே அன்பாக இருந்தார். என்னைக் காணும் ஒவ்வொரு தினமும் ஒவ்வொரு புது நாளாகத் தோன்றுகிறதாகச் சொல்லுவார்.'' — சந்திரா ஒருவித லயிப்போடு ஆரம்பித்தாள்.

பேதைமை நிறைந்த தங்கையின் வார்த்தைகளைக் காதில் வாங்கிக் கொண்டே நடந்தாள் சாவித்திரி.

''அவர் ஓட்டும் ஆட்டோ அவருக்குச் சொந்தம் இல்லையாம். வாடகையாம். தினம் ஒரு தொகை அதன் சொந்தக்காரருக்குக் கொடுத்துவிட்டு அதற்கு மேல் வருவதை இவர் எடுத்துக் கொள்வாராம். கூடிய சீக்கிரமே சொந்தத்தில் ஒரு ஆட்டோ வாங்கி விடுவேன் என்றார். அது விஷயமாகத் தான் பணத்துக்கு அலைந்து கொண்டிருப்பார் என்று நினைக்கிறேன். அதுதான் அவரைப் பார்க்க முடியவில்லை. எப்படியும் அவரைச் சந்திப்பேன். என் நிலை அவருக்குத் தெரியாது. அடுத்த முறை சந்திக்கும்போது நானே சொல்லுவேன். அவர் எனக்கொரு வழி சொல்லாமல் இருக்க மாட்டார். அவரைப் பார்த்தால் ஏமாற்றுக்காரராகத் தோன்றவில்லை. அந்த நம்பிக்கை எனக்கு உண்டு....'' என்றாள் சந்திரா. அவள் வார்த்தைகளில் அவள் தன் நினைவில் வேரூன்றி வைத்துக் கொண்டுள்ள நம்பிக்கை சாவித்திரிக்கு எரிச்சலூட்டுவதாக இருந்தது. கடுகடுப்புடன் தங்கையைத் திரும்பிப் பார்த்தாள்.

''நீ அவரைச் சந்தித்து எத்தனை நாட்கள் ஆகிறது ?''

''கிட்டத்தட்ட ஒன்றரை மாதமாகப் போகிறது.''

''நீ இன்னும் அவர் வருவார் என்ற நம்பிக்கையுடன் எனக்குக்கூடத் தெரியாமல் கடற்கரைக்கு வருகிறாய். காத்திருந்து, காத்திருந்து, பின் ஏமாற்றத்துடன் இந்த ஒன்றரை மாதமாக வீடு திரும்புகிறாய். உன் உள்ளத்துப் பயத்தை மிக மிக ரகசியத்துடன் மூடி மூடி மறைத்து உனக்குள் நீ சொல்லிக் கொள்ளும் போலி சமாதானம் போலவே எனக்கும் சொல்லுகிறாய். போலித்தனமாக அதை நீ நம்புவது மாதிரியே நானும் நம்ப வேண்டுமென்று நினைக்கிறாய், இல்லையா ? சமாதானமும், நம்பிக்கையும் என்னைவிட உனக்குத்தான் அதிகம் வேண்டும். பாதிக்கப்பட்டவள் நீ. உன்னுடைய பாதிப்பால் நான் இன்று பதைபதைக்கிறேன். வெறும் சமாதானங்களால் மட்டும் நீ திருப்தி அடைவதாக இருந்தால் இன்று ஆயிரம் சமாதானங்களை என்னால் சொல்ல முடியும். ஆனால் அவை உனக்குப் பயன்படாது. இன்று இல்லாவிட்டால் நாளை, இந்த விஷயம் சித்தப்பாவுக்குத் தெரியவரும். தெரிய வேண்டும். அவரிடம் இதை எக்காரணத்தைக் கொண்டும் மறைக்க முடியாது. மறைக்கக் கூடாது. அதற்கு நான் சம்மதிக்கவும் மாட்டேன். அப்படி அவருக்குத் தெரியவரும்போது ஏற்படும், ஏற்படப் போகும் விளைவுகளுக்கு ஈடு கொடுக்க நீ தயாராக இருக்க வேண்டும். மற்ற நேரங்களில் அவரிடம் எதிர்த்துப் பேசுவது போல் இவ்விஷயத்திலும் பேசிவிட்டு மூலையில் போய் அழுதுகொண்டு உட்கார்ந்துவிட முடியாது.''

''நீ சித்தப்பாவிடம் சொல்லிவிடப் போகிறாயா ?'' — சந்திரா கலவரம் சூழ்ந்த பார்வையோடு சாவித்திரியைப் பார்த்துக் கேட்டாள்.

''சொல்லத்தான் வேண்டும். சொல்லாமல் இருக்கக்கூடாது. இதை மறைக்கவோ மேலும் தாமதப்படுத்திச் சொல்லவோ நான் உடன்பட மாட்டேன். அவர் பெரியவர். நம்மை மதிக்கிறாரோ, நம் மேல் அக்கறையுடன் இருக்கிறாரோ இல்லையோ அது வேறு விஷயம். செய்துவிட்ட பெரிய

நவற்றை அவரிடம் சொல்லாமல் மறைப்பது விவேகமில்லாத செயல்.''

இதற்குள் பஸ் ஸ்டாண்டு வந்துவிட்டது. சொல்லிவைத்தாற்போல் பஸ்ஸும் வந்தது. இருவரும் ஏறிக் கொண்டனர்.

தயங்கித் தயங்கி விஷயத்தைச் சித்தப்பாவிடம் சொன்ன போது அவள் எதிர்பார்த்த பிரளயம் மெதுவாக உருப்பெறத் தொடங்கியது. சாவித்திரி சொல்லிக் கொண்டிருக்கும் போது வெளியில் சென்றிருந்த பொன்னம்மாள் வந்துவிடவே, 'இரண்டு பெரிய எதிர்ப்பு முனைகளுக்கு நடுவே நாம் எப்படிச் சமாளிக்கப் போகிறோம்? இது நம்மை எங்கே கொண்டு போய் நிறுத்தப் போகிறதோ ?' என்று நடுங்கினாள்.

சாவித்திரி சொல்லி முடிக்கும் வரையில் பொறுமையுடன் கேட்டவண்ணம் இருந்த சித்தப்பா கணேசலிங்கம் சந்திரா படுத்திருந்த அறையில் வந்து நின்றார்.

''சந்திரா, எழுந்திரு !''

''..............''

''உன்னைத்தான், ஏ சந்திரா! நீ எழுந்திரு.''

முகத்தில் விழுந்து கிடந்த மயிரை இடது உள்ளங்கையினால் விலக்கிக் கொண்டே எழுந்து உட்கார்ந்தாள் சந்திரா.

''நீ இனிமேல் இந்த வீட்டில் இருக்கக் கூடாது......!''

''சித்தப்பா.....!''

பின்னாலிருந்து சாவித்திரி சத்தமிட்டாள். அதை அவர் காதில் வாங்கிக்கொண்டதாகத் தெரியவில்லை.

''உனக்கு இனி இந்த வீட்டில் இடமில்லை. நடத்தை கெட்ட நாயையெல்லாம் கட்டிக் காக்க நான் தயாரில்லை.''

''சித்தப்பா...! கொஞ்சம் நிதானியுங்கள். அவளோட இன்றைய பரிதாப நிலைக்கு இன்னிக்குப் பரிவு வேணும். அவள் செய்தது சரியானதுதான்னு யாரும் வாதாட வரமாட்டா. நானும் அவள் செஞ்சது சரின்னு சொல்லலை. தப்புதான். ரொம்ப மோசமானதுதான். அதை நான் மறுக்கவோ, மூடி மறைக்கவோ தயாரில்லை. அதுக்காக அவளைத் தனியே வெளியே அனுப்பறதையோ இங்கேயிருந்து விரட்டறதையோ நான் ஏற்றுக் கொள்ள மாட்டேன். அவள் செய்த தவறு என்னவோ பெரிசுதான். ஆனால் அவளை வீட்டை விட்டு விரட்டறது சரியான தண்டனையாகாது. அதுக்குப் பரிகாரமும் ஆகாது.''—சாவித்திரி பேசிக் கொண்டிருந்த போது கணேசலிங்கம் அந்தச் சின்ன வீட்டில் இடிந்து போன மாதிரி உட்கார்ந்திருந்தார்.





## கையெழுத்தின் தலையெழுத்து !

பிரமுகர்கள், அரசியல்வாதிகள், நடிகர்கள் ஆகியோர்களின் கையெழுத்துக்களைச் சேகரிப்பது இன்று பலரது முக்கியமான பொழுது போக்காக இருக்கிறது. அமெரிக்காவில் பிரபலஸ்தர்களின் கையெழுத்துக்களைச் சேகரித்து விற்கும் நிறுவனங்கள் பல இருக்கின்றன. திருமதி மேரி பெஞ்சமின் என்ற பெண்மணிக்குச் சொந்தமான ஒரு நிறுவனத்தில் அபூர்வமான பல கையெழுத்துக்கள் சேர்த்து வைக்கப்பட்டுள்ளன. அவைகளின் மதிப்பு இரண்டு கோடி ரூபாயாம்! அங்கே நெப்போலியன், ஹிட்லர், ஷேக்ஸ்பியர், கீட்ஸ், டான்டே, முதலாம் ஹென்ரி அரசன் எட்கர் ஆலன்போ, நேருஜி, காந்திஜி இவர்களின் கையெழுத்துக்களெல்லாம் இருக்கின்றன. ஷேக்ஸ்பியரின் கையெழுத்துத்தான் அனைத்திலும் மதிப்பு மிக்கது ஏழரை லட்சம் ரூபாய்!

ஆதாரம்: 'டெக்கான் ஹெரால்ட்' தகவல்: சரோஜாராமச்சந்திரன்

---

அதோடு அவர் மௌனம் சாவித்திரியும் சேர்ந்து வெளியேற அங்கீகாரம் அளிப்பது போலவே தோன்றியது. உள்கட்டில் சித்தி பொரிந்து தள்ளிக் கொண்டிருந்தாள். ரொம்பக் கீழ்த்தரமான வார்த்தைகளால் பொதுவான குற்றச்சாட்டு மாதிரி இல்லாமலும், நேரிடையாகத் தாக்காமலும் இலை மறை காயாக இரைந்து கொண்டிருந்தாள். காது கொடுத்துக் கேட்கச் சகியாமல் சாவித்திரி சிறிது நேரம் மௌனமாக இருந்தாள். உள்கட்டில் சத்தமிடும் சித்திக்குப் பதில் சொல்லச் சந்திரா முற்படும்போதெல்லாம் கண்களால் உருட்டி மிரட்டித் தடை போட்டு வந்தாள் சாவித்திரி.

அந்த வீட்டைவிட்டு வெளியேறுவதை விட வேறு வழியில்லை என்றதொரு திட்ட வட்டமான சூழ்நிலை விரைவிலே உருப் பெற்றுவிட்ட மாதிரி தோன்றியது சித்தியின் செய்கை. உள்ளே பெட்டியில் இருந்த புடவை, துணிமணிகள் எல்லாவற்றையும் எடுத்துவந்து கூடத்தில் குவித்தாள். கொடியில் இருந்தது, கூடையில் இருந்தது என்று இரண்டு பேருடையதும் வந்து விழுந்தன.

உள் அறையில் உட்கார்ந்திருந்த சந்திரா வெளியே வந்தாள். பரபரப்புடன் எல்லா உடைமைகளையும் தன் பெட்டியில் எடுத்து வைத்துக் கொண்டாள். அதை அவள் படபடப்புடன் செய்வது போல் தோன்றினாலும் மிகுந்த நிதானத்துடன் தன்னுடையதையும், சாவித்திரியுடையதையும் எடுத்து வைத்துக் கொண்ட விதம் பயணம் புறப்படும் மனப் பக்குவம் போலவே தோன்றியது.

வீட்டு வாசலில் நான்கைந்து அயலார் நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தனர். யாரும் உள்ளே வரவில்லை.

''வாடி.'' — சாவித்திரியை வெடுக்கெனப் பிடித்து இழுத்தாள் சந்திரா. ''எப்போ பார்த்தாலும் பழி வாங்கற எண்ணத்தோடும் எப்படியாவது துரத்தியடிக்கணும் என்றும் எ ன் னை மி ட் டு க் கொண்டேயிருக்கிறவா கிட்டே நீ எத்தனை நாளைக்கு நிம்மதியாக இருக்க முடியும்? வா, போகலாம்.''

''போ... போ... நீங்க போறதுனாலே இந்த வீடு ஒண்ணும் குடிமுழுகிப் போயிடாது. ஒருத்தி சம்பாதிக்கிறா. ஒருத்தி பெரிய படிப்பு படிக்கிறா. அப்புறம் என்ன குறைச்சல்?—''பொன்னம்மாள் மூன்றும் மனுஷியின் இடத்தில் நின்று கோபத்துடன் கேலி செய்தாள்.

LDIலை மணி ஐந்துக்குமேல் ஆகிவிட்டது.

நிராதரவான நிலையில் சாவித்திரியும் சந்திராவும் வெளியே பிடித்துத் தள்ளாத குறையாகத் தள்ளப்பட்டனர். பரபரப்பும் எதிலும் ஒட்டாமலும் விரைவாகச் சென்று மறையும் எத்தனையோ தெரியாத முகங்களுக்கு நடுவே குறிக்கோள் ஏதுமின்றி மௌனமாகச் சென்று கொண்டிருந்தனர். இந்த மாலை மறையுமுன் அவர்கள் எங்காவது ஓர் இடத்தைத் தேடியாக வேண்டுமென்ற துடிப்பு இருவரிடமுமே இருந்தது. தனக்குத் தெரிந்த தன்னோடு வேலை செய்யும் இரண்டு மூன்று சிநேகிதிகளை நினைவுகூர்ந்தாள் சாவித்திரி. ஓரளவு அவர்கள் நிலைமை அவளுக்குத் தெரியுமாதலால் அவர்கள் உதவியை நாடிப் போகும் எண்ணத்தை அவள் விட்டு விட்டாள்.

ஒன்றும் தோன்றாமல் நடந்து கொண்டேயிருந்த சாவித்திரி, திடீரென்று ''சந்திரா, மாதவன் வீடு ஆடம் தெரு என்றுதானே சொன்னே?'' — பலத்த சிந்தனைக்குப்பின் ஏதோ முடிவுக்கு வந்தவளாகக் கேட்டாள்.

''ஆமாம்.''

''சரி வா, அங்கே போகலாம். மாதவனிடம் உன்னுடைய தாய்மையை விளக்கி உன்னை ஏற்றுக் கொள்ளும்படி கேள். நீ சொல்லுவது போல் அவர் நல்லவராக இருந்து உன் மேல் அக்கறை கொண்டவராகவும், ஏமாற்றும் எண்ணம் இல்லாதவராகவும் இருந்தால் உன்னை ஏற்றுக் கொள்ளட்டும். அதன்பின் என்னைப் பற்றி நான் முடிவு செய்து கொள்கிறேன். முதலில் உன்னுடைய பிரச்னை தீரவேண்டும் தெரிகிறதா? என்ன சொல்றே ?''

''சரி சாவித்திரி, உன் விருப்பம் எதுவோ, உன் முடிவு எதுவோ அதுக்குக் கட்டுப்பட நான் தயார்.''

சந்திரா மௌனமாக நடந்தாள்.

பாதி தூரத்தை நடையிலும் பாதி தூரத்தை ஆட்டோவிலுமாகக் கடந்து மயிலாப்பூர் ஆடம் தெருவை அடைந்து சந்திரா சொன்ன அடையாளத்தைக் கொண்டு அந்தச் சந்தையும் கண்டுபிடித்து வீட்டை அணுகும் போது நன்றாக இருட்டி விட்டது. சந்தின் திருப்பத்தில் எரிந்து கொண்டிருந்த மின்சார விளக்கின் ஒளியில் மிக மோசமான சூழ்நிலையில் இதில் மனிதர்கள் குடியிருப்பார்களா என்ற சந்தேகத்தைத் தரும் விதத்தில் இருந்த ஒரு வீட்டின் முன் வந்து நின்றபோது சாவித்திரியின் நெஞ்சம் தாங்கொணாத வேதனையுடன் துடித்தது.

''இதுதானா ?''

''ஆமாம்.''

''இதில்தான் அவர் இருப்பார் என்று எப்படித் தெரியும்? வீடு பூட்டிக் கிடக்கிறதே !''

வீட்டைச் சுற்றிலும் சாக்கடையின் துர்நாற்றம். கழிபொருள்களின் வயிற்றைக் குமட்டும் நாற்றம். காய்ந்த எச்சில் இலைகள் ஏராளமாக ஒதுங்கியிருந்தன. இரண்டு வீடுகளின் சுவர்களுக்கு நடுவில் உள் அடங்கிய சந்து விடாகையால் அந்த வீடுகளின் ஜன்னல் வழியே எறியப்படும் குப்பைகள்தான் ஏராளமாக வழியை அடைத்துக்கொண்டு கிடந்தன.

''யாரைத் தேடறீங்க?''

வீட்டின் ஜன்னலைத் திறந்து கொண்டு ஒரு குரல் கேட்டது.

''இந்த வீட்டில்தானே மாதவன் என்பவர் இருக்கிறார் ?''

''ஆமாம்! இருந்தான். ஆனால் இப்போ அவன் இங்கேயில்லே. ஜெயில்லே இருக்கான். அவனோட அம்மா மணியம்மா இருக்காங்கோ......!''

''மாதவன் ஜெயில்லே இருக்காரா?''— சாவித்திரி திடுக்கிட்டவளாகக் கேட்டாள்.

''ஆமாம்! அவன் ஓட்டிக்கிட்டு இருந்த வாடகை ஆட்டோவைத் திருச்சியிலே கொண்டு போய் வித்துப்பிட்டுப் போலீஸிலே மாட்டிக்கிட்டான். கேஸ் நடந்து ஒரு வருஷம் உள்ளாரப் போட்டுட்டாங்க. தறுதலே நாய் அவன் ...''

''நீங்க யாரு ?'' — கேள்வி இன்னொரு எதிர் ஜன்னலிலிருந்து வந்தது.

''அவங்களைப் பார்க்க வந்திருக்கோம். தெரிஞ்சவங்க.''

''அவனோட வயசான அம்மாதான் இருக்காங்க. வெளியே கௌரி ஹோட்டலுக்குப் போயிருப்பாங்க. மாவு அரைச்சுக் கொடுத்துட்டு எட்டு மணிக்கு வருவாங்க.''

எதிர் எதிரே இருந்த இரண்டு ஜன்னல்களும் மூடிக் கொண்டு விட்டன. அவர்களுடைய அக்கறை கேள்வி பதிலோடு சரி.

''இப்போ நான் என்னடி செய்யறது ? எனக்கு ஒண்ணுமே புரியலையே. எதையுமே என்னால் நினைக்க முடியலையே. அவர் ஜெயிலுக்குப் போயிட்டாராமே. இவங்க சொல்றதைப் பார்த்தால்....'' — சந்திரா அழுதாள்.

''அவசரப்பட்டு எந்த முடிவுக்கும் வராதே. அவருடைய தாயாராகிலும் இருக்கிறாரே என்று நான் சந்தோஷப்பட்டுக் கொண்டிருக்கிறேன். தைரியத்தைக் கைவிடாதே. அவருடைய தாயார் வருவார். வந்தவுடன் தைரியமாகப் பேசு. ஆத்திரப்படாமல் அமைதியான முறையிலே உன் நிலையை எடுத்துச் சொல்லு. அவர் ஏதாவது ஆத்திரத்தில் அல்லது கோபத்தில் சத்தம் போட்டால் எதிர்த்துப் பேசாதே. இழிவான முறையில் ஏதாவது திட்டினால் என்று வைத்துக் கொள். அப்பொழுதும் பேசாதே.

''நீயே முதலில் பேசு. நான் அருகில் நிற்கிறேன். வெட்கப்படாமே எல்லாத்தையும் எடுத்துச் சொல். அவருடைய மறுமொழி, மனோபாவம், பதில்கள், இவைகளைப் பார்த்துக் கொண்டு நான் தலையிடுகிறேன். என்ன?''

சந்திரா தலையை ஆட்டினாள்.

சாவித்திரியின் கண்கள் கரகரவென்று கண்ணீரை உதிர்த்தன. தங்கைக்காக மட்டுமல்லாமல் தன் கீழ்நிலை வாழ்க்கையையும் எண்ணித்தான் கண்ணீர் உதிர்த்தாள்.

தள்ளாடித் தள்ளாடி ஓர் உருவம் சந்தில் திரும்பி வந்தது.

''அதோ அவர்தான் போலிருக்கிறது !''

''யாரு....?'' கேட்டுக் கொண்டே நெருங்கி வந்தாள் மணியம்மாள்.

பதிலேதும் சொல்லாமல் இருவரும் வழி விட்டு நின்றனர். தட்டுத் தடுமாறிக் கொண்டே வந்த அந்த வயதானவள் நிலைப்படியோரமாக இருந்த மின்சார விளக்கின் ஸ்விச்சைப் போட்டாள். ரொம்ப மங்கலான ஒளியைப் பரப்பும் பதினைந்து வாட்ஸ் மின்சார பல்பு ஒன்று எரியத் தொடங்கியது. மங்கலான ஒளியில் அவர்களைப் பார்த்தாள் அந்த வயதானவள். அறுபதைத் தாண்டிக் கொண்டிருக்கிற வயோதிகம். ஒடிசலான தேகம். வேலையிலிருந்து திரும்புகிற களைப்பு முகத்திலோ உடம்பிலோ காண முடியவில்லை. பழக்கப்பட்டதொரு 'கடன்' போல் தோன்றினாள்.

புடவைத் தலைப்பில் முடியிட்டுத் தொங்கிக் கொண்டிருந்த சாவியைக் கொண்டு கதவைத் திறந்துவிட்டு உள்ளே நுழைந்து மற்றொரு மின்சார விளக்கையும் போட்டாள்.

பிறகு ''நீங்கள் யார்?'' என்று கடுமையாகக் கேட்டாள்.

''என் பெயர் சாவித்திரி. இவள் என் தங்கை சந்திரா!'' என்றாள் சாவித்திரி.

''உன் தங்கை போட்ட கடுதாசி ஒண்ணு போன மாசம் வந்தது. ஓரளவு எல்லாத்தையும் அதிலே எழுதியிருந்தே. காகிதம் எனக்கு வந்ததில்லேதான். அவன் வெளியே வர இன்னும் ஒரு வருஷம் பிடிக்குமே? அதுவரையிலே அதைப் பிரிக்காம எப்படி இருக்கிறது? அதோட எனக்குத் தெரிஞ்ச இந்த வீட்டு விலாசத்துக்கு அவனுக்கோ எனக்கோ இது வரையிலே காகிதமே வந்தது கிடையாது. ரொம்ப அபூர்வமா வந்ததேன்னு பிரித்துப் பார்த்தேன்.''

# கந்தர் அலங்காரம்

## செந்தமிழ்ச் சொற்பொழிவுகள்

※

நிகழ்த்துபவர் :

## ஸ்ரீ அம்ருதானந்த யோகி

**இடம்:**

### சென்னை, பூக்கடை சென்ன மல்லீஸ்வரர் கோயில்

**அனுபூதி மண்டபத்தில்**

(தேவராஜ முதலித் தெரு)

நேரம் : இரவு 7 மணி முதல் 9 மணி வரை

காலவரையறை : **ஆகஸ்ட் மாதம் முதல் தேதி வியாழக்கிழமை தொடங்கி. ஆகஸ்ட் மாதம் 31-ம் தேதி முடிய. முப்பத்தோரு நாட்கள் நடைபெறும்.**

அன்பர்கள் யாவரும் பெருந்திரளாக ஒவ்வொரு நாளும் குழுமி, அறுமுகச் சிவனுரின் பெருமைகளை, அருணகிரிநாதரின் அருமையான வாக்கின் சிறப்பை, ஸ்ரீ அம்ருதானந்த யோகியாரின் அமுதமயமான சொற்பொழிவுகளின் மூலம் செவி மடுத்துப் பேரின்பப் பேராழியில் திளேப்பார்களாக.

கந்தர் அலங்காரம் சிறந்த அருள் நூல்; உலகியல் நலன்கள் யாவற்றையும், அங்ஙனமே கடவுளின்பப்பேற்றையும் ஒருங்கே அருளவல்லது.

※

## ஸ்ரீ வித்யா குருமண்டலி

4, ஜகதம்பாள் தெரு — தியாகராயநகர் — சென்னை-17

# யாவற்றிலும் முதன்மை




★ சுச்சிதமான நயம்
★ ஒப்பற்ற சுவை
★ முரமுரப்பான புதுமை
★ ஈடிணையற்ற போஷாக்கு யாவற்றிலும் முதன்மை—

## பார்லே க்ளுகோ

பிஸ்கட்டுகள்




பார்லே க்ளுகோ இந்தியாவிலேயே உன்னத விற்பனையுள்ள பிஸ்கட்டாக விளங்குவதில் வியப்பில்லை!

''நான் மூணு கடுதாசு போட்டேன்.''

''நீ எத்தனை போட்டியோ என்னமோ எனக்கு வந்தது ஒண்ணுதான். அதுவும் தபால்காரன் தேடித் துருவிக் கொடுத்தான்.''

சாவித்திரி சின்னதான அந்த வீட்டின் உள் அமைப்பைப் பார்த்தாள். தும்புரவேயில்லாமல் புகை மண்டிக் கிடந்த ஒரு முன் ஹாலும் இடுப்பளவு உயரத்துக்குத் தடுப்புச் சுவர் எழுப்பி மற்றோர் அறையும் இருந்தது. சமையல், சாப்பாடு குளியல் எல்லாமே அதில் தான்போலிருக்கிறது. சித்தப்பா வீட்டின் அளவேதான். அங்கே இன்னொரு தனி அறையுண்டு. மற்றப்படி எல்லாம் ஒரே மாதிரி ஏழைக் குடில்தான். சதா வீசிக் கொண்டிருக்கும் துர்நாற்றத்தைச் சகித்துக் கொள்ளப் பழகிவிட்டால் சூழ்நிலை ஒன்றும் வெறுக்கக்கூடிய அளவுக்கு இருக்காது.

சுவரின் நடுவில் உள்ள கொஞ்சம் பெரிதான அலமாரியில் சாமி படங்கள் இருந்தன.

''உங்க ரெண்டு பேருக்கும் இப்போ என்ன வேணும்?'' என்று மணியம்மாள் எடுத்த எடுப்பில் கேட்டாள்.

சாவித்திரி சற்று நேரம் நிலைதடுமாறினாள். பெரியவள் இவ்வளவு விரைவில் நேரிடையான கேள்வியைத் தொடுப்பாள் என்று எதிர்பார்க்கவில்லை. அது மட்டுமல்ல, 'உங்க ரெண்டு பேருக்கும் என்ன வேண்டும்?' என்ற கேள்வியில் உள்ள கடுமை 'உங்களுக்கு என்ன வேலை இங்கே?' என்ற தோரணையிலிருந்தது.

''நான் உங்க மகனால் ஒரு குழந்தைக்குத் தாயாகப் போகிறேன்......''

மாதவனின் தாயாரின் கேள்விக்குச் சந்திரா வெட்கத்தை விட்டுப் பதிலைச் சொன்னாள். மணி அம்மாளின் முகத்தைப் பார்த்தாள். அந்த முகத்தில் எந்தவிதமான உணர்வின் அதிர்வையும் காண முடியவில்லை. அதிர்ச்சியில்லை, ஆவல் இல்லை. திகைப்பு இல்லை. ஒன்றுமே இல்லாத வெறும் சூனிய முகம்தான் அங்கே நிதானப்பட்டுத் தெரிந்தது.

''இவள் செய்தது தவறானதா? அல்லது உங்கள் மகன் செய்தது தவறானதா என்று தர்க்கம் செய்ய நான் தயாராக இல்லை. இவளுடைய அடக்கமில்லாத தன்மையை நீங்கள் கண்டித்தால் அதை நான் மனப் பூர்வமாக ஏற்கவும் தயாராக இருக்கிறேன். 'சிறிசு' என்று சமாதானம் பேச நான் முற்பட மாட்டேன். நிகழ்ந்தவைகளுக்கு வருத்தப்பட்டுண்டு ஸ்தம்பிச்சு நிக்க நமக்கு அவகாசமில்லை. இனி வரப் போகிற விளைவுகளுக்கு நாம் ஒரு பரிகாரம் தேடியாகணும். பெரிய மனசு வைச்சு இவளுக்கு நீங்கதான் வழி செய்யணும். உங்களைக் கெஞ்சிக் கேட்கிறேன். தாயார் மாதிரி நினைச்சுக் காலில் விழுறேன்'' என்று சொல்லிக் கொண்டே மணியம்மாளின் கால்களில் விழுந்தாள் சாவித்திரி.

''நான் என்ன செய்யணும்கிறே? இப்போ மாதவன் ஜெயில்லே இருக்கான், தெரியுமா?''

''கேள்விப்பட்டேன். இவளை நீங்க பார்த்துக்கணும், அவர் வரும் வரையிலே. அதுக்கப்புறம் ஈசுவரன் விட்டவழி. அவர்கள் ரெண்டு பேரையும் ஒண்ணு சேர்த்து வச்சு, எதானும் ஒரு வழி பண்ணியாகணும். அதுவரையிலே இவளை நீங்க வைச்சுக்கணும்.''



''பெரிய மகாராணி இவ! என்னமோ இந்தப் 'பயாஸ்கோப்' பார்த்துவிட்டு எலந்தப்பழம் விற்கப் போக மாட்டாளாமே! எப்பவும் விற்கிறவளுக்கு இப்ப என்னடி கேடு வந்தது?''

''நான் ஏன் இவளை வைச்சுக்கணும்? கிரகசாரம். அவன் என் பிள்ளை இல்லை என்று முடிவு பண்ணி எத்தனையோ வருஷமாச்சு. பெத்தது என்னமோ நான்தான். அந்தக் 'கடமை' அவன் சரியாச் செய்யலே. என் பிள்ளைன்னு வாய் நிறையவும் மனம் நிறையவும் சொல்லிக்கிறத்துக்கு ஏத்தமாதிரி அவன் நடந்துக்கலே. தத்தாரி நாயா போயிட்டான். என்னை அவன் கவனிக்கிறதே யில்லே. நான் வாங்கி வந்த வரம் இந்த அறுபது வயசிலேகூட ஒரு இடத்திலே ஊழியம் செய்து வயத்தைக் கழுவ வேண்டியிருக்கு. தினம் தினம் என்னோட சோகத்தையெல்லாம் அதோ அந்த முருகனிடம்தான் சொல்லி ஆத்திக்கிறேன். எனக்கே வாரத்திலே ரெண்டு நாள் வயித்துக்குக் கிடைக்கிறதில்லே. தலைவலி காய்ச்சலின்னு படுத்துண்டுட்டா கதவைத் தட்டி உள்ளே வந்து வெந்நீர் வச்சுக்கொடுக்க நாதியில்லாமே இருக்கேன். இந்த நிலையிலே இவளை நான் எப்படி ஏத்துக்க முடியும்? அவள் வினையை அவள் அனுபவிக்க வேண்டியதுதான்.'' — மணியம்மாளின் கண்கள் கண்ணீருடன் பளபளத்தன. அந்த வயோதிக உள்ளத்தின் சோகம், வாழ்க்கைப் போராட்டம், இவைகளைக் கேட்டபோது சாவித்திரியின் நெஞ்சமும் சோகத்தால் அடைத்துக் கொண்டது. பிறகு பாட்டி நிதானமாகப் பேசினாள்.

''நீ சொன்னதை நான் நம்பறேன். அவன் இவளைக் கெடுத்திருப்பான் என்பது வாஸ்தவமாக இருக்கலாம். அவன் அப்படிப் பட்டவன்தான். கொஞ்சம்கூட நல்ல சகவாசமே இல்லாதவன். படிக்கிற வயசிலே படிக்காமே, படிக்க வைச்சாலும் ஊர் சுத்திண்டு இருந்துட்டு இன்னிக்குக் 'காலி'யாத் திரியறான். அவனை நான் அடக்கின காலமெல்லாம் போய்விட்டது; என்னை அவன்

தன்னோட தாயார்னு மதிக்கிறதில்லே. நானும் அவனைச் சட்டை செய்யறதில்லே. அவனையே என் மகன் இல்லேங்கிற போது இவளே அவனுக்காக எப்படி ஏத்துக்கறது?'' மணியம்மாளின் இரக்கமற்ற தன்மைக்கு அவளே முற்றும் காரணமல்ல என்பதை உணர்ந்தாள் சாவித்திரி. நொந்து போன அந்த மனம் சல்லடைக் கண்களாக மாறச் சில அசாதாரணமான சூழ்நிலைகளும் காரணம் என்பதை உணர்ந்தவளாகச் சந்திராவின் பக்கம் திரும்பினாள். அவளும் ஓரளவு மணியம்மாளின் மனத்தை உணர்ந்து கொண்டவளாகவே காட்டிக் கொண்டாள். அது அவள் பேச்சில் பளிச்செனத் தெரிந்தது.

''நான் காப்பாத்தறேன் உங்களை. இந்த வயசான காலத்திலே உங்களை நான் கவனிச்சுக்கறேன். நீங்க செய்யற வேலையை நான் செஞ்சு உங்களைப் பார்த்துப்பேன்.''

சாவித்திரி தங்கையின் பதிலால் பூரண திருப்தியடைந்தாள். அந்தச் சந்தர்ப்பத்தில் எப்படிப் பேச வேண்டுமோ அப்படிப் பேசி விட்டாள் என்பதில் அவளுக்குப் பரம சந்தோஷம்.

மணிப் பாட்டி அலட்சியமாக முகத்தைச் சுளித்தாள். '''நீ யார்?' என்று மகனே என்னைக் கேட்கிறான். 'உனக்கு நான் எதுக்குக் கொடுக்கணும்?' என்று நிர்த்தாட்சிண்யமாப் பேசறான். வர்ற பணத்தையெல்லாம் கண்டபடி செலவு செஞ்சுட்டுத் திண்ணையிலே படுத்திருந்துட்டு எழுந்து போறான். அப்படிப்பட்ட மகனே இப்படியெல்லாம் இருக்கறச்சே நான் உன்மேல் எப்படி நம்பிக்கை வைக்க முடியும்? நீ யாரோ ? நான் யாரோ? முன்னே பின்னே தெரியாதவள். ஏதோ ஓர் ஆபத்திலிருந்து தப்பிக்க நீ கொடுக்கிற இந்த உத்தரவாதத்தில் எல்லாம் என் மனசு திருப்தியடையப் போறதில்லே.''

---

## கவ்வப்பட்ட காலணிகள்!



ஆல்பி சோலக் என்பவர், ''என்னிடம் 137 பூட்ஸுகள் உள்ளன. சொந்தக்காரர்கள் அடையாளம் கூறித் தங்களுடையதைப் பெற்றுச் செல்லலாம்'' என்று செய்தித் தாள்களில் விளம்பரம் செய்துள்ளார். இந்தக் காலணிகள் இவருக்கு எப்படிக் கிடைத்தன தெரியுமா? நீச்சல் குளத்துக்குப் போகும்பொழுதெல்லாம் ஒரு ஜோடி காலணியைக் கவ்விக் கொண்டு வந்து விடுகிறதாம், இவரது நாய் ! இது நடந்தது கானடாவில்.

ஆதாரம்: டிட்பிட்ஸ். தகவல்: ச. ஶ்ரீதரன்

''ஆபத்திலே கொடுக்கிற உத்தரவாதமில்லே இது. உங்களுக்கு நம்பிக்கை ஏற்படக் கூடிய அளவுக்கு நான் என்ன செய்ய வேணுங்கிறேளோ, அதைச் செய்யத் தயாராக இருக்கேன். ஏதோ சம்பிரதாயமாகச் சொல்கிற ஒன்றிரண்டு வார்த்தைகளிலே மட்டும் ஒரு நம்பிக்கையை வேரூன்ற வைக்க முடியாதுதான். என்னை நம்புங்கள். என் நடத்தையை நீங்கள் பார்த்து அதன் பின் நம்பிக்கையை வளர்த்துக் கொள்ளுங்கள். இந்தச் சந்தர்ப்பத்திலே உங்களைத் திருப்திப்படுத்த என்னால் எதையும் செய்ய முடியாது.'' — சந்திரா கரகரத்த தொனியில் மணியம்மாளிடம் கெஞ்சினாள். அதைத் தொடர்ந்து சாவித்திரி பேசினாள்.

''இந்த வயசான காலத்திலே உங்களைக் கண்காணிக்கிற பொறுப்பை என் தங்கை ஏத்துக்க வழி செஞ்சு கொடுங்க, போதும். வேறு எந்தவித நிர்ப்பந்தத்துக்காகவும் வேண்டாம். உங்கள் மகன் இவளைக் கெடுத்துவிட்டான் என்கிறதைக்கூட ஒதுக்கிடுங்க. ஓர் ஏழைப் பெண். அநாதரவானவள், ஒரு பொதுவான உணர்ச்சிகளுக்கு நடுவில் சிக்கிப் பிரச்னைகளோடு நிக்கறவள் என்கிறபோது உண்டாக வேண்டிய சராசரி அனுதாபம் உங்க மனசிலே இவளுக்காகச் சுரந்தால் போதும். இரக்கம், தயை, எல்லாம் தானாக வரும்......''

மணி அம்மாளிடம் நீண்ட மௌனம் நிலவியது. மாடப்பிறையில் இருந்த சுவாமிகளை அடிக்கடி திரும்பிப் பார்த்தாள். வாசற்படி தாண்டி வெளியே பார்த்தாள். சாவித்திரியையும், சந்திராவையும் மாறி மாறிப் பார்த்தாள்.

''உன் பேர் என்ன சொன்னே? சந்திராவா?''

மௌனமாகச் சந்திரா தலையை ஆட்டினாள்.

''நீ இவளோட தமக்கையா ?''

''ஆமாம்!'' என்றாள் சாவித்திரி.

இரண்டு கேள்விகளுக்குப்பின் மீண்டும் மணியம்மாளிடம் மௌனம் நீண்டது.

''என்னோட வாழ்க்கையிலே இப்படியொரு நிர்ப்பந்தத்துக்கு நான் ஆட்படணும்னு இருந்தா அதை எப்படி மீற முடியும்? உங்களுக்கு எப்படி இருக்கோ, நான் என் மனசைத் திறந்து சொல்லணும்னா இது ரொம்ப ரொம்பக் கேவலமானது. மத்தவா பார்த்துச் சிரிக்கும்படியான விஷயம். மான அவமானத்துக்கு அஞ்சி வாழற யாரும் இதை ஏத்துக்கமாட்டார்கள். இதுக்கு உடன்படவும் மாட்டார்கள். இத்தனை தூரம் உள்ளே வந்து நின்னு பேசறதுக்குக்கூட இடம் தரமாட்டார்கள். இது அப்படிப்பட்ட வெட்கக்கேடானது. நாளைக்கே நாலு தெரிஞ்சவர்கள் கேட்டா நான் எதை, எப்படிச் சொல்லிச் சமாளிப்பேன் ? நானும் பத்துப் பேருக்கு நடுவிலே இருக்கிறவள்தானே! எல்லாருக்கும் இருக்கிற மான அவமானம் எனக்கும் இருக்கணுமோல்லியோ, ஆனாலும் இவளை நான் ஏத்துக்கறேன். இவளை நான் வைச்சுக்கறேன். ஏன் தெரியுமா ? நான் எந்த வயசான காலத்திலேயும் யார்கிட்டேயும் எதுவும் யாசகம் கேட்டு வாங்கிச் சாப்பிடலே. வேலே

செஞ்சு சாப்பிடறேன். என்னோட கைகளுக்கங் களிலே எப்படி யாருமே பங்குபெற வரதில்லையோ, அதே மாதிரி இந்த விஷயத்திலே கேள்வி கேக்க வரதையும் விரும்பமாட்டேன். எனக்கு நியாயமாப் படறதையும் நான் துணிஞ்சு செய்ய எனக்கு உரிமையிருக்கு.....ஆனால் ஒண்ணுமட்டும் நிச்சயமாச் சொல்றேன். இங்கே நீ சும்மா உட்கார்ந்து கொண்டு சாப்பிட முடியாது. வேலை செய்யணும், வேலை. ஏதாவது செஞ்சேதான் தீரணும். அதுக்குச் சம்மதமானாத்தான் இங்கே இருக்கலாம். அது முடியாதுன்னு நீ இங்கே இருக்கிறதும் முடியாமே போயிடும். கண்டிப்பாத்தான் பேசறேன். பேசுவேன். என் மேலே வருத்தப்பட்டுப் பிரயோசனமில்லை. என்னு என்னாலே இப்போதெல்லாம் அதிகமா வேலை செய்ய முடியறதில்லை. உடம்பெல்லாம் அசந்து போய்விட்டேன். இந்த நிலையிலே உன்னை உட்கார்த்தி வச்சுப் போட எனக்குச் சக்தி போதாது.''

சாவித்திரி இலேசாகச் சிரித்தாள். மணியம்மாளின் வெளிப்படையான வார்த்தை அவளுக்கு ஆறுதல் அளிப்பதாக இருந்தது.

இரவு நீண்டது.

அந்த இரவில் பாட்டி கொடுத்த ஆகாரத்தைச் சாப்பிட்டுவிட்டுப் படுத்தாள் சாவித்திரி. அந்த இரவை மட்டும் அங்கே கழித்துவிட்டுக் காலையில் தன்னைப் பற்றிச் சிந்தித்துக் கொள்ளலாம் என்று எண்ணினாள். தங்கைக்கு ஒரு புகலிடம் கிடைத்தது பற்றி மனம் ஆறுதல் பட்டது.

இரவு மணியம்மாளிடம் இன்னும் பாக்கியிருந்த விஷயங்களையும் சாவித்திரி சொல்லிவிட்டாள். தந்தை தங்கள் இருவரையும் சித்தப்பாவிடம் கொண்டு வந்து விட்டது, பணம் கொடுத்தது, தந்தை இறந்தது, பின் சித்தப்பாவின் மனமாற்றம், சந்திராவின் படிப்பு பாதியில் நின்றது, தான் வேலைக்குப் போகத் தொடங்கியது, என்று இப்படி ஒன்று விடாமல் விவரித்தாள். சித்தப்பா சந்திராவை வீட்டு விட்டு வெளியேறு என்று சொன்னது, அதைத் தொடர்ந்து அவளும் வந்தது — என்று எல்லாவற்றையும் அவள் சொல்லிக் கொண்டு போனாள். ஆனால் மணியம்மாளின் முகத்தில் எந்த விதமான மாறுதலையும் காண முடியவில்லை. இத்தனை வயதில் உலகியல் விவகாரங்களில் அவள் அடைந்த சலிப்புத்தான் அவளை இந்தவிதமாக மாற்றியிருக்க வேண்டும் என்று தனக்குள் எண்ணிக் கொண்டாள் சாவித்திரி. ஆறுதல் வார்த்தையோ, மாற்று யோசனைகளோ வரும் என்று அவள் எதிர்பார்த்தாள். முகத்தைப் போல் உள்ளமும் மரத்துக் கிடந்ததை மணியம்மாளின் மௌனத்திலிருந்து உணர்ந்தாள்.

''நான் போய் வரட்டுமா?''

கண்களில் கண்ணீர் குளமாகத் தேங்கி நிற்கச் சந்திரா மௌனமாக நின்றாள். சாவித்திரி தனக்குத் தேவையானவற்றை ஒரு பையில் எடுத்து வைத்துக் கொண்டு புறப்படத் தயாராக நின்றாள்.

''இப்போ நீ எங்கே போய்த் தங்குவே?''



கலைப் பொருள்கள் வியாபாரி ஜோஸப் டுவீன் ஒரு சமயம் தம் குடும்பத்தோடு கடற்கரைக்குச் சென்றார். அவருடைய மகள் — கடைக்குட்டி - தண்ணீரில் இறங்க மறுத்தாள். காரணம் கடல் நீர் மிகவும் குளிர்ச்சியாக இருந்ததுதான். ஜோஸப் உடனே கரையில் ஓர் அடுப்பை மூட்டிக் கெட்டிலில் கொஞ்சம் தண்ணீரைக் கொதிக்க வைத்தார். அதைச் சிறுமி பார்த்துக் கொண்டிருக்கையிலேயே கடலில் ஊற்றினார். அவளுக்குத் திருப்தி ஏற்பட்டு விட்டது. அப்போதே தயக்கமின்றிக் கடல் நீரில் குளிக்க இறங்கி விட்டாள்!

ஆதாரம்: புக் ஆஃப் தி மந்த் கிளப் நியூஸ்; தகவல்: 'ரமன்'

---

''எங்கேயோ போகிறேன். எனக்கே புரியாமல்தான் தவிக்கிறேன். மீண்டும் சித்தப்பா வீட்டுக்குப் போகப் பிடிக்கலை.''

''அதுக்காக... நீ... ஒரு நிரந்தர இடமில்லாமல் தவிக்கப் போறியா? என்னைப் பற்றி நீ கவலைப்பட வேண்டாம். எப்படியாவதும் என்னை நான் சரிப்படுத்திக்கறேன். நீ அனாதையா வெளியே யாருமே அறிமுகமில்லாத இந்தப் பிரும்மாண்டமான ஊரிலே அலையோதணுமா? இல்லை. துணிஞ்சுசொல்லு. நானும் உன்னோடயே வந்துடறேன். ரெண்டு பேருமா ஒரு இடத்திலே இருப்போம். எங்காவது ஒரு குடிசை கெடச்சாக்கூடப் போதும். தைரியமா இருக்கக் கத்துண்டுட்டா எங்கே இருந்தா என்ன?''

''வேண்டாம். அப்படியெல்லாம் செய்யறதிலே லாபமில்லே. எப்படியோ இந்த எதிர் நீச்சலிலே வாழ்ந்தாகணுமே! நான் போயிட்டு வரேன். பெட்டியிலே பாதிப் பணம் வச்சிருக்கேன். பாதிப் பணத்தை நான் எடுத்துண்டு போறேன். எதுக்கும் அதைரியப்படாதே. ஏதாவது ரொம்ப அவசியம், அவசரம்னு என்னோட ஆபீஸுக்கு வா! வீணு அலையாதே. பாட்டியோட அவர் கூப்பிடற வேலைக்கெல்லாம் போ. யாரோடும் அதிகமாப் பேச்சு வச்சுக்காதே. உன்னாலே இனிமே டியூட்டோரியல் காலேஜுக்குப் போக முடியாதுன்னு நினைக்கிறேன். போகப் போக வாழ்க்கை எப்படி இருக்குன்னு கடிதாக எழுது. நானும் அடிக்கடி வந்து பார்த்துக்கறேன். என்ன... நான் வரட்டுமா?''

சாவித்திரிக்கு நெஞ்சை அடைத்துக் கொண்டது.

வலது கையில் பையுடன் வாசற்படியில் வந்து சற்றுத் தயங்கினாள். மணியம்மாவிடம் சொல்லிக் கொள்ள வேண்டும் என்று நினைத்தாள். சரியாக முகம் கொடுத்துப் பேசாதவளிடம் என்னத்தைப் பேசுவது? எதிலுமே அக்கறையற்றவளாக வாழ்கிறவளிடம் எதை எதிர்பார்த்து என்ன சொல்லிக் கொள்வது?

இரண்டு நிமிஷங்கள் தயக்கம். அதன் பின் சந்திலே நடந்து, பிரதான சந்தில் திரும்பி நடந்தாள்.

**"உ**னக்கு என்ன வேலைதான் செய்யத் தெரியும்?"

பற்றேதுமின்றி மௌனமாக வருவதும், போவதும், சாப்பாட்டை இலையில் போட்டு விட்டுக் கூப்பிடாமல் காத்திருப்பதுமாக ஒரு சங்கேத நாடகமாடிக் கொண்டிருந்த மணியம்மாள் அன்று அபூர்வமாக வாய் திறந்து தன்னிடம் பேசியது சந்திராவுக்குக் கொஞ்சம் ஆறுதலாக இருந்தது.

வேற்றுமையினிடையே வளைய வருகிற நரக அனுபவத்தை இந்த ஒரு வாரத்தில் பூரணமாக அனுபவித்துக் கொண்டிருந்தவளுக்குப் பாட்டியின் இந்தக் கேள்வியின் உட்பொருள் உடனே புரியவில்லை.

மௌனமாகவே இருந்தாள்.

"என்னோடே வா. இன்னிக்கு ஓர் இடத்திலே வேலைக்கு ஏற்பாடு செஞ்சிருக்கேன்."

"நீங்க எங்கே கூப்பிட்டாலும் வரேன்!"

"சரி, புறப்படு. வேறே புடவை வைச்சிருக்கியா? கட்டிண்டிருக்கிறதே நன்னு இருக்கு போலிருக்கே."

"இல்லே, வேறே கட்டிண்டு வரேன்."

"சீக்கிரமாப் பொறப்படு. எனக்கு நேரமாயிடுத்து."

பத்துப் பதினைந்து நிமிஷங்களில் புறப்பட்டு விட்டாள் சந்திரா. வீட்டைப் பூட்டிக் கொண்டு மணியம்மாளும் புறப்பட்டாள். ஆடம் தெரு குறுக்கே ஒரு சந்தில் புகுந்து மந்தைவெளிப்பக்கம் வந்து வெளியில் பார்க்கச் சின்னதாகத் தோன்றும் ஒரு கட்டிடத்தினுள் சந்திராவை அழைத்துச் சென்றாள் மணியம்மாள். உட்பக்கம் பெரிதான ஹால். அங்கே ஏராளமான பெண்கள் பெரியவர்களும், சின்னஞ் சிறுசுகளுமாக அமர்ந்து அப்பளமிட்டுக் கொண்டிருந்தார்கள்.

இளமையாக, நல்ல செவ்வுடன் குள்ளமாக எதிர்ப்பட்ட ஒரு வாலிபனிடம் சந்திராவை அழைத்துக்கொண்டுபோய் நிறுத்தி, "இவளைத்தான் சொன்னேன்" என்றாள் மணியம்மாள்.

"சரி சரி, உன்னே போய்ச் செய்யச் சொல்லு. இந்தா காவேரி, இதுக்கும் வேலை கொடு... நீ போ மணியம்மா. நான் பார்த்துக்கிறேன்."

"போ. காவேரி உனக்கு வேலை தருவா. வாங்கிக்கோ. நான் போய் வரேன். சீக்கிரமா வந்தியானு வக்கீல் சுந்தரய்யா வீட்டுக்கு வா. சாவி தரேன். வீடு தெப்பக் குளத்துக்குப் பக்கத்திலே பால் டெப்போ எதிரே இருக்கு. அங்கேதான் வேலை செஞ்சுண்டு இருப்பேன். வந்து வாங்கிக்கோ" என்றுகூறிவிட்டு மணியம்மா போய்விட்டாள்.

வேலை ஒன்றும் கடினமானதல்ல. பழக்கமில்லாததால் ஆரம்பத்தில் கொஞ்சம் தடுமாற வேண்டியிருந்தது. ஒரு வாரத்துக்கு இரவெல்லாம் இரண்டு தோள்பட்டையும் வலித்தது. பிறகு சரியாகிவிட்டது.

விக்டோரியா அப்பளக் கம்பெனியில் வேலை செய்த அன்றைக்குக் கூலியுண்டு. அங்கே இன்னுமொரு சௌகரியம் இருந்தது. ஒரு தடவை அறிமுகமாயிருந்தால் போதும், எப்பொழுது வேண்டுமானாலும் போகலாம். செய்த வேலைக்கு உண்டான கூலியைப் பெற்றுக் கொண்டு போகலாம். அங்கு வேலை பார்ப்பவர்கள் அநேகமாக எல்லோருமே பெண்களானதால் அளவுக்கு மீறி வம்புப் பேச்சுக்களும் மலிந்திருந்தன. இருந்தாலும் அவைகளைக் கூடுமானவரையில் சகித்துக் கொண்டுதானிருந்தாள்.

"நீ உண்டாயிருக்கிறியா ?" என்று கேட்டாள் அன்று வயதான மாது ஒருத்தி.

அப்பளமிட்டுக் கொண்டிருந்த சந்திராவுக்கு ஒருபுறம் வெட்கமாகவும், சங்கடமாகவும் இருந்தது. . .

'ஆமாம்' என்பது போலத் தலையை ஆட்டினாள்.

"அதுதானே வயிறு பெரிசா இருக்கேன்னு பார்த்தேன்? என்ன மாசம்?"

"சரியா தெரியலே?"

இந்தப் பதிலைக் கேட்டு மற்ற இரண்டு பெண்கள் பரிகாசமாகச் சிரித்தனர்.

> இந்தக் காலத்தில் மண வாழ்க்கைக்கு இடைஞ்சலா யிருப்பது என்ன தெரியுமா ?
>
> "ஒருவன் தன் வருமானத்தைக் கொண்டு சர்க்கார், மனைவி ஆகிய இரண்டு பேரையும் சம்ரட்சிக்க வேண்டியதா யிருப்பதுதான்."
>
> ஆதாரம் : 'தி பெனிபிட் நியூஸ்'
>
> தகவல்: 'ராமன்'

"நீ மணிப் பாட்டிக்கு என்ன உறவு? அன்னிக்கு அதுதானே கொண்டாந்து விட்டுச்சு?"

'தான் மணிப் பாட்டிக்கு என்ன ஆகணும்? மனப்பூர்வமாகத் தன்னை ஏற்றுக் கொள்ளக் கூடிய உறவாகவா நான் வந்திருக்கிறேன்?' என்று சிறிது நேரம் தயங்கியவள், 'மருமகள்' என்றாள்.

பதிலைச் சொல்லிவிட்டு அப்பளத் தட்டைகளை மாவில் தோய்த்துத் தட்டி எடுத்துப் பரபரவென்று இட ஆரம்பித்தாள்.

"மாதவனுக்கு எப்போ கல்யாணம் நடந்துச்சு? அதான் ஆட்டோ வண்டியைத் திருச்சியிலே கொண்டு போய்த் திருட்டுத்தனமாக வித்துப்புட்டுச் செயிலுக்குப் போயிடுச்சே!"

"எப்போ கல்யாணம் நடந்துச்சு?...ஏன் பொண்ணு, உன் பேரு என்ன சொன்னே? சந்திராவா?"

"ஆமாம்" என்றபோது நெஞ்சில் துயரம் அடைத்தது. அதை மறைத்துக் கொள்ள எழுந்து வெளியே வந்து நின்றாள். அதன்

பின் அவளுக்கு வேலை ஓடவில்லை. கொஞ்ச நேரம் இருந்து அதுவரை இட்டுக் கொடுத்த அப்பளத்துக்கு மட்டுமாகக் கூலியைப் பெற்றுக் கொண்டு மணியம்மாளிடம் போய்ச் சாவியைக் கேட்டு வாங்கிக்கொண்டு வீட்டுக்கு வந்துவிட்டாள்.

சந்திராவின் உடம்பு குலுங்கிக் கொண்டிருந்தது. மணியம்மாள் உள்ளே நுழைந்தவள் அவள் அழுவதைப் பார்த்துச் சற்று நேரம் நின்றாள்.

''ஏன் அழறே?'' மணியம்மாள் அனுதாபமின்றி ஆத்திரத்துடன் கேட்டாள்.

''விக்டோரியா அப்பளக் கம்பெனியில் பலபேர் பல விதமாக் கேள்விகள் கேட்கறா. வம்பு பேசறா. கேட்கச் சகிக்கலே. வரவரக் கிண்டலும், கேலியும் அதிகமாகப் போச்சு'' என்றாள் ஈனஸ்வரத்தில்.

''உன்னோட லட்சணம் நாலு பேர் நாலு விதமாப் பேசற மாதிரிதானே இருக்கு. இப்போத் தெரியறதோல்லியோ உனக்கு. முறை தவறிப் போனால் இதையெல்லாம் கேட்டுக் கொள்ளத்தான் வேணும். நீ தப்புச் செய்யலாம். அதை நாலு பேர் கேட்கக் கூடாதோ? நீ யாரா இருந்தா எனக்கென்ன? யார் செஞ்சாலும் தப்புத் தப்புத்தான். எப்போ கல்யாணம் ஆறதுக்கு முந்தி இப்படிக் கன்னா பின்னா வென்று இருக்கறதுக்கு மட்டும் துணிவு இருக்கோ, அப்போ இதையும் தாங்கிக்கொள்ளத் துணிவு வேண்டும். தெரிஞ்சுக்கோ'' என்றவள், கொஞ்ச நேரம் வெறுமனே இருந்துவிட்டு, ''உனக்கு அங்கே போகப் பிடிக்கலேன்னா நின்னுடு. அவ பேசறா, இவ வம்பு அளக்கறா என்று சொல்லிண்டு கண்ணைக் கசக்கிக்க வேண்டாம். பிறகு உன் இஷ்டப்படி செஞ்சுக்கோ'' என்றாள்.

பற்றுதலே இல்லாத வார்த்தைகள், நம்பிக்கைகளைச் சிதற அடித்துக் கொண்டு வந்தன. இந்த ஈரமற்ற நெஞ்சில் இரக்கமே வளராதா? கடுமை நிறைந்த இந்த வெறும் முகத்தில் அன்பின் இளமையே தோன்றாதா?

மணியம்மாளிடம் அடைக்கலம் புகுந்தபின் அவளுடைய வறண்ட வாழ்வில் அதிகமான மாறுதலோ, எதிர்பாராத செழிப்போ உண்டாகி விடவில்லை. அபவாதத்திலிருந்து மீண்டமாதிரியான ஒரு சிறு நிம்மதியைத் தவிர வேறு எந்தவித இன்பத்தையும் அவள் அனுபவித்துவிடவில்லை. மணியம்மாளுக்குத் தெரியாமல் சிறையிலிருக்கும் மாதவனை மனத்தில் நினைத்துக் கொண்டு, ஒரு நாள் ஒரு மஞ்சள் கயிற்றில் சிறு மஞ்சள் துண்டைக் கட்டி அவளாகக் கழுத்தில் கட்டிக் கொண்டாள். அதை அவள் கட்டிக் கொள்ளும்போது அவளுக்கே சோகம் தாங்கவில்லை. யாருமே இல்லாத அந்தச் சின்னப் பெண் பிழியப் பிழிய அழுதாள்.

''என்ன செய்து கொண்டிருக்கிறாய்?''

இரண்டு இடங்களில் கிழிந்து பின் தைத்து அதை வெளியில் தெரியா வண்ணம் கட்டிக் கொள்வதில் பிரயாசையுடன் ஈடுபட்டிருந்த சந்திரா, சாவித்திரியின் குரல் வாசற் பக்கத்திலிருந்து வந்தபோது வியப்பு மேலிடக் கட்டிக் கொள்ளவிருந்த பழம் புடவையை அள்ளி மார்புடன் அணைத்துக் கொண்டு வாசலுக்கு வந்து விட்டாள்.

''விக்டோரியா அப்பளக் கம்பெனியிலே போய் விசாரித்தேன். நீ இன்று அங்கே வரவில்லை என்பதைச் சொன்னார்கள். ஏன் இன்று அங்கே போகலே?'' என்று கேட்டுக் கொண்டே சாவித்திரி உள்ளே வந்தாள்.

''உடம்பு முழுதும் அசதியாகவும் படபடப்பாகவும் வந்தது. போகலே.''

''டாக்டரிடம் உடம்பைக் காட்டிண்டு வரயா?''

''அவகாசம் கிடைச்சப்போ போறேன். வெளியே போறதுக்கு வெட்கமா இருக்கு.''

தான் கொண்டு வந்திருந்த பையை அவளிடம் நீட்டினாள் சாவித்திரி.

''பூ இருக்கு எடுத்துக்கோ. நேத்திக்குச் சம்பளம் வந்தது. உனக்கு ஒரு நூல் புடவை பதினைஞ்சு ரூபாய்க்கு எடுத்தேன். எனக் கொன்று எடுத்துக் கொண்டேன்.''

''சித்தப்பா வந்தாரா?''

''நேத்திக்கு வந்தார். அதற்கு முன் தினம் ஆபீசுக்கே வந்தார். 'அங்கே வந்துடு' என்று கெஞ்சினார். அவரைப் பார்க்கறதுக்கும் கஷ்டமாகத்தான் இருக்கு.''

''என்னைப் பற்றிக் கேட்டாரா?''

''கேட்கலே. நானுந்தான் சொன்னேன். புடவையைக் கட்டிக்கோ. அப்படியே நிக்கறயே! வேறே ஏதேனும் செய்தி உண்டா? மாதவன் எங்கே இருக்கார்னு விசாரிச்சையா? எப்போ வரார்னு தெரியுமா? ஏதாவது தகவல் கிடைச்சுதா?''

''இல்லை.''

''முயன்று பார்த்து, அவர் இருக்கிற இடம் தெரிஞ்சு காகிதம் போடலாமே?''

''யார் கிட்டே போய் எப்படி விசாரிக்கிறது? ஒவ்வொரு நாளையும் ஒவ்வொரு கண்டமாப் போக்கிண்டிருக்கேன்......''

புடவையை நன்றாகக் கட்டிக் கொண்டவள், தமக்கை கொண்டு வந்த பூச்சரத்தில் அவளுக்கு ஒரு சாண் நறுக்கிக் கொடுத்து விட்டு, தானும் வைத்துக் கொண்டு, சாவித்திரி வாங்கிக் கொண்டு வந்த புடவையைப் பார்த்துவிட்டுப் பெட்டிக்குள் வைத்துக் கொண்டாள்.

''சந்தியா காலமாயிடுத்தே, சாமி விளக்கு ஏத்தலியா?''

வெறுப்புடன் முகத்தைச் சுளித்துக் கொண்டாள் சந்திரா.

''கோயிலுக்குப் போகிற வழக்கம்தான் ஆரம்பத்திலிருந்தே இல்லே. அதெல்லாம் சின்னப் பெண்ணாக இருந்தபோதுதான் இல்லையா?''

''நமக்கு மேலே இருக்கிற நித்தியப் பிரச்னைக்கு மத்தியிலே உண்மையான பக்தி, உண்மையான கடவுள் விசுவாசம் என்பதெல்லாம் எங்கேடி வளரப் போறது?'' சலித்துக் கொண்டே கூறினாள் சந்திரா.

''ஒண்ணு மட்டும் தெரிஞ்சுக்கோ, சந்திரா நாம இப்படியெல்லாம் ரொம்பக் கோரமான முறையிலே, இடிபாட்டுக்கு மத்தியிலே அவதிப்படறதுக்கே காரணம் நம்மகிட்டே வளர்ந்துவிட்ட இந்த மாதிரி அநாசாரமான பழக்க வழக்கங்கள்தான். நம்முடைய வாழ்க்

# காலைப் புத்துணர்ச்சியை மாலை வரை நீடிக்கச் செய்யுங்கள்!

காலையில் குளித்தபின் பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்க்கை உடலில் தூவிக் கொண்டால் புத்துணர்ச்சி மணிக்கணக்கில் நீடித்திருக்கும். வியர்வையை விரைவில் உறிஞ்சும் தன்மையுடைய பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்க் கடுங்கோடையில் கூட உங்களை இதமான உணர்ச்சியுடனும் உல்லாசத்துடனும் இருக்கச்செய்யும். உங்கள் உடலைத்தழுவி நிற்கும் ட்ரீம்ஃப்ளவர் நறுமணம் உங்களைச்சூழ்ந்துள்ளவர்களை மகிழ வைக்கும். எல்லா காலநிலைகளுக்கும் ஏற்றதாகையால் வருடம் பூராவும் தினமும் உபயோகிக்கச் சிறந்தது பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்க்!




## பாண்ட்ஸ்

ட்ரீம்ஃப்ளவர் டால்க்—
மென்மை மிக்க மகோன்னத டால்க!

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடெட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன்
யு.எஸ்.ஏ.யில் இணைக்கப்பட்டது)

P-6986

# ஒரு டிரேடு மார்க்கிலே என்ன இருக்கிறது?




## ஏராளமான விஷயங்கள்

பெரும்பாலோர் நினைப்பதுபோல டிரேடு மார்க் என்பது ஒரு வியாபாரியின் வணிகச் சின்னம்தானா? அல்ல, அதற்கும் மேல். உதாரணமாக, மேலே காணப்படும் டிரேடு மார்க்கை எடுத்துக் கொள்ளுங்களேன். அது, கஸ்தூர்பாய் லால்பாய் சார்புள்ள ஏழு நெசவாலைகளின் தொகுதியான லால்பாய் க்ரூப்புக்குச் சொந்தம். இந் நூற்றாண்டின் துவக்க கால முதலே, தரமான துணிகளைத் தயாரித்து வரும் ஆலைகள் அவை. அவற்றின் ஒற்றுமை, அனுபவம், முன்னேற்றம் ஆகியவற்றின் சின்னமே இந்த டிரேடு மார்க்.

முடிவாக, எனினும் முக்கியமாக, நேர்த்தியான துணிகளை நயமான விலைகளிலே நீங்கள் பெறுவதற்கான உத்தரவாதமே அந்த லால்பாய் டிரேடு மார்க்.

# லால்பாய் க்ரூப்

தி **அரவிந்த்** மில்ஸ் லிமிடெட்.
தி **ராய்ப்பூர்** மானுபாக்சரிங் கம்பெனி லிமிடெட்.
தி **அசோகா** மில்ஸ் லிமிடெட்.
தி **ஸர்ஸ்பூர்** மில்ஸ் லிமிடெட்.
தி **அருணா** மில்ஸ் லிமிடெட்.
தி அகமதாபாத் **நியூ காட்டன்** மில்ஸ் கம்பெனி லிமிடெட்.
தி **நூதன்** மில்ஸ் லிமிடெட்.

கையோட பின்னணியைப் புரிஞ்சுகண்டு, அதிலே ஏற்கனவே இருக்கிற நியதிகளை ஓரளவாவது கடைப்பிடிச்சுகண்டு போனால் வாழ்க்கை அதிகமாத் திசை திரும்பிப் போய்விடாமல் பாதுகாக்க முடியும். ஞாபகம் வச்சுக்கோ. செய்யற தவற்றையெல்லாம் செய்து மனசைக் கட்டவிழ்த்து விட்டுட்டு முடிவிலே விரக்திப்பட்டுண்டா அதைவிடப் பைத்தியக்காரத்தனம் ஒண்ணுமே இல்லே.''

''கடவுள்பக்தி என்பது வெளியில் பெரிசாத் தெரியும் தடுப்புச் சுவர் அல்ல. உனக்குள் நீயே போட்டுக்கிற முள்வேலி. நினைவிருக்கட்டும். அதை மட்டும் நீ சரியான முறையிலே உனக்குள் நீ பின்னிக் கொள்ளவில்லை என்றால் புனிதமான மனம் சாக்கடையாக நாற்றமெடுக்க ஆரம்பிச்சுடும். பிறகு அதைச் சுத்தம் செய்யவே முடியாது. வெளியில் பார்க்கிற ஆரவாரத்தையும் தப்புப் பிரசாரத்தையும் பெரிசா எடுத்துண்டு மயங்காதே. ஆரம்பத்திலிருந்தே நீ இப்படித்தான். கோவிலுக்குக் கூப்பிட்டால் வர மாட்டாய். கடற்கரைக்கு ஓடுவாய். சாமி விளக்கை ஏத்துன்னு முனகிக் கொண்டே போவே. ஆத்மீக எண்ணம், ஆத்மீக சிந்தனை என்பதெல்லாம் கொஞ்சம் கூட முளை விடாதபடி மனசை மூடியே வச்சுண்டு வந்திருக்கே. இன்னிக்கு இவ்வளவு துன்பப்பட்டும்கூட உனக்குப் புத்தி வரலே.''

சாவித்திரி ஆத்திரத்துடன் பேசினாள்.

துயரத்துடன் தமக்கையைப் பார்த்தாள் சந்திரா.

''என்னோட மனசே சரியில்லேடி. நீயும் சேர்ந்து கொண்டு அதைச் சல்லடைக் கண்ணாக்காதே. நான் எதுக்குமே விரோதியில்லே. ஆரம்பத்திலே அப்படியெல்லாம் இருந்திருக்கலாம். இருந்திருக்கிறேன். நான் இல்லையென்று சொல்லவில்லே. அதுக்கெல்லாம் கூட பலமான காரணம் எதுவும் சொல்லத் தெரியாது. அவ்வப்போது உண்டாகிற வாழ்க்கைப் பிரச்னைகளோட மனோ விகாரங்களுக்கு ஆட்பட்டு அலை மோதுறதிலே எதையும் ஒரு விவரணையாக் கடைப்பிடிக்க முடியாமே போய் விட்டது. அது வேறு, இது வேறு...''

மணியம்மாள் தட்டுத் தடுமாறிக் கொண்டே உள்ளே நுழைந்தாள். சாவித்திரியைப் பார்த்துவிட்டு, ஒன்றும் பேசாமல், உள்ளே போய்விட்டாள்.

''சந்திராவை அழைத்துக் கொண்டு போய் டாக்டரம்மாவிடம் காட்டிவிட்டு, கொண்டு வந்து விடுகிறேன்.''

திரும்பாமல் உள் பக்கம் பார்த்துக் கொண்டு நின்ற மணியம்மாள் தலையை மட்டும் ஆட்டினாள்.

''கிளம்பு. உன்னை டாக்டரிடம் காட்டி விட்டு நான் அப்படியே போகிறேன்.''

வெளியில் நன்றாக இருட்டி விட்டது. தெரு விளக்குகள் எரியத் தொடங்கின. சந்திராவும் சாவித்திரியும் வெளியே புறப்பட்டனர்.

அருகில் மிகக் குறைவாக 'ரேட்' வாங்கும் மிகச் சாதாரண லேடி டாக்டர் என்று அழைக்கப் படுகிறவளிடம் சந்திராவின் உடம்பைப் பரிட்சிக்கச் சொன்னதில் அவள் சந்திராவைப் பார்த்து விட்டு ஆருடம் சொல்வது போல ஏதோ சொன்னாள். ஒரு மன ஆறுதல் பெற வேண்டிய அளவுக்கு அந்த மிகச் சாதாரண டாக்டரின் வார்த்தைகளே போதுமானதாக இருந்தன.

சந்திராவை அழைத்துக் கொண்டு வளைக் கடைக்கு வந்து இரண்டு கைகள் நிறையக் கண்ணாடி வளையல்களை அடுக்கி விட்டாள். ''போனமாதமே வாங்கிக் கொடுக்கணும்னு நினைத்தேன். முடியவில்லே. சமைக்கறாப் போல நான்கு அலுமினியப் பாத்திரம் வாங்கிவிட்டேன். பணம் சரியாகிவிட்டது.''

''ஆமாம். இதுக்கு இப்போ என்ன அவசரம் வந்தது?'' — சந்திரா கை வளையல்களைத் தூக்கிக் காட்டிக் கேட்டாள்.

''ஏதோ கொஞ்சநஞ்சம் இருக்கிற தார்மிக உந்தல்தான். நியாயப்படி நடந்திருந்தா உனக்கு இப்போ வளைகாப்பு நடந்திருக்கணும். இது எட்டாவது மாதமில்லையா? அப்பா உயிரோடு இருந்து நாம இப்படி அநாதையாக ஆக்கப்படாமல் இருந்து உனக்குக் கல்யாணமாகி, 'உண்டாகி' இருந்தாக்க ரொம்பப் பெரிதான முறையிலே இல்லாவிட்டாலும் வீட்டோடாகிலும் இது கச்சிதமா நடந்திருக்கும். எதுக்கும்தான் கொடுத்து வைக்கவில்லையே. புழுதியாட்டமா வெளியிலே சுத்தறோம். என்னமோ மழை வெய்யிலுக்கு ஒதுங்கற இடமாட்டமா ஒதுங்கியிருக்கோம்... அவ்வளவுதானே? நிரந்தரமான புகலிடம் என்பது நமக்கெல்லாம் எவ்வளவு தொலைவிலே இருக்கோ? எங்கே இருக்கு என்றே தெரியவில்லையே. அதை நோக்கி எப்படி எந்தத் திக்கிலே பயணம் தொடங்குவது?'' — சாவித்திரி பெருமூச்சு விட்ட அதே விநாடியில் சந்திராவும் பெருமூச்சு விட்டுக் கொண்டே நடந்தாள்.

''நான் போய் வரட்டுமா?''

''சரி.''

''உடம்பைப் பார்த்துக்கோ. மணியம்மாளை அதிகமாகப் பகைச்சுக்காதே. எது சொன்னாலும் சரி, சரின்னு இருந்துடு. எதிர்த்துப் பேசணும் என்றோ, மனம் குமுறி ஆத்திரப்படவோ முற்படாதே. நான் போய் வரேன்'' என்று சொல்லி அவள் முகத்தை நிமிர்த்திப் பார்த்தாள். பிறகு போய் விட்டாள்.

பரபரப்பான இரவின் முன்னேரத்தில் ஜனப் பிரளயத்தில் அவள் சாயல் புலப்படுகிறவரை, புரிந்துகொள்ளுகிறவரை பார்த்துக்கொண்டிருந்து விட்டு வீட்டுக்கு வந்தாள் சந்திரா.

வீட்டினுள் நுழையும்போது மணியம்மாள் படுத்துக் கொண்டு விட்டாள்.

அவமானச் சின்னம் என்பது நாளடைவில் தவிர்க்க முடியாத வளர்ச்சியாக வளர்ந்து கொண்டிருந்தபோது அவமானச் சின்னம் என்ற பெயர் இலேசாக மாறிக் கொண்டு வந்தது. விக்டோரியா அப்பளக் கம்பெனிப் பெண்கள் திடீரென அன்பு பாராட்ட ஆரம்பித்து விட்டார்கள். மறைமுகமாகக் காதில் விழுந்த சில அசிங்கமான சொற்கள் அழியத் தொடங்கின. மணியம்மாள் தன்னிடம் மட்டும்தான் இரும்பு மனமாக, வெறும் முகமாக இருக்கிறாள் என்று நினைத்திருந்த சந்திராவுக்கு மணியம்மாள் வெளியிலும் அப்படித்தான் என்பதை அறிந்த

போது ஓரளவு பயமற்ற தெம்பு நிலை உருவாகியது சந்திராவின் மனத்தில்.

அன்று ஒரு நாள் விக்டோரியா அப்பளக் கம்பெனியில் தன்னைப் பற்றிக் கேவலமாகப் பேசுகிறார்கள் என்று சொன்ன பின்பு மணியம்மாள் தனக்குத் தெரியாமல் வம்பு பேசிய அங்கிருக்கும் பெண்களிடம் தனக்காகச் சண்டை போட்டு விட்டு வந்திருக்கிறாள் என்பதை வெகு நாட்கள் கழித்துத் தெரிந்து கொண்டாள்.



''ஊர் உலகத்திலே எத்தனை யெத்தனை அக்கிரமங்கள் எல்லாம் நடக்கிறது. அதெல்லாம் கண்ணிலே பட்டாலும் காணாதமாதிரி போயிடறது. ஏதோ ஏழை ஒரு தப்பு பண்ணிப்புட்டா, அதை வச்சுண்டு கேலி பேசறது, கிண்டல் செய்யறது. இதெல்லாம் கொஞ்சம் கூட நன்னாயில்லே. அவ அவளுக்கு ஏற்பட்டாத்தான் தெரியும் அதனோட மனக் கஷ்டம்...'' என்று சத்தம் போட்டு விட்டுப் போனதை அங்கு வேலை செய்யும் ஒருத்தி சந்திராவிடம் சொல்லியிருந்தாள். அதிலிருந்து மணியம்மாளின் கடுகடுப்பைக் கூடத் தனக்கொரு காபந்தாகவே எண்ணினாள். அவளுடைய இந்த உணர்ச்சியற்ற வெறும் முகம் வெளி அபவாதங்களிலிருந்து தன்னைக் காத்து நிற்பதாக உணரத் தொடங்கியவுடனேயே தான் வந்து சேர்ந்திருப்பதும் ஒரு காப்பான இடத்தில்தான் என்பதையும் புரிந்து கொண்டாள்.

நாட்கள் மெதுவாக நகர்ந்தன. தேயும் ஒவ்வொரு நாளும் வாழ்க்கையின் புதுப் புது அனுபவங்களைச் சுமந்து வந்த நாட்களாகவே மறைந்தன. மணியம்மாளும் தானும் பேசிக் கொள்ளாத பல நாட்கள் மௌனமாகவே மறைவதைக்கூட அவள் வியப்புடன் உணர்ந்தாள். சில நாட்கள் ஒன்றிரண்டு வார்த்தைகளுடன் கழிந்து போய் விட்டிருக்கின்றன.

''பணம் ஏதாவது சேர்த்துவச்சிருக்கியா?''

சோர்வுடன் படுத்திருந்த சந்திராவின் அருகில் நின்று கொண்டு கேட்டாள் மணியம்மாள்.

எழுந்து உட்கார்ந்து கொண்டவள் மரியாதையுடன் ஈனஸ்வரத்தில், ''அக்கா மாசா மாசம் கொடுக்கிறதோட போன மாசம் அப்பளக் கம்பெனியிலே கடைசி வாரத்திலே வாங்கின வாரக் கூலியுமாச் சேர்ந்து நூத்தி இருபது ரூபாய் இருக்கு'' என்றாள்.

''நூத்தி இருபது இருக்கா? போதும் பார்த்துக்கலாம். எங்கிட்ட ஏதோ கொஞ்சம் இருக்கு, முப்பது, நாற்பது தேறும், எனக்கு வர வரத் தள்ள மாட்டேங்குது. இல்லேன்னா நாள் முழுதும் வேலை செய்வேன், செஞ்சுண்டு இருந்தவள்தான். ரெண்டு கல்யாண வீட்டிலே கூப்பிட்டா முறுக்குச் சுத்துவதற்கு. உடம்பு தள்ளலியே, என்ன செய்ய? போயிருந்தால் இருபத்தைந்து முப்பது கிடைச்சிருக்கும். எத்தனை வந்தாலும்தான் போற மாட்டேங்கறதே. உயிர் வாழ எல்லாமே அவசியமா இருக்கிறபோது எதைக் குறைக்கறது? எதைத் தள்ளறது? அனாவசியமான எதுக்கும் ஆசைப்படறதும் இல்லே. அத்தியாவசியத்துக்குக்கூடப் போற மாட்டேங்கறதே!...''

மணியம்மாளின் வார்த்தைகள் முற்றிலும் புதிய கோணத்திலிருந்து கேட்டன. மனமாறுதல் எதையும் உணர்கிற வாய்ப்பினை இந்த வார்த்தைகள் தோற்றுவிக்கவில்லை. என்றாலும் அவள் மனத்தில் ஒரு மூலையில் சுரந்து சிறு துளிகளாகச் சொட்டிக் கொண்டிருக்கும் அன்பின் சாயலைத் தெரிந்து கொள்ள உதவின.

நாட்கள் செல்லச் செல்ல உடம்பில் கனம் அதிகரிப்பதை உணர்ந்தாள் சந்திரா. புதிய ஜீவனின் ஜனனத்தினால் உண்டாகப் போகிற சூழ்நிலையின் மாறுதலுக்காகத் தவமிருக்கிறவளுக்கு அதைப் பற்றிய மற்ற கீறல் விழுந்த எண்ணங்கள் எதுவும் உண்டாகவில்லை.

'நல்ல முறையிலே குழந்தை பிறந்து அவரும் தண்டனை முடிந்து வெளியே வந்து விட்டால் எல்லாம் காலக் கிரமத்தில் சரியாகி விடும். இத்தனை நாட்கள் நான் பட்ட துயரத் துடிப்புகள், ஏமாற்றங்கள், வாழ்வின் சரிவுகள் எல்லாவற்றையும் எனது பாபகரமான செய்கைகளுக்குத் தண்டனையாக ஏற்றுக் கொண்டு விட்டேன். பிறக்கும் குழந்தை அவரைக் கொண்டு வந்து சேர்த்து, மாமியாரின் முகத்தில் புன்னகையையும் உண்டாக்கினால் அதுவே எனக்கொரு பெரிய மாற்றம். அதுவே என் வாழ்வின் சந்தோஷம். பாட்டியும் வேலை செய்யறா. நானும்தான் செய்யறேன். தினம் விடியு முன் பெரிய படிக்கு ஒரு படி குறையாமல் கௌரி ஹோட்டலுக்குச் சட்டினி அரைத்துத் தரேன். மிளகாய்ப் பொடி இடிக்கக் கொடுக்கறேன். நான் காலமெல்லாம் காத்துக் கொண்டிருப்பதெல்லாம் அந்தக் குழந்தைக்காகத்தான். பரஸ்பரம் அன்பு செலுத்த அமையப் போகிற புதிய பாலம் அதுவாகத்தான் இருக்கப் போகிறது என்று எதிர்பார்க்கிறேன். எனது வெறுமையோடிய வாழ்வை நிரப்பப் போகிறது என்று எதிர்பார்க்கிறேன். ஒருவேளை மணியம்மாளின் பூரணமான அன்பை ஈர்த்துக் கொண்டு எனக்கும் வாங்கித் தருவதாகக் கூட அது இருக்கலாம் என்று எதிர்பார்க்கிறேன். தண்டனை முடிந்து வெளியே அவர் வந்தவுடன் அவரை நல்வழிப்படுத்தக் கூட இது பயன்படலாம் என்று எதிர்பார்க்கிறேன். இவ்வளவு எதிர்பார்ப்புகளோடு நான் என் புதிய ஜீவனுக்குக் காத்துக்கொண்டிருக்கிறேன். நம் வாழ்வில் நடப்பது எதுவுமே திட்டமிட்டு நடப்பதில்லை தான். நாம் எதிர்பார்த்தபடியும் நடப்பதில்லைதான். ஆனால் என்ன நடக்க வேண்டுமென்ற நம் கனவுகளை மூடிக் கொள்ள எங்கே மனம் வருகிறது?' என்று சாவித்திரிக்கு அன்று உட்கார்ந்து ஒரு நீண்ட கடிதம் எழுதினாள். மனத்திலுள்ள எல்லாவற்றையும் நேரில் காணும்போது சொல்ல முடியவில்லை. இப்படி எழுதி மனத்தின் அரிப்பை ஆற்றிக் கொண்டாள் சந்திரா.

கார்காலத்தின் கடைசிப் பகுதி.

நகரில் ஓயாது மழை பெய்துகொண்டிருந்ததால் அன்றாட வாழ்க்கை கொஞ்சம் ஸ்தம்பித்திருந்தது. தெருக்களில் பரபரப்பைக் காணோம். தெருவெங்கிலும் மழை நீரின் ஓட்டம் பெருக்கெடுத்திருந்தது. தூறல், திடீரென பெரு மழையாகக் கொட்டுவது, திடீரென மழை நிற்பது விதரணையில்லாமல் இயற்கை விளையாடிக் கொண்டிருந்தது.

வெந்நீரில் குழந்தையைக் குளிப்பாட்டித் துடைத்து எடுத்துச் சாம்பிராணிப் புகை காட்டிக் கொண்டிருந்தாள் மணியம்மாள்.

குழந்தை அழுது கொண்டிருந்தது.

மணியம்மாளின் வேலையில் சந்திரா தலையிடவில்லை. பெற்றதோடு அவள் கடன் தீர்ந்த மாதிரியாகிவிட்டாள். மணியம்மாள் சந்திராவிடம் குழந்தையைப் பராமரிக்கும் வேலையை விடவில்லை. எல்லாவற்றையும் தானே ஏற்றுக் கொண்டு செய்து வந்தாள். நகரசபை இலவச மருத்துவ மனைக்கு அனுப்ப இஷ்டமில்லாமல் தானே வீட்டில் அவள் பிரசவத்தைத் தைரியமாகப் பார்த்துக் கொண்டு விட்டாள். ''அங்கே போய்ப் பிரசவத்துக்காகப் படுத்துக் கொண்டால் வரவங்க போறவங்க எல்லாம் கேள்வி கேட்பாங்க. பதில் சொல்லிண்டு இருக்க முடியுமா? என்ன பதில் சொல்லுவே? அதனாலேதான் இங்கேயே இருக்கட்டும்னுட்டேன்'' என்று சாவித்திரி கேட்டதற்குப் பதில் கூறிவிட்டாள். சந்திராவுக்கும் அதே பதில்தானே !

மாதவனை உரித்துக் கொண்டு பிறந்திருந்தான் பேரன் !

மணியம்மாள்தான் தாய்க்கும் சேய்க்கும் ஓடிபோடிச் செய்தாள். அறையில் இருக்கும் அவளுக்கு எந்தவிதக் குறையும் வைக்காமல் சிக்கனமாக, கூடவே விதரணையுடன் அவள் கவனித்துக் கொண்டது சந்திராவின் மனத்துக்கு அளவற்ற அமைதியைத் தந்தது. புண்ணியாகவசனத்தன்று அவளே எங்கிருந்தோ ஒரு புரோகிதரை அழைத்து வந்தாள். பசுங்கன்று ஒன்றை வீட்டுக்குள் விட்டு அதற்குப் பழம் அரிசி ஆகியவை வைத்துப் புண்ணியாகவசனத்தை நடத்தி, மாலையில் குழந்தைக்குக் குஞ்சப்பா என்று பெயர் வைத்தாள். எல்லாவற்றையும் மணியம்மாளின் இஷ்டத்துக்கே விட்டு விட்டுத்தான் அவைகளைக் கவனித்துக் கொண்டிருப்பதோடு நிறுத்திக் கொண்டு விட்டாள் சந்திரா. சாவித்திரி ஒருத்திதான் உறவு முறையாகப் புண்ணியாகவசனத்துக்கு வந்திருந்த விருந்தாளி. வேறு யாரையும் மணியம்மாள் கூப்பிடவில்லை.

மணியம்மாளின் இயல்பைக் கொண்டு அவளை எப்படிப்பட்டவள் என்று கண்டு பிடிப்பது கடினமாகவே இருந்தது சாவித்திரிக்கும் சந்திராவுக்கும்.

குழந்தை பிறந்து மாதம் ஒன்றுக்கு மேலாகி நாட்கள் பழைய சூழ்நிலைக்குத் திரும்பிக் கொண்டிருந்தன. அவனுடைய கவனிப்பு முழுவதையும் மணியம்மாளே ஏற்றுக் கொண்டு விட்டதால் சந்திரா முற்றிலும் வேலையில்லாதிருந்தாள். மணியம்மாளுக்கு அதிலே பரம சந்தோஷம். வெறும் சோக ரேகைகளாக ஓடிச் சுருக்கம் கண்டிருந்த அந்த முகம் இப்பொழுது சிரித்துக் கொண்டிருந்தது. ஒரு நாள் பிற்பகல் குழந்தையைக் காலில் போட்டுக் கொண்டு தூங்கச் செய்த வண்ணம், என்றுமில்லாமல் அபூர்வமாக மாதவனுடைய இளமைப் பருவத்தைப் பற்றிப் பேசினாள் மணியம்மாள்.

''அவர் எப்படிச் சிறு வயசிலே இருந்தாரோ அதே போல் மாதவனையும் 'கன்னு பின்னு' வென்று வளர்க்கத் தெரியாமே வளர்த்துட்டார். இவன் மேலே கொள்ளை ஆசையுண்டு. அந்த ஆசைதான் அவன் கெடறதுக்கும் காரணமாயிடுத்து. செல்லம் கொடுத்துக் கொடுத்துக் கெடுத்துட்டார். சீட்டாடற இடம், ஹோட்டல், தாசி விடு என்று எங்கே போனாலும் இழுத்துண்டு போனதிலே என்னடா கத்துண்டான் என்றால் பத்துப் பன்னிரண்டு வயசிலேயே பீடி, சிகரெட் குடிக்க ஆரம்பிச்சான். என்னை அப்பாவைப்போலவே வாய்க்கு வந்தபடியெல்லாம் பேச ஆரம்பிச்சுட்டான். அவர் வேலை

செஞ்சண்டு இருந்த ஹோட்டல்லே அவருக்கும் அங்கே வேலை செஞ்ச ஒருத்திக்கும் ஏதோ தொடர்பு ஏற்பட்டது. வேலையைப் போக்கிண்டு சுத்தினார் கொஞ்ச நாளைக்கு. ஊரிலே யாராவது செத்துப் போனா பொணம் தூக்கறதுக்கு வந்து கூப்பிடுவா, அதிலே கொஞ்சம் வருமானம் வரும். பத்தாவது நாள் சவுண்டி சாப்பிடப் போவார். பிள்ளையைக் கவனிக்க அவருக்கு அவகாசமே யில்லாமே போயிடுத்து. இவன் ஊர் சுத்த ஆரம்பிச்சுட்டான். பிறகு அவனோட நடத்தை எதையுமே தடை செய்ய முடியலே. வேத பாடசாலையிலே சேர்த்துடுங்கோன்னு தாம்பரம் சாஸ்திரிகள் சொன்னார். அப்போ நான் அதைக் கேவலமா நினைச்சு முடியாதுன்னுட்டேன். என்னமோ இவன் பெரிய உத்தியோகம் செஞ்சு சம்பாதிச்சுக் கொழிக்கப் போறான்னு. என்னோட எண்ணத்திலே மண்ணைப் போட்டுட்டான். அப்பாவுக்கு முன்னாலேயே என்னை அடிக்க ஆரம்பிச்சுட்டான். இதைப் பார்த்தியா? பின் கழுத்திலே காயத்தை அவன் இரும்புச் சட்டுவத்தாலே அடிச்சது. ரெண்டு அங்குல நீளத்துக்குத் தழும்பை.''

மணியம்மாள் கழுத்தைத் திருப்பி வடுவைக் காட்டினாள்.

''அவர் செத்தப்புறம் இவன் தறுதலையாக ஆகிவிட்டான்'' என்று நிறுத்தினாள்....

மடியில் படுத்திருந்த குஞ்சப்பா இலேசாக அழுதான்.

அவனை வருடிக் கொண்டே குனிந்து அவனைப் பார்த்தாள். பிறகு நிதானமாகக் கரகரப்புடன் குழந்தையிடம் பேசினாள்.

''நீயாவது அவனைத் திருத்து குஞ்சப்பா! உன்னைப் பார்த்தாவது அவன் இனிமேல் ஒழுங்கா இருக்கட்டும். உன்னைப் பார்த்த பின்பு அவன் தன் தப்பு தண்டாவையெல்லாம் விட்டுட்டு நல்லவனா மாறிவிட்டானானால் உனக்கொரு நல்ல அப்பா கிடைப்பான், எனக்கு ஒரு நல்ல மகன் கிடைப்பான், உன் அம்மாவுக்கு ஒரு நல்ல புருஷன் கிடைப்பான்....''

''நானும் அதைத்தான்டா எதிர்பார்க்கிறேன். அவர் சிறையிலிருந்து விடுதலையாகி வரும் போது நல்ல கணவனை நானும், நல்ல மகனை மணியம்மாளும், நல்ல தகப்பனை நீயும் ஆக மூன்று நிலைகளில் நம் ஆவலை ஒன்றுகூட்டி வைத்துக் கொண்டு எதிர்பார்க்கிறோம்.'' இப்படி எண்ணினாள் சந்திரா.

மணியம்மாள் உள்ளே சுழன்று கொண்டிருந்த வெம்மை நினைவுகளை வெளியே விரட்டிக் கொண்டிருந்தாள்.

சந்திரா தனது கனவுகளுக்கு ஒரு புது உருவம் கொடுத்துக் கொண்டு அதன் மேல் சில புதிய அபிலாஷைகளைப் பதிய வைத்த வண்ணம், நினைவையே பிரத்தியட்சமாக உருமாற்றி அதிலே முத்துக் குளிக்கப் பிரயத்தனப் பட்டுக் கொண்டிருந்தாள்.

நினைவிலும் நினைவைச்சார்ந்த ஏக்கத்திலுமாக நாட்கள் கலந்து சென்று கொண்டிருந்தன. தண்டனைக் காலம் முடிந்து விடுதலையாகி வெளியே வந்திருந்தால் இத்தனை நாட்கள் வந்திருக்க வேண்டும். கேள்விப்பட்ட நாட்களுக்குமேல் மாதங்களும் ஓடிவிட்டன. ஓர் ஆண்டு முடிந்திருக்க வேண்டும். அதற்கு மேல்கூட இரண்டு மூன்று மாதங்கள் ஆகியிருந்தன.

குஞ்சப்பா இப்பொழுது முகம் பார்க்கத் தொடங்கி விட்டான். குஞ்சப்பா அதிகச் சிவப்பில்லை. சந்திராவைப் போல் இலேசான கறுப்புத்தான். தலைநிறைய மயிர் இருந்தது. கையும் காலும் புஷ்டியுடன் கொழு கொழுவென இருந்தன. முகத்திலே ஒரு குறுகுறுப்புத் தெரியவில்லை. மாறாக மந்தமாகத் தெரிந்தது. போட்டால் போட்ட இடத்தில் அப்படியே கிடந்தான்.

உடம்பு பழைய நிலைக்கு வந்தவுடன் சந்திரா விக்டோரியா அப்பளக் கம்பெனி வேலைக்குப் போகத் தொடங்கி விட்டாள். சில நாட்களுக்குக் குழந்தையை மணியம்மாள் பார்த்துக் கொண்டாள். மற்ற நாட்களில் அவள் குழந்தையையும் எடுத்துக் கொண்டே வேலைக்குப் போய் விடுவாள்.

தண்டனைக்காலம் முடிந்து மாதவன் வராத ஒவ்வொரு நாளும் நரகமாகவே இருந்தது சந்திராவுக்கு. நாட்கள் செல்லச் செல்ல மணியம்மாளும் கொஞ்சம் கொஞ்சமாக நம்பிக்கை இழக்கத் தொடங்கினாள்.

''அவன் என்னிக்குமே, எதையுமே சரியாகச் செய்தவனில்லை, பிறருக்குத் தொல்லை கொடுக்காமல், பிறர் அமைதியைப் பாழடிக்காமல் அவனாலே வாழவே முடியாது. அவன் அப்படியே மனசை வளர்த்துக் கொண்டுவிட்டான்'' என்ற மணியம்மாள் பிறகு மிகுந்த மன வருத்தத்தோடு கொஞ்சம் அமைதி இழந்தவளாகச் சந்திராவிடம் மனம் விட்டுப் பேசினாள்.

''உன்னோட தலையெழுத்து எப்படியிருக்கோ தெரியவில்லை. ஆனா ஒண்ணு மட்டும் சொல்றேன். கவனமாக் கேட்டுக்கோ. இன்னிக்கு இல்லாவிட்டாலும் இன்னொரு நாளைக்கு அவன் திரும்பி இங்கே வந்துதான் தீரணும். நீ இங்கே இருக்கிறது அவனுக்குத் தெரிந்திருக்க நியாயமில்லே. நீ இங்கே இருக்கிறது தெரிஞ்சு இருந்தா ஒரு வேளை விடுதலையானவுடனே நேரா வந்திருப்பானோ என்னவோ! அப்படி ஒரு நாள் வந்தால் அப்பொழுது உன்னுடைய சாமர்த்தியம் எதுவும் அவனிடம் செல்லாது. அவனோட குணம் எனக்குத் தெரியும். இரக்கம், அன்பு, பாசம் எதுவும் இல்லாதவன் அவன். மனம் திருந்தி உன்னுடைய நிலைமைக்கு இரங்கி உன்னை வைத்து ஆதரிப்பதாகக் கூறினால் குஞ்சப்பாவை அவனிடம் நெருங்க விடாதே. இவனை அவன் சுலபமாகக் கெடுத்து விடுவான். அவனோடு குஞ்சப்பாவை இழைய விட்டால் என்னோட நிலைதான் உனக்கும் என்பதை இப்பொழுதே சொல்லி வைக்கிறேன். கூடுமான வரையிலே குஞ்சப்பாவை உன் பையனாகவே வளர்க்கப் பார்.....''

மணியம்மாள் கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

அன்று மணியம்மாளுக்கு உடம்பு சரியில்லை. குஞ்சப்பாவைத் தான் வாங்கிக் கொண்டு சந்திராவை விக்டோரியா அப்பளக் கம்பெனிக்குப் போகும்படி கூறினாள்.

குழந்தையை மணியம்மாள் மடியில் கிடத்திவிட்டு வெளியே வந்த போது,

வாசலில் 'மாதவன்' நிற்பதைக் கண்டு திடுக்கிட்டுப் போய் விட்டாள். சிரிப்பும், அழுகையும், வெட்கமுமாக அவளைக் கொஞ்ச நேரம் வரை நிலைதடுமாறச் செய்து விட்டது. ரொம்ப நாட்களுக்குப்பின் பார்ப்பதால் உண்டான துடிப்பைவிட, தாய்மையைத் தாண்டி வந்து சந்திக்கிற குழப்பம்தான் அதிகம் இருந்தது.

முன்பு பார்த்ததைவிட இன்னும் சற்று அதிகமாகவே பருத்திருந்தான். முகத்தில் இன்னும் கொஞ்சம் அதிகமான முரட்டுக் களை ஏறியிருந்தது. உடம்பில் அழுக்கடைந்த நான்கு முழ வேஷ்டியும், முண்டா பனியனும் அதன் மேல் சிவப்புத் துண்டும்தான் கிடந்தன. முழங் கைக்குமேலே தோள் பட்டைக்குக் கீழ் சதையில் கறுப்புக் கோடுகள் பட்டை விட்டிருந்தன. காலெல்லாம் ஒரே புழுதி. தலையில் அதிக மயிரில்லை. இருப்பதும் கலைந்து கிடந்தது. கண்களில் ஒரு கொடூரமான பார்வை! அதோடு சிவந்து வேறு தோன்றியது.

''நீ இங்கேயா இருக்கே? நீ எப்படி இங்கே வந்தே?'' சந்திராவைப் பார்த்தவுடன் அவன் கேட்ட முதல் கேள்வி கனிவின்றி வந்தது.

சந்திரா திடீரென மாதவனைப் பார்த்த அதிர்ச்சியில் பேச முடியாமல் நின்றவள் பரபரப்புடன் 'அவர்.. அவர்..வந்தாச்சு. அவர் வந்து விட்டார்...' என்று கத்திக் கொண்டே உள்ளே ஓடி வந்தாள்.

மாதவன் தாயார் அருகில் வந்து நின்றாள்.

மாதவன் வந்து நிற்பதையும் அவனது கண்ணோட்டத்தையும் உட்கார்ந்தவண்ணம் பார்த்த மணியம்மாளுக்கு அவன் செய்கைகள் ஏதும் நம்பிக்கை தருவதாக இல்லை.

முதற் பார்வையிலும், கேள்வியிலும் சந்திராவும் உற்சாகம் குன்றிக் காணப்பட்டாள். பயத்துடன் ஓர் ஓரமாக ஒதுங்கி நின்று கொண்டிருந்தாள்.

குழந்தையுடன் எழுந்த மணியம்மாள் அதைச் சந்திராவின் கையில் கொடுத்தாள்.

''அவன் கையிலே கொடு'' என்று பணித்து விட்டு நின்றாள் மணியம்மாள்.

குழந்தையை அவன் முன் நீட்டிக் கொண்டே அவனிடம் வந்தாள் சந்திரா.

''இதெல்லாம் என்ன?''

சினத்துடன் கத்தினான் மாதவன்.

''இவளைத் தெரியற தோல்லியோ உனக்கு?



அப்புறம் என்ன கேள்வி? நீ விதைத்த விதை செடியா வந்திருக்கு.''

அருகில் வந்து நின்று சந்திராவின் தலைமயிரை ஆக்ரோஷத்துடன் பற்றி நிமிர்த்தினான்.

அவள் கண்கள் அழுதன!

''குழந்தை உங்களுடையது. வாங்கிக் கொள்ளுங்கள்!''

மாதவன் சிரித்தான்.

''குழந்தை என்னுடையதா? யார்கிட்டே கதை அளக்கிறே? நான் உன்னைப் பார்த்ததே இல்லை.....''

சந்திரா குமுறலுடன் அழுதாள்.

''என்னை நீங்கள் பார்த்ததே இல்லையா? சத்தியமாகச் சொல்லுங்கள்....''

'' அவனுக்கென்ன ஆயிரம் சத்தியம் பண்ணுவான்'' என்று மணியம்மாள் முணுமுணுத்தாள்.

''என்னம்மா இதெல்லாம்?'' தாயாரைப் பார்த்துக் கத்தினான்.

''என்னிடம் கேளுங்கள். நம்ம ரெண்டு பேரோட விஷயம் நமக்குத்தானே தெரியும்? உங்கஅம்மாவிடம் கேட்டா என்னதெரியும்?''

''உன்னை யார் இங்கே வரச் சொன்னது?''

''நானாகத்தான் வந்தேன். நீங்கள் இப்படிப் போவீங்கன்னு தெரிஞ்சிருந்தா.....''

'' தெரிஞ்சு இருந்தால் என்ன செஞ்சு இருப்பே ?''

''தயவுசெய்து மனம் புண்படும்படியாப் பேசாதீங்க. காலம் காலமா உங்களோட வருகைக்காகத் தவமிருக்கேன் நான். ஆசையைச் சுமந்து கொண்டு கொஞ்ச நாட்கள்; உங்களாலே ஏற்பட்டதைச் சுமந்துண்டு கொஞ்ச நாட்கள், இப்போ இவளை வச்சுண்டு காத்துக் கொண்டிருக்கிறேன். வந்ததும் வராததுமா நீங்க இப்படி என்னை ஏமாத்த நினைக்கிறது அநியாயம்.''

''அம்மா! இவள் ஏதோ கதை பேசறா. இவ சொல்றது அத்தனையும் பொய். இவளை நான் பார்த்திருக்கிறேன். ஏதோ ஒரு டியூடோரியல் காலேஜிலே. அவ்வளவுதான்; என்னாலே ஒரு குழந்தைக்குத் தாயாகிவிட்டதாக இவள் கூறுவதெல்லாம் சுத்தப் பொய்.''

''ஐயோ, கடவுளே.....! இல்லையம்மா ! இவர் சொல்வதை நம்பாதீர்கள். ஏனோ தெரியவில்லை. இவர் இப்படிப் பேசுகிறார். இது இவர் குழந்தைதான். என் வார்த்தையை நம்புங்கள்.''

மணியம்மாளிடம் கெஞ்சினாள். அவள் மௌனமாக அமர்ந்திருந்தாள். அவள் யார் வார்த்தைகளை நம்புகிறாள், யார் வார்த்தைகளை நம்பவில்லை என்பதை அவளது மௌனத்திலிருந்து நிதானிக்க முடியவில்லை சந்திராவினால்.

''இது என்னுடையது என்பதை நான் எப்படி நம்பறது? நான் உன்னைப் பார்த்ததேயில்லை. இது என்னுடையதும் இல்லை..... நீ அம்மாவையும் ஏமாற்றி என்னையும் ஏமாற்றப் பார்க்கிறாய்........''

சந்திரா வாய்விட்டு அழுதாள். தன்னுடைய பிற்காலம் ஒரு முரடன் முன்னால் ஊசலாடிக் கொண்டிருப்பதாக எண்ணினாள். அந்த அறைகூவலுக்கு முன்னால் தான் ரொம்பவும் பலவீனப்பட்டு நிற்பதையும் உணர்ந்தாள். மணியம்மாளின் நிலைமையை இப்பொழுது கணிப்பது கடினமாகத் தோன்றியது. அவள் இதில் அதிகம் தலையிடாமல் வெறும் பார்வையாளராக ஒதுங்கி அமர்ந்திருந்த மாதிரி தோன்றினாள்.

''தயவுசெய்து என்னை விரட்டி விடாதீர்கள். எனக்கு வேறு புகலிடமே கிடையாது. இப்படிப் பொய் சொல்லியோ, தகாத செயலுக்கு ஓர் அபாண்டத்தை உங்கள் மேல் பழி போட்டோ இங்கே புகலிடம் தேட வேண்டிய நிர்ப்பந்தமில்லை; அவசியமும் இல்லை. செய்வதையெல்லாம் செய்துவிட்டு இன்று என்னைத் தெரியவே தெரியாது என்று சாதிக்கிறீர்களே! இது உங்களுக்கு நியாயமாகப் படுகிறதா? கடற்கரையிலும், கடற்கரை மடகு மறைவிலும், உங்கள் ஆட்டோவிலும் இரவு வேளைகளில் நாம் தனித்து இருந்ததில்லை ? என்னை நீங்கள் அனுபவித்ததில்லை? தெரு முனைவரை என்னைக் கொண்டு வந்து விடுவீர்களே, நினைவில்லை ? ஓட்டிக் கொண்டிருக்கிற வாடகை ஆட்டோவைக் கொடுத்து விட்டுப் புதிதாக ஒன்று வாங்கப் போவதாகச் சொன்னீர்களே! உங்கள் இஷ்டப்படி நான் இருந்தபின் ஒரு நாள் நமது கல்யாணத்தைப் பற்றிக் கேட்டவுடன் 'ஆகட்டும், விரைவிலே கோயிலில் மாலை மாற்றிக் கொள்ளலாம்'னு சொன்னீர்களே, நினைவில்லையா?''

மாதவன் பயங்கரமாகச் சிரித்தான்.

'' செய்வதை யெல்லாம் செய்துவிட்டு ஒன்றுமே நடக்காதவர் போல் சிரிக்கிறார், பாருங்கள் அம்மா ! நீங்களாவது சொல்லுங்களேன்...'' மணியம்மாளைப் பார்த்து அழுது கெஞ்சினாள்.

மணியம்மாள் அசைந்து கொடுக்கவில்லை.

''இத்தனை நாட்கள் எங்கேயோ இருட்டுக் கொட்டடியிலே கிடந்துட்டு வீட்டுக்கு வந்தா இங்கே இப்படியொரு வம்பு'' என்று சொல்லிக் கொண்டே தாயாரைக் கோபத்துடன் நோக்கிவிட்டு வெளியேற இருந்தவனை மணியம்மாள், ''டேய், அயோக்கியா, நில்லுடா!'' என்று அழைத்து நிறுத்தினாள். அமர்ந்திருந்த இடத்தைவிட்டு எழுந்து வந்த மணியம்மாள் அவன் முன் வந்து நின்றாள்.

''நீ இப்போ எங்கே போறே ?''

''எங்கேயோ போறேன். உனக்கென்ன ?''

''இவளுக்கு வழியைச் சொல்லி விட்டுப் போ ! இவளை நீ ஏத்துக்கப் போறியா இல்லையா? நேரிடையாக் கேட்கிறேன். பதில் சொல்லு.''

''இவளை எனக்குத் தெரியாது. இவள் சொல்றது அவ்வளவும் பொய்.''

''உனக்கு இவளைத் தெரியும். இங்கே யாரையும் பைத்தியமாக்கவேண்டாம். அவள் இங்கிருந்து எங்கேயும் போக மாட்டா.... அவளைப் போகச் சொல்லவும் முடியாது உன்னாலே. நீ யாரை அமைதியா வாழ விட்டே? சின்ன வயசிலிருந்தே? நீ எனக்கொரு நரகமாச்சே. அதே நரகத்தை இப்போ இவளும் அனுபவிக்க வைக்கப் பார்க்கிறே. அதுக்கு நான் இடந்தரமாட்டேன். நீ இவளை ஏத்துக்கப் போறயா இல்லையா ? இவளை ஏத்துண்டு குடியும் குடித்தனமுமா நீ இருக்கப் போறயா இல்

லையா ? உன்னை என்னோட வாழ்க்கையிலே கடைசித் தரமா கேட்கிறேன்.''

''நான் இவளை ஏத்துக்க முடியாது. நான் இவளைப் பார்த்ததேயில்லை. என்றால் இவ னுக்குக் குழந்தை பிறந்திருக்கிறது என்பதும் நம்ப முடியாதது.''

''நான் நம்பறேன். இவனுக்குப் பிறந்த குழந்தை உன்னாலே பிறந்ததுதான். இந்த அப்பாவிப் பெண்ணை நீ கெடுத்திருக்கே. கெடுக்கக் கூடியவன்தான் நீ. நான் சொல் றேன். இது உன்னோட குழந்தைதான்னு !'' என்றவள் வேகமாக உள்ளே சென்று சமை யல் அறையில் எங்கோ மூலையில் அழுக்கேறிக் கிடந்த தகரப் பெட்டியிலிருந்து ஒரு மணி பர்ஸை எடுத்து வந்தாள். அது ஒரு தபால் கார்டு அளவுக்குப் பெரிதாக இருந்தது. அதற் குள்ளிருந்த போட்டோ ஒன்றை வெளியே எடுத்தாள். அதோடு ஒரு பெரிய கடிதமும் இருந்தது. அது மாதவனுக்குச் சந்திரா தன் நிலையை விளக்கி எழுதிய முதல் கடிதம். போட்டோவை அவன் முன் நீட்டிவிட்டு, ''உனக்குச் சந்திராவைத் தெரியாது. இல் லையா ? அப்படியானால் இந்தப் போட்டோ உன் பர்ஸுக்குள்ளே எப்படி வந்தது? இந்தக் கடிதாசு உனக்கு வந்ததுதானே ?''

சந்திரா வியப்பு மேலிடப் புதுத் தெம்பு பெற்றவளாக மலர்ந்த கண்களோடு மணியம் மாளைப் பார்த்தாள்.

மாதவன் நழுவப் பார்த்தான்.

''இவனுக்குப் பதில் சொல்லி விட்டுப் போ.......!''

''என்னோட பதிலை நான் முன்னாடியே சொல்லியாச்சு.''

''உன்னோட முடிவான பதில் அதுதானா?''

''ஆமாம்.''

''வேண்டாம். எனக்குத் துரோகம் செஞ் சுட்டுப் போகாதீங்க!'' — சந்திரா அழுதாள்.

மணியம்மாள் சந்திராவைப் பரிதாபகர மாகப் பார்த்தாள். பிறகு திடம் பெற்றவ ளாக உள்ளத்து ஆசாபங்கத்தினின்று சிலிர்த் துக் கொண்டு நிமிர்ந்து நின்றாள்.

''சரி, உன் முடிவு அதுதானா நீ இனிமேல் என்னோட மகன் இல்லை. போ, வெளியே. இவளை உன்னுடையவளாக ஏத்துக் கொண்டு இருக்கிறதா இருந்தா இங்கே இருக்கலாம். இல்லை என்றால் நீ இங்கே நுழையவேகூடாது. எனக்கு மகன் இல்லே. 'மகள்' இருக்கா. ஒரு பேரன் இருக்கான். அவர்களைப் பாது காக்க எனக்குத் தெம்பு இருக்கு. அருமை யான பேரனை உன்னோட வாசனையே படா மல் நல்லவனா வளர்ப்பேன். நீ போ இங் கிருந்து. உனக்கு இனி இங்கே வேலையில்லை.''

மாதவன் மெதுவாகத் திரும்பி நடந்தான். அவன் போவதையே பார்த்துக் கொண்டு குழந்தையுடன் நின்ற சந்திராவின் தோள் பட்டையை முதன் முறையாக அன்புடன் தொட்டுத் திருப்பினாள் மணியம்மாள்.

''இவனை இனிமேல் திருத்தவே முடியாது. உன்னோட பிற்காலமும் குஞ்சப்பாவோட பிற்காலமும் நன்னா இருக்கணும்னா நெறி தவறிப் போய்க் கொண்டிருக்கிற இவனை இப்பவே ஒதுக்கி வைச்சுட்டுத் தனியா இருக்க பழக்கம் பண்ணிக்கோ. அதுதான் நல்லது உனக்கு. எப்போ இவன் உன்னைப் பார்த்ததே இல்லைன்னு சாதிக்கிறானோ இவனா உன் னுடைய பிற்காலத்துக்குக் கைகொடுக்கப் போகிறான்? அப்படி எதிர்பார்த்து ஏமாந்து போய் விடாதே. நான் இருக்கும் வரையிலே உனக்கொரு அரணாக நான் இருப்பேன். அவன் உன்னை உதறிவிட்டுப் போகிற மாதிரி நான் செய்ய மாட்டேன். அதோ, அந்த வேங்கடாசலபதி மேலே ஆணையா சொல் றேன். நீ என்னுடைய மகள். இவன் என் னோட பேரன்'' என்று வாஞ்சையுடன் சந்திராவை அணைத்துக் கொண்டாள்.

சாவித்திரி அங்கு வந்து மௌனமாக நின்று கொண்டிருந்தாள்.

''இதுக்கு முன்னே இருந்த என்னோட மன நிலை வேற இப்போ இருக்கிற மாறுதல் வேறே. உனக்குத்தான் சொல்றேன் சாவித்திரி. என் மேலே வித்தியாசமா நினைக்காதே. திறந்த மனசோட பேசறேன். உன்னை நான் இங்கே இரு என்று சொல்லவில்லை. அப்படிச் சொல் லாததற்கு எனக்கு இருந்த எத்தனையோ வியாகூலங்கள்தான் காரணம். மனசே ரொம்ப குழப்பமடைந்து கிடந்தது. இப்போ தெளிவா சில விஷயங்கள் புரிகின்றன. இனி நீயும் இவளோட இங்கேயே இருக்கலாம். ஒருத்தருக்கு ஒருத்தர் சகாயமாக இருந்து வாழ முடியும் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கு'' என்று கூறிய மணியம்மாள் சாவித்திரியின் முகத்தில் சம்மதத்தின் சாயல் தென்படுகிறதா என எதிர்பார்த்த வண்ணம் நின்றாள்

குஞ்சப்பா சந்திராவின் தோளில் உறங்கிக் கொண்டிருந்தான். அவனுக்குத் துயரங்கள் இல்லை. அவனால் நன்கு உறங்க முடியும். ஆனால் சந்திராவின் துயரங்களுக்கு...'?

அன்பு ஆழம் பெறும் இடத்தில்தான், வாழ்க்கையின் பரிணாமம். ஆனால் ஆழ மில்லாத இடத்திலோ வாழ்வின் பரிணாமம் என்பது நிரந்தரமாகவே உறங்கிவிடுகிறது.

## இடைஞ்சல் இல்லை

இண்டர்வியூவுக்கு வந்த ஒருவரிடம் இப்படி ஒரு கேள்வி கேட்கப்பட்டது.

''பூமியிலிருந்து சூரியன் எவ்வளவு தூரத்தில் இருக்கிறது ?''

வந்தவர் சிறிது சிந்தித்தார்.

''சூரியன் எத்தனை தொலைவில் இருக்கிறதென்பதைச் சரியாகச் சொல்ல முடியாது. ஆனால் ஒன்றை மட்டும் உறுதியாக என்னால் சொல்ல முடியும். எனக்கு இந்த வேலையை நீங்கள் கொடுத்தால்.... நான் வேலை செய்வ தற்கு இடைஞ்சலாக இருக்கிற தூரத்தில் சூரியன் உள்ளதாக நான் கருதவில்லை.''



அவருக்கு அந்த வேலை கிடைத்து விட்டது. — இரணியல் 'கலை'

# மனிதாபிமானம் எங்கே?




சென்னையிலிருந்து நாகப்பட்டினம் செல்லும் தமிழகப் பேரூர்தியில் பயணம் செய்து கொண்டிருந்தோம். சிதம்பரம் தாண்டிக் கொள்ளிடம் வரும் பொழுது இருட்டிவிட்டது. பேரூர்தியின் முகப்பு விளக்கு எரியாததால், வண்டி தன் பயணத்தைத் தொடர முடியாமல் நின்றுவிட்டது. டிரைவரோடு ஒருசில பயணிகளும் முகப்பு விளக்கைச் சரி செய்யும் பணியில் ஈடுபட்டார்கள். பலன் கிட்டவில்லை. சென்னையிலிருந்து சீயாழி நோக்கி வந்து கொண்டிருந்த கார் சொந்தக்காரர் தம் வண்டியை நிறுத்தி விசாரித்தார். விவரம் அறிந்து சீயாழி வரை தம் காரைத் தொடர்ந்து வருமாறும் தாம் முன்னோடியாகச் செல்வதாகவும் கூறினார். அவர் காரைப் பின்தொடர்ந்து எங்கள் பஸ் சீயாழியை அடைந்தது. அப்பொழுது மணி சுமார் 8-30.

மீண்டும் ரிப்பேர் செய்ய முயன்று வெற்றி காணவில்லை. சென்னையிலிருந்து இரண்டு மணி சுமாருக்குப் புறப்படும் வண்டி 8-45 மணிக்கு வரும் என்றும், அதைத் தொடர்ந்து போய்விடலாம் என்றும் எங்கள் பஸ் டிரைவர் ஆறுதல் கூறினார். அவ்வண்டியை நிறுத்தி விவரம் கூறி அவ்வண்டியோடு புறப்பட்டோம். அரை மைல்கூடப் போயிருக்கமாட்டோம். நல்ல இருட்டு வேறு. எங்கள் பஸ்ஸுக்கு வழிகாட்டியாகச் சென்று கொண்டிருந்த தமிழகப் போக்குவரத்து பஸ் பறந்து விட்டது — வழிகாட்டிச் செல்வதை மறந்து தன்போக்கில் சென்று விட்டது. எங்கள் பஸ் டிரைவர் முன்னேறவும் முடியாமல், பின்னுக்கு வரவும் முடியாமல் சிரமப்பட்டார். அப்பொழுது அவ்வழியே வந்த காரை நிறுத்தி எங்களுக்கு உதவுமாறு கோரினோம்.

சீயாழி வரை உதவிய கார்க்காரரைப் போலவே இவரும் உதவினார். இத்தகைய மனிதாபிமானத்தைப் பொதுத் துறையில் எதிர்பார்த்தால் ஏமாற்றம்தானா?

விஷ்ணுபுரம்
3—6—68 அக்ஷயம்

## நாலணா எதற்கு?

"ரெட்டியார் வருகிறார்" என்ற கட்டுரையில், "வேண்டுமானால் ஒரு மாதத்தில் இருபத்தைந்து பைசாவுக்குரிய கார்டு கவர் வாங்கிக் கொள்ளலாம்" என அவர் கூறியதாகக் காணப்படுகிறது. தபால் இலாகாவில் கட்டணமில்லாமல் எழுதிப் போடக்கூடிய சலுகை டைரக்டர் ஜெனரலுக்குக்கூட இல்லை. அவர் குறிப்பிட்ட இருபத்தைந்து பைசா அவருக்குப் பணமாகத் தரப்படுவதாகும். அது அவர் ஆபீஸ் உபயோகத்துக்காக வாங்கும் பென்சில், பேப்பர், இங்கி ஆகியவைகளின் செலவைச் சரிக்கட்டுவதற்காகக் கொடுக்கப்படுவது. காலணிகள் ஒன்பது மாதங்களுக்கு ஒரு முறை தரப்படுகின்றன.

பாபநாசம்
6—7—68 அன்னம்

## வடபழனியில் வால்மீகி

வடபழனியில் வால்மீகி விமர்சனம் படித்தேன். பால்காரனாக நடித்த நடிகரின் பெயர் விஜயராகவனல்ல, வீரராகவன். ரசிகர்களிடையே நிறையப் பாராட்டு பெற்ற நகைச்சுவை நடிகரை "ஒருவர்" என்று குறிப்பிட்டிருக்கிறீர்கள். எங்களுக்குக் கொடுக்கப்பட்ட பிரசுரத்தில் "மணக்கால் மணி" என்று அவர் பெயர் இருக்கிறது.

சென்னை-23 எஸ். எஸ். ஜம்புநாதன்
19-7-68

[மணக்கால் மணி பற்றி மறக்காமல் எழுதிய அன்பர் ஜம்புநாதனுக்கு நன்றி.]

## கதர் வாங்கியதற்கு அபராதம்?

சென்ற ஆண்டு தீபாவளி சமயத்தில் எங்கள் பள்ளியின் உதவி ஆசிரியர் ஒருவர் குமாரபாளையம் காதி விற்பனை நிலையத்தில் ரூ. 37-34க்குக் கதர் துணி எடுத்திருந்தார். இவர் எடுத்த தொகைக்கு அவருடைய சம்பளத்திலிருந்து ஆறு தவணைகளில் கட்ட வேண்டும். ஆனால் சங்ககிரி ஊராட்சி ஒன்றியத்திலிருந்து ரூ. 77-05க்கு பிடித்தம் செய்ய உத்தரவு வந்தது. அதிகம் ரூ. 39-71 கட்ட வேண்டியது ஆகிவிட்டது. காரணம் காதி இலாகா மானேஜர் தவறுதலாக அதிகம் பில் செய்து ஊராட்சி ஒன்றியத்திலிருந்து முன்னதாகவே பணம் பெற்றுக் கொண்டு விட்டார்.

இது விவரம் குறித்துச் சங்ககிரி ஊராட்சி ஒன்றியம், குமாரபாளையம் காதி விற்பனை நிலையம், நாமக்கல், சென்னை மேலிட அதிகாரிகள் ஆகிய இவர்கள் எல்லோருக்கும் எழுதி அனுப்பியும் இதுவரையிலும் எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை. ஆசிரியருக்கு நஷ்டம் 39-71 ரூபாய்.

தேவூர்
15—7—68 ஏ. சுப்பிரமணியம்

---

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam

Registered No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

